## விரைவில் வெளிவருகிறது!

வடுவூராரின் கற்பனைச் சித்திரம்



மாடர்ன் தியேட்டர்ஸ்

# திகம்பர சாமியார்

டைரக்ஷன்: டி. ஆர். சுந்தரம்



# என்ன நடக்கிறது ?

**அவர்கள் எல்லோரையும் பாதிக்கும்**
**முக்கியமான விஷயம் — ஏன் உங்களையும் தான்**

அவர்கள் 'பாலுட்ரீன்' உட்கொண்டு மலேரியா ஜுரத்தைத் தடுத்துக் கொள்ளவும், குணப்படுத்திக்கொள்ளவும் நல்ல, எளிய முறையைக் கற்றுக்கொள்ளுகிறார்கள். மலேரியா பீடிக்கும் காலத்தில் ஒவ்வொரு வாரமும் குறிப்பிட்ட நாளில் ஒரு மாத்திரை வீதம் சாப்பிட்டுவந்தால் மலேரியாவின் பாதிப்பிலிருந்தும் பாதுகாத்துக்கொள்ளலாம்.

சிறு குழந்தைகளுக்கு கால் அல்லது அரை மாத்திரை வீதம் பெரியோர்களுக்குக் கொடுப்பதுபோல் தவறாமல் கொடுக்கவும். மலேரியா பீடிக்கும் காலத்தில் உங்களையும் உங்கள் குடும்பத்தாரையும் மலேரியா ஜுரம் வராமல் பாதுகாத்துக்கொள்ள 'பாலுட்ரீன்' மாத்திரைகள் எப்பொழுதும் கைவசமிருக்க வேண்டும் என்பது முக்கியம். அதைப்போலவே முக்கியமானது, 'பாலுட்ரீன்' மலேரியாவின் பாதிப்பிலிருந்தும் விலக்குகிறது என்பதுதான்.



முன்புறம்



பின்புறம்

## 'பாலுட்ரீன்'

ட்ரேட் மார்க்

மலேரியாவை ஒழிக்கிறது

ஒரு வாரத்திற்கு வேண்டிய ஒரு மாத்திரை விலை ஒரு அணா



ஒரு காகித உறை விலை 8 அணா



இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்

# டன்லப்

## ஆர்.எஸ்.எஸ் ட்ரக் & பஸ் டயர்கள்



## மைல்கள் முன்னேற்றம்!

அத்தாட்சி வேண்டுமா? அநேக மோட்டார் சொந்தக்காரர்களும் மற்றும் டயர் உபயோகிப்பவர் பலரும் வழங்கியுள்ள நற்சாட்சிப் பத்திரங்களை இங்கே பரிசோதித்துப் பாருங்கள். அவை இப்போது ஒரு தனிப் பிரசுரத்தில் வெளியிடப்பட்டுள்ளன. எல்லா டன்லப் ஆபீஸ்களிலும் டயர் வியாபாரிகளிடமும் கிடைக்கும்.




**பெரியவை-கனமானவை-பத்திரமானவை.**

**லேடக்ஸ் இணைப்புள்ளவை.**



ஜெயராஜன் - ராஜலக்ஷ்மி

○●○

கோயமுத்தூர் ஸ்ரீ கே. எஸ். எம். குருசாமி நாடார் குமாரத்தி சௌ. ராஜலக்ஷ்மிக்கும் விருதுநகர் வியாபாரி ஸ்ரீ எம். ஏ. ஏ. ரத்னசாமி நாடார் குமாரர் சிரஞ்சீவி ஜெயராஜனுக்கும் 25 - 8 - 50 வெள்ளிக்கிழமை கோயமுத்தூர், ஆர். எஸ். புரம், திருவேங்கிடசாமி ரோடு, கெ. 9/36 இல்லத்தில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது. திருமண வைபவத்தில் ஸ்ரீ சி. எஸ். ரத்னசபாபதி முதலியார், ஸ்ரீ வி. எஸ். செங்கோடய்யா, ஸ்ரீ வி. சி. சுப்பையா கௌண்டர், ஸ்ரீ எம். கே. தியாகராஜபாகவதர், ஸ்ரீ ஸ்ரீராமுலு நாயுடு (பக்ஷிராஜா ஸ்டுடியோ) ஸ்ரீ ஜே. எஸ். கண்ணப்பர், ஸ்ரீ ஏ. ஷண்முகம், ஸ்ரீ பி. ஏ. ராஜு செட்டியார், ஸ்ரீ ஜி. கிருஷ்ணன், ஸ்ரீ சுப்ரி, ஸ்ரீ கே. என். பழனிசாமி கௌண்டர், மற்றும் பல பிரமுகர்களும் உத்தியோகஸ்தர்களும் நண்பர்களும் விஜயம் செய்தார்கள். பல உறவினர்கள், நண்பர்களிடமிருந்து பரிசுகளும் வாழ்த்துச்செய்திகளும் வந்தன. மாலையில் கந்தர்வ கான இசை மன்னர் ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர் சங்கீதக் கச்சேரி குழுமி யிருந்தோரை ஆனந்திக்கச் செய்தது.

கோவை பி. பி. ஹோட்டல் புரொப்ரைட்டர் ஸ்ரீ கே. எஸ். எம். குருசாமி நாடார், ராயல் ஹிந்து ரெஸ்டாரண்ட் புரொப்ரைட்டர் ஸ்ரீ எம். ஏ. குருசாமி நாடார் அவர்களும் திருமண வைபவத்திற்கு அன்புடன் விஜயம் செய்த அனைவருக்கும் இதன் மூலம் தங்களது மனமார்ந்த வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றனர்.



Godrej Turkish Bath








சென்னையில் பிரபல ஏற்றுமதி - இறக்குமதி வர்த்தகர், தேவகோட்டை ஜனாப் M. E. முஹம்மது கனி அவர்களது குமாரர் ஸ்ரீ ஜமால் முஹைதீன் (பி. ஏ., ஆனர்ஸ்.) 5-9-50ம் தேதி லண்டன் வழியாக அமெரிக்காவுக்கு விமான மூலம் பிரயாணமானார். அமெரிக்காவிலுள்ள பிரபல மிச்சிகன் சர்வகலாசாலையில் வியாபார நுணுக்கங்களையும், பொது நிர்வாக முறைகளை (Master of Business and Administration) யும் கற்றுப் பயிலவே இளைஞர் ஜமால் முஹைதீன் சென்றிருக்கிறார். அங்கு சுமார் இரண்டு வருஷப் பயிற்சிக்குப் பின்னர் இந்தியாவுக்குத் திரும்புவார்.

அன்னார் ஆர்வம் செழித்தோங்கி, பயிற்சியிலும் வெற்றியடைந்து தாய்நாட்டின் சேவைக்கு ஸ்ரீ ஜமால் முஹைதீன் சௌக்யமாய் திரும்ப எதிர் நோக்குவோமாக!




மலர் 10 இதழ் 6 | செப்டம்பர் 10 | விக்ருதி ஆவணி 25



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற



மலர் 10 **கல்கி** இதழ் 6

# என்ன சேதி ?

## பாரதித் திருவிழா

**செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப்படும்**

என்று தமிழ் மறை முனிவர் திருவாய் மலர்ந்து அருளியபோது தமிழ் நாட்டு மக்கள் மாதம் மும்மாரி பெய்து அன்ன விசாரமின்றி ஆனந்தமாக வாழ்ந்து வந்தார்கள். எனவே அந்த மாமுனிவரின் வாக்கு அந்தச் சுபிட்ச காலத்தைக் காட்டிலும் இன்றைய க்ஷாமகாலத்துக்கே முற்றிலும் பொருத்தமாக இருக்கிறது எனலாம். ஒருவேளை இன்றைய நிலைமையை மனதில் உன்னித்தான் திரிகால ஞானியான திருவள்ளுவர் அவ்வாறு கட்டளையிட்டாரோ என்னவோ! சிறிதளவே வயிற்றுக்குக் கிடைக்கும்போது செவிக்கு உணவை முக்கியமாகக் கொள்ள வேண்டும் என்பது அந்த மகானின் உபதேசமாக இருக்கலாம்.

அமரத்வம் அடைந்த கவிச் சக்கரவர்த்தி பாரதியாரின் தினம் நாளை செப்டம்பர் மாதம் 11உ வருகிறது. உணவு நெருக்கடியையும் உடை நெருக்கடியையும் சமாளிக்க வேண்டியிருக்கும் ஜனங்கள் மேற்படி விழாவை வழக்கம்போல் குதூகலமாகக் கொண்டாட முடியாவிட்டாலும், தமிழர்கள் வாழும் இடம் எங்கும் பாரதியார் பாடல்களைப் பாடி அந்த விழாவை நடத்த வேண்டியது கடமையாகும். வயிற்றுக்கு உணவு போதாமலிருக்கும் இக்காலத்தில் செவிக்கு விருந்தாக விளங்கும் கவியரசர் பாரதியாரின் தீந்தமிழ்ப் பாடல்களைப் பாடி, அந்த மகானை நினைவு கூர்வதன் மூலம் மக்களின் உலர்ந்த உடலுக்கு வலிமையும் சோர்ந்த உள்ளத்துக்கு உற்சாகமும் ஏற்படும் அல்லவா?



கவியரசர் பாரதியார்

## அக்கிராசனர் தாண்டன்

நாஸிக் நகரில் கூடப் போகும் காங்கிரஸுக்கு ஸ்ரீ புருஷோத்தமதாஸ் தாண்டன் அக்கிராசனராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். மொத்தம் பதிவான வோட்டுக்களில் சரிபாதிக்கு மேலே 6 வோட்டுக்கள் அவருக்கு அதிகமாக விழுந்திருக்கின்றன. தாண்டன் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்தி அறிந்ததும் அமீனாபாத் அகதிகள் ஆனந்தத் தாண்டவம் ஆடிக்கொண்டு தாண்டன் ஜாகைக்குச் சென்று "ராஜரிஷி தாண்டன் ஜிந்தாபாத்!" என்று கோஷித்தார்களாம். (நீளமான தமிழில் 'வாழ்க' என்று சொல்கிறோமே, அதை ஆங்கிலத்தில் 'Long live' என்றும் ஹிந்துஸ்தானியில் 'ஜிந்தாபாத்' என்றும் சுருக்கச் சொல்கிறார்கள் என்பதை இங்கே ஞாபகப்படுத்தி வைக்கிறோம்.) நம்முடைய ஜனங்களுக்கு 'ராஜா' பட்டத்திலும் பதவியிலும் எவ்வளவு பிரமை இன்னமும் இருக்கிறது என்பதையே 'ராஜரிஷி தாண்டன்' என்னும் கோஷம் குறிப்பிட்டுக் காட்டுகிறது. ஸ்ரீ தாண்டன் காங்கிரஸ் தலைவர் ஆகிவிட்டதனால் தேச நிலைமையில் பிரமாதமான மாறுதல் ஒன்றும் ஏற்பட்டுவிடாது என்று சென்ற இதழில் கூறியதையே இப்போதும் சொல்கிறோம். ஆனால் சில அரசியல் நிபுணர்கள் வேறு விதமாகச் சொல்லி வருகிறார்கள். தேர்தலுக்கு முன்னாலேயே தாண்டனை ஸர்தார் படேல் தாங்கி நிற்கிறார் என்றும் கிருபளானியை ஜவாஹர்லால்ஜி ஆதரிக்கிறார் என்றும் சொல்லப்பட்டன. தாண்டன் காங்கிரஸ் அக்கிராசனர் ஆகிவிட்டால், ஜவாஹர்லால்ஜி பிரதம மந்திரி வேலையை விட்டு விடுவார்

என்றும் சொல்லப்பட்டது. இத்தகைய வதந்திகள் ஆதாரமற்றவை என்றே நாம் கருதுகிறோம். ஸர்தார் படேலும் ஜவாஹர்லால் நேருவும் இப்படி கோஷ்டி மனப்பான்மை கொண்டவர்களாகி விடுவதென்றால், இந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த தேசத்துக்குக் கதி மோட்சம் உண்டா என்பது பற்றியே நாம் சந்தேகிக்க வேண்டியதாகும். ஸர்தார் படேல் விஷயம் எப்படியானாலும், ஜவாஹர்லால்ஜியின் கள்ளங் கபடற்ற உள்ளத்தில் இத்தகைய எண்ணங்கள் உண்டாவதற்கே இடம் கிடையாது. காங்கிரஸ் அக்கிராசனர் பதவி விஷயமாக அவ்வளவு விருப்பு வெறுப்புக்கள் ஜவாஹர்லால்ஜியின் மனதில் குடி கொண்டிருந்தால், வேறு யாரும் அப்பதவிக்கு வர முடியாமல் தாமே இருந்திருக்கலாமே? அவரை எதிர்த்து யார் நின்றிருக்க முடியும்? நின்றால் தான், தேசமக்கள் அதைப் பொறுத்திருப்பார்களா?—எனவே, ராஜரிஷி தாண்டன் காங்கிரஸ் தலைமைக்கு வந்து விட்டது காரணமாகத் தேசத்தில் மாபெரும் அரசியல் குழப்பம் எதுவும் நேரிடாது என்றே நம்புகிறோம். நேர்ந்தால் அது இந்தப் புண்ணிய பாரத பூமிக்கு இன்னும் நல்ல காலம் பிறக்கவில்லை என்பதற்கே அறிகுறியாயிருக்கும்.

## ஆந்திர அலங்கோலம்

நாடெங்குமுள்ள இருபத்து நான்கு மாகாணங்களிலே இருபத்து மூன்று மாகாணங்களில் மாகாண காங்கிரஸ் கமிட்டிகள் கூடின. கூடி மாகாணக் காங்கிரஸ் தலைவரைத் தேர்ந்தெடுத்து, காங்கிரஸ் அக்கிராசனர் தேர்தலிலும் வோட்டு அளித்தன. மாகாணக் கமிட்டியும் கூடாமல், காங்கிரஸ் தலைவர் தேர்தலிலும் கலந்து கொள்ளாமலிருந்த பெருமையை நம் சகோதர ஆந்திர மாகாணத்தவர் மட்டுமே அடைந்தனர். இதற்குக் காரணம் என்னவென்பதைச் சிறிது ஆராய்ந்து பார்த்தால் நிலைமையை அறிவதற்கு உபயோகமாயிருக்கும். தற்போதுள்ள மோசமான காங்கிரஸ் அமைப்பு விதிகளின்படி, ஒரு மாகாணக் கமிட்டியில் ஆதிக்கம் வகிப்போரை இலேசில் அசைத்துவிட முடியாது. மாகாணக் கமிட்டி சர்வாதிகாரிகளின் விருப்பத்துக்கு மாறாக வேறு மனிதர்கள் இடம் பெறவும் முடியாது. ஆந்திர மாகாண நிலைமையைப் பார்த்தால் இது எவ்வளவு உண்மையான கூற்று என்பதை நன்கு அறியலாம். ஆந்திர மாகாணக் காங்கிரஸ் கமிட்டி ஸ்ரீ டி. பிரகாசம்—ஆசிரியர் ரங்கா இவர்களுடைய ஆதிக்கத்தில் இருந்தது. ஆந்திர மாகாணத்தில் பிரகாசம்—ரங்கா கோஷ்டிக்கு எதிர் கோஷ்டியும் பலமாக உண்டு. இந்த எதிர்கோஷ்டியார் சென்னை மாகாண மந்திரி சபையில் இப்போது ஸ்தானம் வகிக்கிறார்கள். அதோடு எதிர்கோஷ்டியைச் சேர்ந்தவர்களான டாக்டர் பட்டாபி சீதாராமையாவும் ஸ்ரீ காளா வெங்கட்ராவும் இன்று வரை அகில இந்திய காரியக்கமிட்டியில் பொறுப்பான ஸ்தானம் வகிக்கிறார்கள். டாக்டர் பட்டாபி காங்கிரஸ் அக்கிராசனர்; ஸ்ரீ காளா வெங்கட்ராவ் காங்கிரஸின் பொதுக் காரியதரிசி. மாகாணக் கமிட்டி சர்வாதிகாரிகளான ரங்கா—பிரகாசம் மறுபடியும் தங்கள் மனிதர்களையே மாகாணக் கமிட்டியில் கொண்டு வரப் பார்த்தார்கள். அவர்களை எதிர்த்து மந்திரி கோஷ்டியார் வேலை செய்தார்கள். அகில இந்தியக் கமிட்டியில் டாக்டர் பட்டாபியும் ஸ்ரீ காளா வெங்கட்ராவும் அதிகாரம் வகித்த படியால் பிரகாசம்—ரங்கா கோஷ்டியின் தேர்தல் முடிவுகளையெல்லாம் அவர்கள் அடித்துத் தள்ளிவிட்டார்கள். ஏதாவது ஒரு புகார் வந்தாலும் 'தேர்தலை நிறுத்து' என்று உத்தரவு போட்டார்கள். மத்தியஸ்தத்துக்கு ஆள் அனுப்புகிறோம் என்று பம்பாய் மேயர் ஸ்ரீ எஸ். கே. பாடீல் அவர்களை அனுப்பினார்கள். அவர் வந்து பார்த்து மத்தியஸ்தமாகச் சொன்ன ஏற்பாடுகளும் உருப்படாமற் போயின! ஆகவே ஆந்திர மாகாணத்தில் காங்கிரஸ் பிரதிநிதிகளே தேர்ந்தெடுக்கப்படவில்லை! புதிய மாகாணக் கமிட்டியும் ஏற்படவில்லை. மேலே டாக்டர் பட்டாபியும் ஸ்ரீ காளாவும் இருந்து ஒவ்வொரு தடவையும் முட்டுக்கட்டை போட்டிரா விட்டால் பிரகாசம்—ரங்கா கோஷ்டியாரே புதிய ஆந்திர மாகாணக் கமிட்டியைப் பிடித்திருப்பார்கள். மற்ற மாகாணங்களில் இத்தகைய தர்ம சங்கடம் ஏற்படவில்லை. மாகாணக் கமிட்டியின் சர்வாதிகாரிகளே மேலே அ. இ. காரியக் கமிட்டியிலும் ஸ்தானம் வகித்தபடியால் அவர்களுடைய நோக்கம் எளிதில் நிறைவேறி விட்டது! ஆந்திர நாட்டில் மாகாணக் கமிட்டி நிர்வாகிகளும் மேலிடத்தாரும் மாறுபட்ட படியால், எல்லாம் சர்வ குழப்பமாகித் தேர்தல்களே நடக்கவில்லை. இறுதியில் ஆந்திர மாகாணக் கமிட்டியையே கலைத்துவிட்டுப் பம்பாய் எஸ். கே. பாடீலைச் சர்வாதிகாரியாக நியமிக்க வேண்டிய நிலைமை நேர்ந்துவிட்டது. இதனால் விளங்கும் நீதியாவது. காங்கிரஸ் ஸ்தாபனம் ஜனநாயகக் கொள்கைக்கு ஒத்து அமைந்து புனிதம் பெற வேண்டும் என்றால், இப்போதுள்ள காங்கிரஸ் அமைப்பு விதிகளை அவசியம் மாற்றியாக வேண்டும் என்பதுதான்.

# சிறந்த வழி!

ஐக்கிய நாடுகள் சபையில் காஷ்மீர் பிரச்னை தீர்ந்தாலன்றித் தாம் பாகிஸ்தானுக்குத் திரும்பப் போவதில்லையென்று சர் ஜபருல்லாகான் கூறியுள்ளார்.

கொரியா போர் உலக மகாயுத்தம் ஆகிவிடாமல் தடுப்பதற்காக அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன் எட்டு ஷரத்துகள் அடங்கிய திட்டத்தை வெளியிட்டிருக்கிறார்.

# இந்தக் கதையைக் கேளுங்கள்!

குட்டி குரைத்துத் தாயின் தலையில் வைத்த கதையை அல்ல; தாய் குரைத்துக் குட்டியின் தலையில் வைத்த கதையைத்தான் சொல்லுகிறோம்!

ஆட்டுக் குட்டிக்காகப் பரிந்து கொண்டு கழுகும் கரடியும் செய்யும் யுத்தம் ஆட்டுக்குட்டிக்குப் பேராபத்தாக முடிந்திருக்கிறது.

வல்லரசுகளின் பிணக்கும் போட்டா போட்டியும் ஒரு ஏழை ஆசியா நாட்டின் தலையில் வந்து விடிந்திருக்கிறது.

அமெரிக்கக் கழுகுக்கும், ருஷ்யக் கரடிக்கும் ஏற்பட்டுள்ள போர் கொரியா ஆட்டுக்குட்டிக்கு அனர்த்தத்தை உண்டுபண்ணி யிருக்கிறது.

சென்ற இரண்டரை மாத காலமாகக் கொரியாவில் நடந்து வரும் கோரப் போர் முடியவில்லை; முடிவதற்கான அறிகுறியையும் காணவில்லை.

அந்த யுத்தம் இன்னும் சில வாரங்களில் முடிந்தாலும், சில மாதங்களில் முடிந்தாலும், அல்லது அது உலக மகாப்பிரளயமாக முற்றினாலும் ஒரு விஷயம் மாத்திரம் நிச்சயம் என்பது இப்போது தெரிந்து விட்டது.

அதாவது அதற்குள் கொரியாவில் உள்ள அழகிய நகரங்கள் எல்லாம் கொடிய நரகங்களாக மாறி விடும் என்பது நிச்சயம்தான்.

கொரியா தேசம் நாற்பது வருஷங்களாக ஜப்பானின் ஆதிக்கத்தில் இருந்த போது கூட, அதன் சுதந்திரம் பறி போயிற்றே யன்றி அதற்கு இவ்வளவு கஷ்ட நஷ்டங்கள் ஏற்படவில்லை.

* * *

கொரியா போரிலிருந்து ஓர் உண்மை வெளியாகி யிருக்கிறது.

வடக்கு கொரியர்களுக்கு ருஷ்யா போர்த் தளவாடங்களைக் கொடுத்து உதவினாலும் நேரடியாக ருஷியா போரில் கலந்து கொண்டதாகத் தெரியவில்லை.

தென் கொரியா போர் முனையில் ஒரு ருஷ்ய சிப்பாயோ, ஒரு சீன சிப்பாயோ வந்து போர் புரிந்ததாக இதுவரையில் தெரிய வரவில்லை.

தென் கொரியர்களுக்கு அமெரிக்கா யுத்த தளவாடங்களைக் கொடுத்து உதவி வருகிறது. ஏராளமான அமெரிக்கச் சிப்பாய்களும் போர் செய்து வருகிறார்கள். பிரிட்டன், ஆஸ்திரேலியா முதலிய நாடுகள் போர்க்கப்பல்களையும் படைகளையும் அனுப்பியிருக்கின்றன.

ஐக்கிய நாடுகள் சபையிலும் ஐம்பது நாடுகளுக்கு மேல் தெற்கு கொரியாவை ஆதரித்தும் வடக்கு கொரியாவின் ஆக்கிரமிப்பைக் கண்டித்தும் தீர்மானம் நிறைவேற்றி யிருக்கின்றன.

இவ்வளவு ஆதரவு இருந்தும் வடக்கு கொரியர்கள் மிக்க ஆவேசத்துடன் போர் புரிந்து வருகிறார்கள்; வியக்கத் தக்க விதமாக முன்னேறி வருகிறார்கள்; மகா வல்லமை பொருந்திய அமெரிக்கர்களைக் கூடப் பின்தாங்கி ஓடும்படி செய்து வருகிறார்கள்.

ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் முதலிய வல்லரசுகளை முறியடித்த அமெரிக்கர்கள் வடக்கு கொரியர்களைச் சமாளிக்க முடியாமல் பின் வாங்குவதன் மர்மம் என்ன என்பதை ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

தாங்கள் வல்லரசுகளின் இரும்புப் பிடியிலிருந்து விடுபட வேண்டும்; உண்மையான விடுதலை பெற வேண்டும் என்ற ஆவேசமே வடக்கு கொரியர்கள் இவ்வளவு வீரத்துடன் போராடுவதற்குக் காரணம் என்று ஊகிக்க வேண்டி யிருக்கிறது. ஜனங்கள் உண்மையான வீராவேசத்துடன் போர் புரிந்தால், அவர்களை எவ்வளவு வல்லமை பொருந்தியவர்களும் எளிதில் எதிர்த்து நிற்க முடியாது என்பதும் இதிலிருந்து தெரிகிறது அல்லவா?

கொரியாவின் விடுதலைக்காகவே தாங்கள் போராடுவதாக அமெரிக்கர்கள் கூறுகிறார்கள். எனினும் பல நூற்றாண்டுகளாக ஐரோப்பிய நாடுகள் ஆசியாவை அடிமைப்படுத்தி ஆதிக்கம் செலுத்தி வந்திருப்பதால், அவைகள் மீது ஆசியா நாடுகளுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை என்பது கொரியா யுத்தத்திலிருந்து வெளியாகிறது.

கொரியா யுத்தம் உலக மகா யுத்தமாக மாற ஹேதுவில்லை என்று சில ராஜதந்திரிகள் கூறுகிறார்கள்; தற்காலிகமாக மகா யுத்தம் மூள இடமில்லை என்று வேறு சிலர் சொல்லுகிறார்கள்.

ஆனால் மகாயுத்தம் ஏற்படாது என்று நிச்சயமாகக் கூறும் தைரியம் யாருக்கும் இல்லை.

அகில உலகமும் அஷ்ட திக்குகளும் யுத்த மேகங்களால் சூழப்பட்டு வரு

கையில், மகா யுத்தம் மூளாது என்று யார்தான் கூற முடியும்?

கொரியாவைப்போல் ஜப்பான் தேசத்திலும் கோரமான போர் ஏற்படுவதற்கான பூர்வாங்க ஏற்பாடுகள் எல்லாம் முடிந்து விட்டதாகப் பத்திரிகைச் செய்திகள் முறையிடுகின்றன.

கொரியா யுத்தம் மற்ற இடங்களிலும் பரவக்கூடும் என்ற பீதியால் பார்மோஸா தீவை அமெரிக்கா தற்காலிகமாகத் தன் ஆதிக்கத்தில் வைத்துக் கொள்ளத் தீர்மானித்திருக்கிறது.

மேற்கு ஜெர்மனியில் அமெரிக்காவும் பிரிட்டனும் தங்களுடைய படைகளைப் பெருக்க உத்தேசித்திருக்கின்றன.

ஜெர்மனியில் ருஷ்யா மகத்தான தாக்குதலை ஆரம்பிக்கலாம் என்பதற்கான அறிகுறிகள் இருந்து வருவதால், பிரிட்டன், பிரான்ஸ் முதலிய நாடுகள் கதிகலங்க ஆரம்பித்திருக்கின்றன.

கொரியாவில் வேறு தேசங்களிலிருந்து துருப்புகள் வந்தாலன்றிக் கொரியாப் போர் உலக யுத்தமாக மாற இடமில்லை என்று அமெரிக்கா ஜனாதிபதி ட்ருமன் கூறுகிறார்.

அப்படியானால் ருஷ்யாவிலிருந்தோ சீனாவிலிருந்தோ கொரியா அல்லது பார்மோஸாவுக்குத் துருப்புகள் வந்தால் மகா யுத்தத்துக்கு ஆரம்பம் அதுதான் என்பது ட்ருமன் வாயிலிருந்தே வந்து விட்டது! இந்நிலையில் உலகப் பிரளயம் ஏற்படாது என்று எவர்தான் நிச்சயமாகக் கூறமுடியும்?

* * *

கொரியா யுத்தம் பரவி உலக யுத்தம் ஆகிவிடாமல் தடுப்பதற்காக ஸ்ரீ ட்ருமன் எட்டு ஷரத்துக்கள் அடங்கிய திட்டம் ஒன்றைத் தயாரித்து வெளியிட்டிருக்கிறார்.

"உலகத்திலுள்ள நாடுகள் எல்லாம் ஐக்கிய நாடுகள் சபையின் மூலம் பாதுகாப்பை நாட வேண்டும். கொரியா ஐக்கியம் அடைந்து சுதந்திர நாடாக விளங்க வேண்டும். ஐ. நா. சபைக்கு விரோதமாக கொரியா யுத்தத்தில் ஈடுபடாமல் இருக்கும்படி சீன மக்களைக் கேட்டுக் கொள்கிறோம். சர்வதேச நடவடிக்கை மூலம் பார்மோஸா பிரச்னை சமாதானமாகத் தீர்க்கப்பட வேண்டும். கீழ்த்திசையிலுள்ள சகல நாடுகளும் விடுதலை பெற வேண்டும். உலக சமாதானத்துக்கு இன்றியமையாத சக்திகளை ஐ. நா. சபை திரட்ட வேண்டும்."

இவைதான் அமெரிக்க ஜனாதிபதியின் திட்டத்தில் அடங்கியுள்ள முக்கிய அம்சங்கள் ஆகும்.

மேற்படி திட்டத்தை உலக மக்களுக்கு அறிவித்து ட்ருமன் செய்துள்ள பிரசங்கத்தில், ஆசியா மக்கள் யாவரும் சுதந்திரத்துடனும் ஆரோக்கியத்துடனும், உணவு, உடை, வசிக்க இடம் இவைகளுக்குப் பஞ்சமின்றியும் அமைதியுடன் வாழ உதவி புரிவதே அமெரிக்காவின் நோக்கம் என்று உறுதி கூறியிருக்கிறார்.

ட்ருமனின் திட்டமும் பிரசங்கமும் ஆசியா மக்களுக்கு மகிழ்ச்சியை அளிக்கக் கூடியவை என்றாலும், அவற்றை அமெரிக்கா அந்தரங்க சுத்தியுடன் செயலில் கொண்டுவந்தாலன்றி ஐரோப்பிய வல்லரசுகள் மீது ஆசியா நாடுகளுக்கு வெகுகாலமாக இருந்து வரும் அவநம்பிக்கை தீர இடமில்லை.

# பொழுது போக்கு

"தும்பி"

போன வாரம் இரண்டு நாள் இரவு பகல் எனக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. எங்கே 'ராஜரிஷி' பாபு புருஷோத்தம தாஸ் தாண்டன் காங்கிரஸ் அக்கிராசனராக வராமல் தோற்றுப் போய் விடுகிறாரோ என்ற கவலை என்னைப் பிடித்து வாட்டியது. நல்லவேளையாக அவர் காங்கிரஸ் அக்கிராசனராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். என் கவலையும் விலகியது.

நம் பழைய புராணங்களில் விசுவாமித்திரருக்குத்தான் 'ராஜரிஷி' என்ற பெயர் இருந்தது. அவர் அரசராயிருந்து பின்னால் ரிஷியாக மாறினவர். ஆனால் பாபு புருஷோத்தம தாஸ் தாண்டன் எந்த நாட்டிற்கு (அல்லது தனிக் காட்டிற்கு) ராஜா வென்றும் எந்த ஆசிரமத்திற்கு ரிஷி யென்றும் தெரியவில்லை. எந்த ராஜா எந்தக் காட்டிற்குப் போனாலும் 'ராஜரிஷி' புருஷோத்தம தாஸ் தாண்டன் வாழ்க! அவருடைய சுத்த ஹிந்தியும் கூடவே வாழ்க!

இனிமேல் நாட்டில் மாதம் மும்மாரி மழை பொழிந்து ஜனங்கள் தினம் நாலு வேளை அரிசிச் சாப்பாடாகச் சாப்பிடுவார்கள். பஞ்சமும் பசியும் பறந்தோடிவிடும். லஞ்சம், கள்ளமார்க்கெட்டு, 'நெபொடிஸம்' முதலியவை உடனே மறைந்துவிடும்.

இத்தனை நாள் யாராலும் முடியாத காரியம் எப்படி ஸ்ரீ தாண்டன் காங்கிரஸ் அக்கிராசனராக வந்ததும் மறையும் என்று கேட்கலாம். இந்தியாவில், அதாவது பாரதத்தில் பிறந்து வளர்ந்த உங்களுக்கு இது கூடத் தெரியாவிட்டால் நானென்ன செய்வது! ஒரு நீண்ட பிரசங்கத்தாலேயே அவர் எல்லா விதப் பஞ்சத்தையும் நொடியில் போக்கி விடுவார் என்பதை இனிமேலாவது தெரிந்து கொள்ளுங்கள்.

புது அக்கிராசனர் பதவிக்கு வருகிறவர்கள் யாராயிருந்தாலும் வருஷா வருஷம் காங்கிரஸ் மகாசபை கூடும் போது ஒரு நீண்ட பிரசங்கம் செய்ய வேண்டு மென்பது மரபு. போன வருஷம் ஸ்ரீ பட்டாபி சீதாராமய்யாவின் அக்கிராசனப் பிரசங்கத்தைக் கேட்டவர்களுக்கு (அல்லது பத்திரிகையில் படித்தவர்களுக்கு) விஷயம் தெரியும். நாட்டில் இருக்கும் பத்திரிகைகளெல்லாம் அவர் பிரசங்கத்தை முழுதும் பிரசுரிக்க இடம் இல்லாமல் தவித்தன. எட்டுப் பக்கம் கொண்ட தினப் பத்திரிகைகளெல்லாம் ஏழு பக்கம் அவர் பிரசங்கத்தைப் போட்டுவிட்டுப் பொது ஜனங்களைத் திணற அடித்தன. அவர் பிரசங்கம் ஒரு 'ரிகார்ட்' பிரசங்கம் என்று எல்லாரும் சொல்லிக் கொண்டார்கள். ஒரு வேளை தம்மை இத்தனை நாளாக அக்கிராசனப் பதவி ஏமாற்றிக் கொண்டிருந்ததற்காக அவர் அதன் மீதும் நம் மீதும் பழி வாங்க எண்ணியே அந்த நீண்ட நாலு மணி நேரப் பிரசங்கத்தைச் செய்திருக்கலாம்!

தாண்டன் போன வருஷம் பட்டாபி சீதாராமய்யாவிற்கு எதிராக அக்கிராசனப் பதவிக்குப் போட்டியாக நின்று தோற்றுப் போனவர். அதனால் அவர் டாக்டர் பட்டாபியைப் பழி வாங்க நினைத்து இந்தத் தடவைக் காங்கிரஸ் மகாசபை கூடும்போது ஆறு மணி நேரப் பிரசங்கம் செய்வாரென்று எதிர்பார்க்கிறேன். அப்படி அவர் பிரசங்கம் செய்யும்போது பசி, பஞ்சம், கள்ளமார்க்கெட்டு, லஞ்சம், 'நெபொடிஸம்' முதலியவைகளை அடியோடு ஒழித்துக் கட்டாவிட்டால் பாருங்களேன்!

★

'நெபொடிஸம்' 'நெபொடிஸம்' என்ற வார்த்தை இந்தியா அதாவது பாரத் சுதந்திரம் பெற்ற நாளிலிருந்து காதில் விழுந்து வருகிறது. நான், 'சோஷலிஸம்', 'கம்யூனிஸம்' இவைகளைப் போல 'நெபொடிஸம்' என்பதும் ஒரு விதக் கட்சி என்று நினைத்துக் கொண்டிருந்தேன். தேசம் இருக்கும் நிலையில் ஏதாவது புதுக் கட்சியில் சேர்ந்து தேசத்திற்கு முன் போலச் சேவை செய்யலாமென்று நினைக்கும் சில எம். எல். ஏ.க்களைப்போல நானும் இந்த 'நெபொடிஸம்' என்ற புதுக் கட்சியில் சேர்ந்து தேச சேவை செய்யலாமென்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் பிறகு விசாரித்த போதுதான் விஷயம் தெரிந்தது. அது ஒரு கட்சியின் பெயரல்லவாம்! உற்றார்களையும் உறவினர்களையும், மைத்துனர்களையும், மாப்பிள்ளைகளையும் 'இழுத்து'ப் போட்டுக் கொள்ளும் செய்கைக்குப் பெயராம்! எப்படியிருந்தாலும் இப்போது அநேக காங்கிரஸ் அங்கத்தினர்கள் 'நெபொடிஸ'த்தின் அங்கத்தினர்களாகவும் இருக்கிறார்கள் என்ற விஷயம் சிறிது ஆறுதலைக் கொடுக்கிறது.

★

"உணவு உற்பத்தியைப் பெருக்குங்கள்!" என்ற சுலோகத்தை நம் அரசாங்கத்தார் ஏராளமான பணம் செலவழித்துப் பிரசாரம் செய்து கொண்டுதானிருக்கிறார்கள். 'பெருக்குங்கள்' என்றதும் சிலர் எந்த எண்ணால் உணவு உற்பத்தியைப் பெருக்குவது என்று கேட்டுக் கொண்டுதானிருக்கிறார்கள். ஜனங்களுக்கு இந்தச் சின்ன விஷயம்கூடத் தெரியாமல் போனால் அரசாங்கம்தான் என்ன செய்ய முடியும்! குதிரைக்குத் தண்ணீரைக் காட்டத்தான் முடியுமே தவிர குடிக்கச் செய்ய முடியுமா! அதேபோல் அரசாங்கம் விளம்பரம் செய்யத்தான் முடியுமே தவிர, விளம்பரத்தினால் அரிசியை உற்பத்தி செய்ய முடியுமா! அவர்களும்தான் இந்த சுலோகத்தைக் கொண்ட விளம்பர அட்டைகளை வயல்களைச் சுற்றி நடுகிறார்கள். ஆனால் அந்த வயல்களுக்குச் சர்க்கார் விளம்பரத்தின் மகிமையும் தேசத்தின் நெருக்கடியும் தெரிந்தால் தானே!

1951-ம் வருஷ முடிவில் தேசம் உணவு விஷயத்தில் பிற நாடுகளை எதிர்பார்க்க வேண்டிய நிலைமையில் இருக்காதென்று முன்ஷி அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கிறார். எப்படி என்றுதான் தெரியவில்லை. ஏனென்றால் அவர் கணக்குப்படியே அப்போது பற்றாக் குறையைத் தீர்க்க இன்னும் எட்டு லக்ஷம் டன் உணவு வேண்டியதா யிருக்கிறது. ஒரு

வேளை இந்தக் குறையைத் தீர்க்கத்தான் அவர் விளம்பர இலாகாவையும், 'பானி மகராஜை'யும் நம்பிக் கொண்டிருக்கிறார் போலும்!

★

அது யார் அவர் 'பானி மகராஜ்' என்று நீங்கள் கேட்கலாம். அவர்தான் தண்ணீர் ஊற்று இருக்குமிடத்தைக் குழி தோண்டாமலேயே கண்டுபிடிக்கும் மகானுபாவர். பூமிக் கடியிலிருக்கும் தண்ணீரைக் கண்டுபிடிக்கும் இந்த 'பானி மகராஜ்' அதேபோல கள்ளமார்க்கெட்டில் பதுங்கியிருக்கும் உணவு தானியங்களையும் கண்டுபிடித்துச் சொன்னால் எவ்வளவு நன்றாயிருக்கும்! அவருக்கு இந்த சக்தி இருந்தாலும் இல்லாவிட்டாலும் கள்ள மார்க்கெட்டுக்காரர்களை வெளியில் கொண்டுவந்து அவர்களுக்குத் தகுந்த தண்டனை கொடுத்துவிட்டுத்தான் மறுவேலை என்று இந்திய அரசாங்கம் சபதம் செய்து கொண்டிருக்கிறது. இது நம் முன்னோர்கள் செய்த பாக்கியம் தான்!

சபதம் என்றதும் எனக்கு எப்போதும் உடனே 'பாஞ்சாலி சபதம்' 'சிவகாமியின் சபதம்' இவைகள்தான் ஞாபகம் வரும். சமீபத்தில் 'ஜாபருல்லாகான் சபதம்' என்று பத்திரிகையில் பார்த்தபோது அதை யார் எழுதுகிறார்கள் என்ற நியாயமான ஆவல் உண்டாயிற்று. ஒருவேளை ஜாபருல்லாகான் தான் பாகிஸ்தான் பிரதம மந்திரியின் வேலையை விட்டு விட்டுக் கதாசிரியராக மாறிவிட்டாரோ என்ற கவலை எனக்கு உண்டாயிற்று. ஆனால் மேலே படித்த போதுதான் என் கவலை தீர்ந்தது. 'காஷ்மீர் பிரச்னையைத் தீர்க்கும் வரையில் நான் பாகிஸ்தானுக்குத் திரும்பப் போவதில்லை' என்று ஜபருல்லாகான் அமெரிக்காவுக்குப் புறப்படு முன்பு சபதம் செய்து விட்டுப் போயிருக்கிறாராம்! நல்லவேளை! 'காஷ்மீரைத் தீர்க்கும் வரையில்' என்று சொல்லாமல் 'காஷ்மீர் பிரச்னையைத் தீர்க்கும் வரையில்' என்று சொன்னாரே, அதற்காகச் சந்தோஷப்பட வேண்டியதுதான்!

# அக்கப்போர்

சென்னை டிராம் வண்டிகளுக்கு வரிபோடும் மசோதா நிறைவேறியது. —செய்தி

அடுத்தபடியாக, சென்னை டிராம் வண்டிகளை, வாரிப்போடும் மசோதா கொண்டு வருவார்களா என்று கேட்கப்படுகிறது.

★

"இந்தியாவுக்கு வெகு தூரத்திற்கு அப்பால் இந்தப் பூகம்ப அதிர்ச்சியின் மத்யஸ்தானம் இருக்க வேண்டும். இந்தப் பூகம்பத்தில் மத்யஸ்தானம் இந்தியா இல்லாமலிருப்பது நமது அதிருஷ்டம்தான். இல்லாவிட்டால் இன்னும் மகத்தான கஷ்டம் ஏற்பட்டிருக்கும்!"

—ஸ்ரீ வாடியா

எப்படி யெல்லாம் நமக்கு அதிருஷ்டம் ஏற்படுகிறது, பாருங்கள்!

★

நம் நாட்டில் தயாராகும் இந்திய மையையே எல்லோரும் உபயோகிக்க வேண்டும் என்று அகில இந்திய மை தயாரிப்போர் சங்கம் கேட்டுக் கொண்டிருக்கிறது.

இந்திய மையை உபயோகிக்கும் பெருமை நம் எல்லோருக்கும் கிடைக்கட்டும்!

★

"டிக்கட் இல்லாமல் பிரயாணம் செய்த 225 பேர்களை ஸெண்ட்ரல் ஸ்டேஷன் போலீஸார் எண்ணூரில் கைது செய்தனர்." —செய்தி

'என் ஊர்தானே!' என்று எண்ணி அவர்கள் டிக்கட்டில்லாமல் பிரயாணம் செய்தனரோ!

★

"நாசிக் காங்கிரஸ் தலைவர் பதவிக்குப் போட்டி இடும் மூவரில் ஆசாரிய கிருபளானிக்கும், பாபு புருஷோத்தமதாஸ் தாண்டனுக்கும் தான் பலத்த போட்டி. ஸ்ரீ தேவுக்குக் குறைவாகவே வோட்டுகள் கிடைத்தன."

—டெல்லி செய்தி

நாசிக் காங்கிரஸுக்கு மூக்கின்மேல் கோபமுள்ள புருஷோத்தமதாஸ் தாண்டன் தேர்ந்தெடுக்கப்பட்டது பொருத்தம்தானே!

நூறு வயது வாழ்வதற்கான வழிகளை ஒரு லண்டன் டாக்டர் வெளியிட்டிருக்கிறார். அந்த வழிகளுள் ஆகார விதிகளும் ஒன்று. "ஆகார விஷயமாக முக்கிய கவனம் செலுத்த வேண்டும். மென்று தின்னும் படி உணவு பதப்படுத்தப்பட வேண்டும்" என்கிறார் அவர்.

ஆறு அவுன்ஸ் அரிசி ரேஷன் அமலுக்கிருக்கும்போது 'படி உணவு' பதப்படுத்தி மென்று தின்பது எப்படி!

★

"விலைவாசிகளின் ஏற்றத்தைத் தடுக்க ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவது ஒன்றே வழி. இதில் சில மந்திரிகளுக்கு இஷ்டமில்லாவிட்டால்கூட 'கட்டுப்பாடு! கட்டுப்பாடு! மேலும் கட்டுப்பாடு!' என்ற ஒரே கோஷத்தை நாம் தாரக மந்திரமாகக் கொள்ள வேண்டும்."

—பொருளாதார நிபுணர் டாக்டர் ராவ்

விலைவாசிகளைக் 'கண்ட்ரோல்' செய்வது ஒருபுறம் இருக்க, கோஷங்களைக் 'கண்ட்ரோல்' செய்ய வேண்டுமென்று டாக்டர் ராவ் கூறுவதை வரவேற்கிறோம்.

★

"நல்ல பலத்தையும், வயோதிக நிலைமையில் வாலிபத்தையும் கொடுக்கக்கூடிய ஒரு மூலிகை கொரியாவில் இருக்கிறதாம். அந்த மூலிகையின் ரஸத்தைச் சாப்பிட்டால் மரணத்தைக் கூட ஒத்திப் போடலாமாம்."

—டோக்கியோ செய்தி.

அந்த மூலிகையைக் கைப்பற்றத்தான் ரஷ்யர்களும், அமெரிக்கர்களும் கொரியாவில் சண்டை போடுகிறார்கள் போலும்!

ருஷ்யரிடம் அந்த மூலிகை கிடைத்தால் அதை ஸ்டாலின் பொது உடமையாகச் செய்து விடுவாரா, அல்லது தாமே சாப்பிட்டு விடுவாரா என்பது கேள்வி.

# இலங்கையில் ஒரு வாரம்

## கல்கி

2

என் நண்பர் ஒருவரிடம் ஒரு சமயம் ஒரு பழைய கதையைச் சொல்ல ஆரம்பித்தேன். "1935-ம் வருஷத்தில் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்துக்கு மகாத்மா காந்தி வந்திருந்தார். அச் சமயம் நானும் அவ்விடம் போயிருந்தேன்......" என்று சொல்லத் தொடங்கினேன்.

உடனே நண்பர் குறுக்கிட்டு, "எந்த வருஷத்தில் போனீர்கள்? 1935-லா? 1936-லா?" என்று கேட்டார்.

"1935-ல்தான்!" என்றேன்.

"எந்த மாதத்தில்?" என்றார்.

"நன்றாய் ஞாபகம் இல்லை. ஆகஸ்டு மாதமாயிருக்கலாம்."

"ஒரு வருஷம் ஆகஸ்டில் பெரு மழை பெய்தது. அந்த வருஷமா?"

"இருக்கலாம்."

"எந்த ஊருக்குப் போனீர்கள்? திருச்செங்கோட்டுக்கா?"

"ஆமாம்."

"திருச்செங்கோட்டுக்குப் போக எந்த ஸ்டேஷனுக்கு டிக்கெட் வாங்கினீர்கள்?"

"சங்கரிதுர்க்கம் ஸ்டேஷனுக்கு!"

"அப்போதெல்லாம் ரயிலில் நீங்கள் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்வது வழக்கமா? இரண்டாம் வகுப்பிலா?"

"கிடைத்த வகுப்பில்!"

"சென்னையிலிருந்து சங்கரிதுர்க்கத்துக்கு டிக்கெட் விகிதம் என்ன?"

"சுமார்......"

"சுமாராகத்தான் தெரியுமோ? நிச்சயமாய்த் தெரியாதாக்கும்?"

"தெரியாது."

"உங்கள் காதில் தொளை போட்ட அடையாளம் இருக்கிறதே! அப்போதெல்லாம் கடுக்கன் போட்டுக் கொள்வதுண்டோ?"

"இல்லை."

"அப்படித்தான் நினைத்தேன். ஏனென்றால் காதில் கடுக்கனோடு போனால் மகாத்மா கடுக்கனைக் கழற்றிக் கொடு என்று கேட்டு விடலாம் அல்லவா? அதிருக்கட்டும்; யாரோ இங்கிலாந்தில் ஒரு வெள்ளைக்காரன் 'காதைக் குத்திக் கடுக்கன் போட்டால் கண்ணுக்கு நல்லது' என்று சொல்லியிருக்கிறானாமே? அதைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?"

"சாதகமான அபிப்பிராயந்தான். காதைக் குத்தினால் கண்ணுக்கு நல்லது. கண்ணைக் குத்திக் கொண்டால் காதுக்கு ரொம்ப நல்லது......"

"அப்படித்தான் நானும் நினைத்தேன். இப்போதெல்லாம் வைரத்தின் விலை எப்படியிருக்கிறது? அதிகமா? குறைவா?"

மேற்படி நண்பரிடம் நான் சொல்ல ஆரம்பித்த விஷயத்தைச் சொல்லவே இல்லை! சொல்ல முடியவில்லை.

இலங்கைக்கு எந்தக் காரிய நிமித்தமாகவாவது போக விரும்பும் நண்பர்கள் ஆகாச விமான நிலையத்தில் சுகாதார அதிகாரிகளிடமும் சுங்கப் பரிசோதனை அதிகாரிகளிடமும் மேற்கண்டவாறு பல கேள்விகளுக்குப் பதில் சொல்லத் தயாராயிருக்க வேண்டும்.

சுகாதார அதிகாரி உங்களை ஏற இறங்கப் பார்த்து விட்டு, கையில் உள்ள அச்சு பாரத்தையும் ஏற இறங்கப் பார்ப்பார்.

பிறகு, "உங்களுக்கு வைசூரி உண்டா?" என்று கேட்பார்.

"இல்லை."

"பிளேக்?"

"இல்லை."

"காலரா?"

"அதுவும் இல்லை."

"டைபாய்ட், நிமோனியா, டபிள் நிமோனியா, காக்கை வலிப்பு, முடக்கு வாதம், குன்மம்......?"

"இவை ஒன்றும் இல்லை."

சுகாதார அதிகாரியின் முகத்திலிருந்து சோக ரஸம் சொட்டும். பிறகு உங்கள் கையைப் பிடித்து நாடி பார்த்துக் கொண்டே, "சுரம், கிரம் ஏதாவது இருக்கிறதா?" என்று கேட்பார்.

"சுரம் ஒன்றும் இல்லை. கிரம் ஏதாவது இருக்கிறதா என்று கையைப் பிடித்துப் பார்த்த நீங்கள்தான் சொல்ல வேண்டும்."

இல்லை என்பதற்கு அறிகுறியாக உத்தியோகஸ்தர் தலையை ஆட்டி விட்டு, "ஓகே! போகலாம்!" என்பார்.

இத்தனை கேள்வி கேட்ட டாக்டர் "ஆஸ்த்மா உண்டா?" என்று மட்டும் என்னைக் கேட்கவில்லை. துரதிர்ஷ்டத்தைப் பாருங்கள்! அவ்விதம் கேட்டிருந்தால் உடனே, "உண்டு! திவ்யமாய் உண்டு!" என்று அந்த டாக்டருக்குப் பதில் சொல்லியிருப்பேன் அல்லவா?

சுகாதார அதிகாரியிடமிருந்து சுங்க அதிகாரியிடம் போக வேண்டும்.

சுங்க அதிகாரி உங்கள் பெட்டிகளையும் படுக்கைகளையும் திறந்து காட்டச் சொல்வார். வாயைத் திறந்து காட்டச் சொல்வார். வயிற்றைத் திறந்து காட்டச் சொல்வார். சட்டைப் பைகளை உதறிக் காட்டச் சொல்வார்.

எல்லாவற்றையும் பார்த்த பிறகு "ஏதாவது பட்டு, கிட்டு எடுத்துப் போகிறீர்களா?" என்று கேட்பார்.

"இல்லை."

"துணிமணி?"

"இல்லை. இலங்கையில் நிர்வாணம் அடைய எண்ணிப் போகிறோம்."

"தங்கம் ஏதாவது இருக்கிறதா?"

"இல்லை; இருந்தாலும் கொடுக்கும் உத்தேசமில்லை."

"வைரம்? வைடூர்யம்? கோமேதகம்? புஷ்பராகம்? ரத்தினம்? முத்து? பவழம்?"

"இல்லை!"

"புகையிலை? கஸ்தூரி? கோரோசனை? குங்குமப் பூ?"

"ஒன்றும் இல்லை!"

சுங்க அதிகாரி மிக்க அதிருப்தி அடைந்து சந்தேகக் கண்ணுடன் உங்களை மேலுங் கீழும் பார்ப்பார்.



இலங்கை இந்தியத் தலைவர்களில் முக்கியமான ஒருவரும் இலங்கைப் பார்லிமெண்ட் அங்கத்தினருமான ஸ்ரீ எஸ். தொண்டைமான் அவர்கள்.

"ஓக்கே! போகலாம்!" என்று சொல்லி அடுத்த ஆளைக் கூப்பிடுவார்.

அப்புறம் போலீஸ் அதிகாரியிடம் போக வேண்டும்.

"எங்கே போகிறீர்?"

"இலங்கைக்கு!"

"இலங்கைக்கா? சிலோனுக்கா?"

"சிலோனுக்கு!"

"சிலோனுக்கு எதற்காக?"

"சிலோனைச் சுருட்டி எடுத்துக்கொண்டு வருவதற்கு!"

"வந்து?"

"விரித்துக்கொண்டு படுப்பதற்கு."

"சரி! நீர் எந்த வருஷம் பிறந்தீர்?"

"1953-ல்."

"எங்கே பிறந்தீர்?"

"ஒரு இருட்டறையில்!"

"சாட்சி உண்டா?"

"கிடையாது."

"அது வருந்தத் தக்கது. நீர் எப்போது இறந்தீர்?"

"1950-ல்."

"எங்கே?"

"காஷ்மீரில் நடந்த விமான விபத்தில்!"

"பிறகு இங்கு எப்படி வந்தீர்?"

"இந்திய சர்க்கார் விமான விபத்தைப் பற்றி விசாரிக்கக் கமிஷன் ஒன்று நியமித்தார்கள். கமிஷன் விசாரித்து 'விபத்து நேரிடவில்லை' என்று முடிவு செய்தது. நானும் அந்த முடிவை ஒப்புக் கொண்டேன். துண்டு துண்டாய்க் கிடந்த என் உடம்பெல்லாம் ஒன்று சேர்ந்து ஒட்டிக் கொண்டு உயிர் பெற்று எழுந்தது. பிறகு இங்கே வந்தேன்."

"ரொம்ப வருந்தத் தக்க விஷயம். ஓக்கே! நீர் போகலாம்."

இப்படியாகப் பலவிதச் சோதனைகளுக்கு உள்ளான பிறகு ஆகாச விமானத்துக்குச் சென்றோம். எங்களை இலங்கைக்கு ஏற்றிச் செல்வதற்காகக் காத்திருந்த விமானத்தின் முன் பகுதியில் "சீதா தேவி" என்று எழுதியிருந்தது. விமானத்தின் பெயர் அதுவென்று தெரிந்தது. இது பற்றி நண்பர் ஸ்ரீ பெரியசாமித் தூரன் அவர்களுக்கு மிகவும் சந்தோஷம்.

"முன் காலத்தில் அன்னை சீதா தேவியைக் கண்டு பிடித்து வருவதற்காக அனுமார் ஆகாசமார்க்கமாய் இலங்கைக்குச் சென்றார். இப்போது அதற்குப் பதிலாக அன்னை சீதா தேவி குழந்தைகளாகிய நம்மை இலங்கைக்குக் கொண்டு போகிறார்!" என்று சொல்லிச் சொல்லி ஆனந்தப் பட்டார்.

விமானத்துக்கு அனுமார் என்று பெயர் வைக்காமல் "சீதா தேவி" என்று பெயர் வைத்ததில் எனக்கும் சந்தோ

ஷந்தான். சென்னை சர்க்கார் மந்திரிகள் ஆகாசப் பிரயாணம் செய்வதற்காக ஒரு விமானம் வாங்கினார்கள். அதற்கு "அனுமார்" என்று பெயர் வைத்தார்கள். அனுமார் தமது சுபாவத்தை அடிக்கடி காட்டிக் கொண்டிருந்தார். ஒரு சமயம் 'அனுமார்' மீது ஏறிச் சென்னை மந்திரிகள் டில்லிக்குப் போனார்கள். வழியில் ஒரு கிராமத்தில் சில பக்தர்கள் ராம பஜனை செய்து கொண்டிருந்தார்கள். அனுமார் காதில் அது விழுந்து விடவே, திடீரென்று முன்னெச்சரிக்கை யில்லாமல் கீழே ஒரு மைதானத்தில் இறங்கி விட்டார். அப்புறம் அங்கிருந்து புறப்படவும் மறுத்துவிட்டார். சென்னை மந்திரிகள் திண்டாடித் திணறி, பிழைத்தது புனர் ஜன்மம் என்ற எண்ணத்துடன், கால்நடையாகவும் கட்டை வண்டியிலும் சென்று ரயில் ஏறி டில்லி போய்ச் சேர்ந்தார்கள்.

கருணை மிக்க சீதா தேவி அப்படியெல்லாம் எங்களைப் பாடாய்ப் படுத்தாமல் பத்திரமாய் யாழ்ப்பாணத்தில் கொண்டு போய் இறக்கினார். அங்கேயுள்ள சுங்க அதிகாரிகள், சுகாதார அதிகாரிகள், போலீஸ் அதிகாரிகள் முதலியவர்களிடம் தாக்கல் கொடுத்து விட்டு, விமான நிலையத்திற்கு வந்திருந்த யாழ்ப்பாணத்துத் தமிழ் அன்பர்களிடம் சற்றுத் தூரத்திலிருந்தபடியே அளவளாவிப் பேசிவிட்டு மறுபடியும் புறப்பட்டோம். அந்த மரகதத் தீவின் இயற்கை வளங்களை மேலிருந்து பார்த்துக் கொண்டே, கொழும்பு போய்ச் சேர்ந்தோம். தமிழ்ச் சங்கத்து நண்பர்கள் ஏற்பாடு செய்திருந்தபடி கொழும்பு நகரில் டாக்டர் செல்லநாதன் அவர்களுடைய இல்லத்தில் தங்கினோம்.

* * *

கொழும்பில் முதன் முதலாக நான் விசாரித்த விஷயம் அங்கே உணவு நிலைமை எப்படி என்பதுதான். சில வருஷங்களுக்கு முன்னால் இலங்கையில் உணவுத் தட்டுப்பாட்டைக் குறித்து அடிக்கடி செய்தி வருவதுண்டு. இந்தியாவிலிருந்து அரிசி அனுப்பி வைப்பதற்குத் தூது கோஷ்டிகளும் இங்கே வந்ததுண்டு. அப்படியிருக்க, தற்போது இலங்கை இந்தியாவுக்கு அரிசி கடன் கொடுப்பதாக முன் வருவது எவ்வாறு சாத்தியமாயிற்று?

இலங்கையின் நிலப்பரப்பை எண்ணும் போது ஜனத் தொகை அதிகம் என்று சொல்ல முடியாது. தமிழ் நாட்டில் மூன்று ஜில்லாக்களின் பரப்புக் கொண்டது இலங்கை. வாழ்கின்ற மக்கள் சுமார் 67 லட்சம் பேர்தான். ஆயினும் இலங்கை பற்றாக்குறை நாடாகவே இருந்து வருகிறது. இலங்கை மக்களுக்குப் போதுமான உணவுப் பொருள் இலங்கையில் விளைவதில்லை. சமீப காலத்தில் விளைவிக்க முடியும் என்றும் எதிர்பார்க்கவில்லை.

இந்த நிலைமையில் இலங்கையில் தற்சமயம் உணவுத் தட்டுப்பாடு கிடையாது. எல்லா மக்களுக்கும் பசி தீர உண்பதற்கு வேண்டிய உணவு கிடைத்து வருகிறது. அதுமட்டுமல்ல; அரிசி கடன் கொடுப்பதற்கு வேண்டிய வசதியும் இருக்கிறது.

இவ்வளவு திருப்திகரமான நிலைமை இலங்கையில் தற்சமயம் குடி கொண்டிருப்பதற்குக் காரணங்கள் என்னவென்று விசாரித்துப் பார்த்தபோது பின்வரும் காரணங்கள் தெரிந்தன :—

1. உணவுத் திட்டத்தை முன் ஜாக்கிரதையுடன் சரியாக வகுத்து அமுல் நடத்துகிறார்கள். உணவுத் தேவை இவ்வளவு தான் என்பதைச் சரியாக நிர்ணயித்துக் கொண்டு, அதில் பற்றாக் குறைக்குப் பர்மாவிலிருந்து அரிசியும் ஆஸ்திரேலியாவிலிருந்து கோதுமை மாவும் தருவித்துக் கொள்கிறார்கள். உணவுப் பங்கீட்டு முறை புகாருக்கு இடமின்றிச் சரிவர அமுல் நடத்தப்பட்டு வருகிறது. இது குறித்து இலங்கை அரசாங்கத்தை நாம் கட்டாயம் பாராட்டியே தீர வேண்டும்.



கொழும்பில் ஸ்ரீ பி. வி. கதிர்வேலு செட்டியார் பிரபல வர்த்தகர்; ஸ்ரீ கைலாசநாதர் கோவிலைப் புதுப்பிக்கும் திருப்பணி செய்தவர்.

உணவு இலாகா இவ்வளவு திறமையுடன் நிர்வகிக்கப்பட்டு வருவதற்குப் பொறுப்பாளியான அதிகாரி ஸ்ரீ ஆள்வாப் பிள்ளை என்னும் தமிழர்தான் என்று அறிந்தபோது எனக்கு இரு மடங்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. இலங்கையில் நான் சந்தித்துப் பேசிய நண்பர்களில் ஸ்ரீ ஆள்வாப் பிள்ளை அவர்களின் திறமையைப் பாராட்டாதவர் யாரும் இல்லை என்றே சொல்லலாம்.

2. இலங்கை வாசிகள், — (சிங்களவர், இந்தியர்கள், தமிழர்கள் அனைவரும்) அரிசியின் அடிமைத் தனத்திலிருந்து விடுதலை பெற்றிருக்கிறார்கள். 'அரிசியே கதி – அரிசிச் சோறு இல்லாவிட்டால் உயிர் வாழ முடியாது' என்ற மனப்பான்மை இலங்கையில் கிடையாது. ஆஸ்திரேலியாவிலிருந்து வரும் கோதுமை மாவைக் கொண்டு நல்ல முறையில் உயர்ந்தரகமான ரொட்டி (Baker's Bread) இலங்கையில் எங்கும் செய்யப்படுகிறது. ரொட்டிக் கிடங்குகள் (Bakery) எங்கெங்கும் ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றன. இலங்கையில் சாதாரணக் கடையில் வாங்கும் ரொட்டி சென்னையில் ஸ்பென்ஸர் கம்பெனியில் வாங்கும் ரொட்டியை விட மேலாயிருக்கிறது. எல்லோரும் ரொட்டி சாப்பிடப் பழகிக் கொண்டிருக்கிறார்கள்.

வாரத்துக்கு ஒரு படி அரிசிதான் ஒவ்வொருவருக்கும் ரேஷன். இந்த ஒரு படி அரிசியின் விலை ஆறு அணாதான். ஒரு படி அரிசியோடு ரொட்டி, கறி காய்கள், கிழங்குகளைக் கொண்டு திருப்தியாகச் சாப்பாடு நடந்து விடுகிறது.

அதிகப்படியாக அரிசி வேண்டுகிறவர்கள் பகிரங்கமாக வேறு கடைகளில் வாங்கிக் கொள்ளலாம். இலங்கையில் விளையும் அரிசிக்குக் கட்டுப்பாடு இல்லை. விலை நிர்ணயமும் இல்லை. ஒரு படி இலங்கை அரிசியின் விலை சுமார் ஒரு ரூபாய். ஆகையால் அதிகம் பேர் இந்த விலைக்கு இலங்கை அரிசி வாங்குவதில்லை.

ரேஷன் கடை அரிசியைப் பர்மாவிலிருந்து இலங்கை சர்க்கார் தருவிக்கிறார்கள். வாங்கிய விலையைக் காட்டிலும் மிகக் குறைந்த விலைக்கே கொடுக்கிறார்கள். இதில் ஏற்படும் வித்தியாசத்துக்கு இலங்கை சர்க்கார் உதவிப் பணம் (Subsidy) கொடுத்து உதவுகிறார்கள். அதாவது நஷ்டத்தைச் சர்க்கார் கணக்கில் எழுதி விடுகிறார்கள். இந்த நஷ்டத்தைப் பொறுத்துக் கொள்ளும் பண வசதி இலங்கை சர்க்காருக்கு இருக்கிறது.

3. இலங்கை சர்க்கார் இலங்கையின் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்யப் பர்மாவிலிருந்து அரிசியும் ஆஸ்திரேலியாவிலிருந்து கோதுமை மாவும் தருவிக்கிறார்கள். இதற்காக அந்த நாடுகளுக்கு இலங்கை சர்க்கார் பணம் அனுப்புவது அவசியம் அல்லவா?

இந்தியாவில் நாம் வெளி நாடுகளிலிருந்து உணவுப் பொருள் தருவிப்பதை நிறுத்தப் பார்க்கிறோம். வெளி நாடுகளிலிருந்து உணவுப் பொருள் தருவித்து அதற்காகப் பணம் அனுப்பினால் இந்தியாவின் பொருளாதார நிலையை அது பாதிக்கிறது. ஆகையால் உணவு இறக்குமதியை நிறுத்த வேண்டும் என்று நமது தலைவர்கள் சொல்கிறார்கள்.

ஆனால் இந்த மாதிரி கவலை இலங்கை சர்க்காருக்குக் கிடையாது. இலங்கையிலிருந்து தேயிலையும், ரப்பரும் ஏராளமாக அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது. இதற்காக அயல் நாடுகளிலிருந்து ஏராளமான பணம் இலங்கைக்கு வரவேண்டியதாயிருக்கிறது. இப்படி வர வேண்டிய தொகையில் ஒரு பகுதியை அரிசியும் கோதுமை மாவும் தருவித்துக் கொள்ள உபயோகப் படுத்துகிறார்கள். இதனால் இலங்கை சர்க்காரின் பொருளாதார நிலைமை பாதிக்கப் படுவதில்லை.

அரிசியும் கோதுமை மாவும் தேவைக்குக் கொஞ்சம் அதிகமாகவே, தருவித்து வைத்திருக்கிறார்கள். எனவே, பத்தாயிரம் டன் அரிசி இப்போது கடன் கொடுத்துப் பிறகு திரும்பப் பெற்றுக் கொள்வதில் இலங்கை சர்க்காருக்கு யாதொரு கஷ்டமும் இல்லை. ஒரு வேளை கொஞ்சம் சௌகரியங்கூட இருக்கலாம்.

"இந்தியாவில் பஞ்சம் தாண்டவமாடியபோது நாங்கள்தானே உதவி செய்தோம்? இங்கே நீங்கள் கொஞ்சங் கூட நன்றியில்லாமல் எதிர்க்கிறீர்களே?" என்று இலங்கையிலுள்ள ஏழரை லட்சம் ஏழை இந்தியத் தொழிலாளிகளுக்கு எடுத்துச் சொல்லலாம். "உங்களுடைய தலைவர்களைத் துரத்தி விட்டு எங்களையே தலைவர்களாக வைத்துக் கொள்ளுங்கள்!" என்றும் சொல்லலாம். யார் கேட்பது?

* * *

ஏழரை லட்சம் ஏழை இந்தியத் தொழிலாளர் என்று சொன்னதும், முக்கியமான ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வருகிறது.

இலங்கை இன்று இவ்வளவு செல்வத்தில் சிறந்த நாடாயிருப்பதற்குக் காரணமானவர்கள் யார்? இலங்கையின் செல்வத்துக்கு அடிப்படை என்ன? பர்மாவிலிருந்தும், ஆஸ்திரேலியாவிலிருந்தும் தருவிக்கும் உணவுப் பொருளுக்கு அலட்சியமாகப் பணம் கொடுக்கக்கூடிய நிலைமையில் இன்று இலங்கை எதனால் இருக்கிறது?

இலங்கையின் செல்வச் செழிப்புக்குக் காரணம் அதன் வியாபாரப் பெருக்கம். இலங்கையின் வியாபாரப் பெருக்கத்துக்குக் காரணம் தேயிலையும் ரப்பரும். தேயிலை–

ரப்பர் தோட்டங்களில் ஆதி நாளிலிருந்து உழைத்துப் பாடுபட்டு வளர்த்தவர்கள் இந்தியாவிலிருந்து, முக்கியமாக, தமிழ் நாட்டிலிருந்து இலங்கைக்குச் சென்றுள்ள தொழிலாளிகள்.

தேயிலையும் ரப்பரும் இலங்கையில் நிரம்ப உற்பத்தியாகிறது. பல தேசங்களுக்கும் போகிறது. அவற்றுக்கு நல்ல விலையும் கிடைக்கிறது. ஆகையால், ஸ்டர்லிங்—டாலர் நாணயங்களில் இலங்கைக்குப் பணம் வரவேண்டியதாகிறது. அந்தப் பணத்தில் ஒரு பகுதியைக் கொண்டு அரிசியும் கோதுமை மாவும் வேண்டிய அளவு தருவிக்க முடிகிறது.

இந்தச் சுபிட்சமான நிலைமைக்கு ஆதி காரணமானவர்களும், இன்று வரை காரணமாயிருப்பவர்களும் ஏழரை லட்சம் இந்தியத் தொழிலாளர்கள்தான்.

இலங்கையில் மூன் தலைமுறைகளில் வேலை செய்யப் போனவர்களும் அவர்களுடைய சந்ததிகளுமாக இன்று ஏழரை லட்சம் தமிழ் நாட்டுத் தொழிலாளிகள் இலங்கையில் இருக்கிறார்கள். இவர்களைப் பின் தொடர்ந்து சென்று வியாபாரம் முதலிய தொழில்களில் ஈடுபட்டவர்கள் ஒரு லட்சம் பேர் இருக்கிறார்கள்.

இந்த எட்டரை லட்சம் இந்தியர்களை—பெரும்பாலும் தமிழர்களை—அங்கிருந்து ஜனப்பி விட இலங்கை சர்க்காரின் மந்திரிகள் பலவித உபாயங்களைக் கையாண்டு வருகிறார்கள். பற்பல சூழ்ச்சித் திட்டங்கள் வகுக்கிறார்கள்.

'முக்கியமாக இந்தியர்களுடைய பிரஜா உரிமையையும் வோட்டுரிமையையும் பறித்து விடக் கூடிய சட்டங்களைச் செய்திருக்கிறார்கள்.

இத்தனை வருஷங்கள் இலங்கையில் தொடர்ந்து வசித்தவர்களுக்கு மட்டுமே இலங்கைப் பிரஜா உரிமை உண்டு என்றும், அதற்கு அவர்கள் அத்தாட்சி காட்டி ருசுப் படுத்த வேண்டும் என்றும் விதித்திருக்கிறார்கள்.

இந்தக் கடுமையான சட்டத்தின் படியும் இலங்கையின் பிரஜா உரிமை பெறக் கூடிய இந்தியர்கள் லட்சக் கணக்கானவர்கள் உண்டு. ஆனால் அதற்குரிய தஸ்தவேஜுகளைத் தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வந்து கொடுத்துப் பதிவு செய்து கொள்வதென்பது பெரும்பான்மை எழுதப் படிக்கத் தெரியாத ஏழைத் தொழிலாளர்களுக்கு அசாத்தியமான காரியம்.

படிக்கத் தெரிந்தவர்களும் உலகம் அறிந்தவர்களுமான மனிதர்களுக்குத் தற்காலிகமாக இலங்கை போய்விட்டு வருவதற்குரிய பத்திரங்களைப் பூர்த்தி செய்து, அதிகாரிகள் கேட்கிற கேள்விகளுக்குப் பதில் ;சொல்லி, நிபந்தனைகளை நிறைவேற்றி விட்டுப் போய் வருவது பிரம்மப் பிரயத்தனமாயிருக்கிறது.

எழுதப் படிக்கத் தெரியாத தோட்டத் தொழிலாளி ஒருவர் தம்மை இலங்கைப் பிரஜையாகப் பதிவு செய்து கொள்வதற்காகப் பூர்த்தி செய்ய வேண்டிய பாரங்களைப் பார்த்தால் நாம் மூர்ச்சை போட்டு விழுந்து விடுவோம். அதற்குரிய இதர தஸ்தவேஜுகளைக் கொண்டு வரும்படி சொன்னால் "வேண்டாம்! வேண்டாம்! எங்களுக்குப் பிரஜா உரிமையே வேண்டாம்! சும்மா விட்டால் போதும்!" என்று கதறுவோம்.

அவ்வளவு பயங்கரமான சோதனையை இந்தியத் தொழிலாளிகளுக்கு இலங்கை சர்க்கார் ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

அந்தச் சோதனையில் அவர்கள் தேறுவதற்காகப் பெருமுயற்சி புரிந்துவரும் சில தலைவர்களை இலங்கையிலுள்ள இந்திய மக்கள் பெற்றிருக்கிறார்கள். இது அவர்களுடைய பாக்கியம்.

இத்தகைய இந்தியத் தலைவர்களில் சிலரை இலங்கையில் நான் சந்தித்தேன். ஸ்ரீ ராஜலிங்கம், ஸ்ரீ தொண்டைமான், ஸ்ரீ குமாரவேல், ஸ்ரீ சுப்பையா, ஸ்ரீ சோமசுந்தரம், ஜனாப் அஸீஸ் ஆகியவர்களைப் பார்த்துப் பேசினேன்.

ஏழரை லட்சம் இந்தியத் தொழிலாளிகள் பிறப்புரிமை, வோட்டுரிமை உள்பட எல்லா உரிமைகளையும் இழந்து அடியோடு சர்வ நாசம் அடையாமல் தடுத்துக் கொண்டு நிற்பவர்கள் இந்த ஒரு சில இந்தியத் தலைவர்கள்தான்.

சில நாளைக்கு முன்பு இலங்கை மந்திரிகளில் ஒருவரான ஸ்ரீ குணசிங்கா என்பவர் இந்தத் தலைவர்களைப் பற்றிப் பேசியது பத்திரிகைகளில் வெளியாகியிருந்தது.

"இந்தியத் தொழிலாளிகளே! ராஜலிங்கத்தையும், தொண்டைமானையும், சுப்பையாவையும் நம்பாதீர்கள். அவர்களை நம்பினால் அழிந்து போவீர்கள். அவர்களுடைய திட்டம் எதுவும் உருப்படாது!" என்று ஸ்ரீ குணசிங்கா எச்சரித்திருக்கிறார்.

ஒரு ராஜலிங்கமும், ஒரு தொண்டைமானும், ஒரு சுப்பையாவும் இல்லாமற் போயிருந்தால் இலங்கையின் சகல வளங்களுக்கும் காரணமான ஏழரை லட்சம் தமிழர்களை இலங்கை சர்க்கார் ஓட்டைக் கப்பலில் ஏற்றிக் கடலிலே விட்டிருப்பார்கள்.

ஸ்ரீ ராஜலிங்கத்துக்கும் ஸ்ரீ தொண்டைமானுக்கும் ஸ்ரீ சுப்பையாவுக்கும் மற்றும் அவர்களுடைய சகாக்களுக்கும் ஏழரை லட்சம் தோட்டத் தொழிலாளர் மட்டுமின்றித் தமிழ்நாடே மிகவும் கடமைப் பட்டிருக்கிறது. (தொடரும்)

**அட்டைப்பட விளக்கம்**

# தீனர்களின் தொண்டர்

இலங்கையில் சில காலம் இருந்து பழக்கப் பட்டவர்களின் முன்னால் கடவுள் தோன்றி, "உனக்கு இலங்கையில் ஒரு தேயிலைத் தோட்டமும் அதன் நடுவில் ஒரு பங்களாவும் வேண்டுமா ! அல்லது சொர்க்க லோகத்தில் இடம் வேண்டுமா !" என்று கேட்டால், "சொர்க்க லோகத்தில் இடம் வேண்டாம்; இலங்கையில் ஒரு தேயிலைத் தோட்டமே போதும் !" என்றுதான் அநேகமாகப் பதில் கிடைக்கும்.

தீனர்களின் தொண்டரான ஸ்ரீ கே. ராஜலிங்கம் அவர்களிடம் மேற்கண்ட அதே கேள்வியைக் கேட்டால், "எனக்குச் சொர்க்கமும் வேண்டாம்; தேயிலைத் தோட்டமும் வேண்டாம். தேயிலை ரப்பர் தோட்டங்களில் வேலை செய்யும் ஏழைத் தொழிலாளிகளுக்குத் தொண்டு செய்யும் பாக்கியம் கிடைத்தால் போதும் !" என்று கணமும் தயங்காமல் பதில் சொல்லுவார்.

தமிழ் நாட்டிலிருந்து இலங்கைத் தோட்டங்களில் வேலை செய்யச் சென்றவர்களின் மூன்றாவது தலை முறையில் பிறந்தவர் ஸ்ரீ கே. ராஜலிங்கம். இலங்கை அரசாங்கத்தின் தற்போதைய கடுமையான சட்டங்களின்படி பார்த்தாலும் ஸ்ரீ ராஜலிங்கம் இலங்கை நாட்டின் வம்சாவளிப் பிரஜை என்ற உரிமை பெறுகிறார்.. சிங்களவர்களுக்கு எல்லாவிதத்திலும் சமமான சகல உரிமைகளும் அவருக்கு உண்டு. கல்வி கேள்வியும் பேச்சுத் திறனும் நிட்சண்யமான அறிவும் படைத்தவராதலால் இலங்கை சர்க்காரோடு ஒத்துழைக்க மனம் கொண்டால் பெரிய பதவிகளையும் உத்தியோகங்களையும் அவர் பெறலாம். ஆனால் அத்தகைய சுயநலப் பாதையில் செல்ல அவர் விரும்பவில்லை. பல ஆண்டுகளுக்கு முன்னர், இளைஞரா யிருந்தபோதே தியாக வாழ்க்கையையும் தொண்டு நெறியையும் மேற்கொண்டார்.

1927-ம் வருஷம் மகாத்மா காந்தி இலங்கைக்கு விஜயம்செய்தபொழுது ஸ்ரீ ராஜலிங்கம் பதினெட்டுப் பிராயத்து இளைஞர். காந்திஜியின் ஆத்ம சக்தி இளைஞர் ஸ்ரீ ராஜலிங்கத்தை ஆட்கொண்டது. உடனே கல்விச்சாலையில் படிப்பதை நிறுத்திப் பொது சேவையில் ஈடுபட்டார். சிலகாலம் பள்ளிக்கூட ஆசிரியராக இருந்து தொண்டாற்றினார். தோட்டத் தொழிலாளிகளின் குழந்தைகளுக்கென்று பூசலாவையில் சரஸ்வதி வித்யாலயத்தை ஆரம்பித்து நடத்தி வந்தார். இந்து வாலிபர் சமாஜம், இந்திய சேவாசங்கம், போஸ் சங்கம், அகில இலங்கை இந்திய வாலிபர் சங்கம் முதலிய ஸ்தாபனங்களின் மூலம் இந்தியத் தொழிலாளிகளின் வாழ்க்கை நிலையை உயர்த்துவதற்காக அரும் பாடு பட்டு வந்தார்.

1932-ம் வருடத்தில் பண்டித ஜவாஹர்லால் நேரு இலங்கைக்கு விஜயம் செய்திருந்தபோது இலங்கை இந்தியக் காங்கிரஸ் என்னும் மாபெரும் ஐக்ய ஸ்தாபனத்துக்கு அங்குரார்ப்பணம் செய்தார். அந்த ஸ்தாபனத்துக்கு ஸ்ரீ கே. ராஜலிங்கம் முதல் காரியதரிசி ஆனார். அதிலிருந்து பொதுத் தொண்டுக்கே தம் வாழ்வை முழுதும் அர்ப்பணம் செய்தார்.

இலங்கை இந்தியக் காங்கிரஸின் தலைமைப் பதவியை ஸ்ரீ பெரிசுந்தரம், ஜனாப் அஸீஸ், ஸ்ரீ தொண்டைமான் முதலியவர்கள் புகழுடன் வகித்திருக்கிறார்கள். இரண்டு வருஷங்களுக்கு முன் அப்பதவியை ஸ்ரீ ராஜலிங்கம் ஏற்றுக் கொண்டார். முன் அப்பதவி வகித்தவர்கள் எல்லாரையும்விட வயதில் இளைஞர் ஸ்ரீ கே. ராஜலிங்கம். ஆனால் அவருடைய காலத்திலேதான் இலங்கையில் வாழும் இந்தியர்களுக்கு எதிர்பாராத பிரம்மாண்டமான கஷ்டங்கள் ஏற்பட்டன. இந்தியர் பிரஜா உரிமைச் சட்டம், குடியேற்றத் தடைச் சட்டம், செலாவணிக் கட்டுப்பாட்டுச் சட்டம் முதலிய பல அஸ்திரங்களை இலங்கை சர்க்கார் இரண்டு ஆண்டுகளுக்குள் அடுத்தடுத்து ஏவினார். இவ்வளவு அஸ்திரங்களையும் எதிர்த்துத் தியாகத்தையும் தர்மத்தையுமே துணையாகக் கொண்டு இந்திய மக்களின் சார்பாகப் போராடும் பொறுப்பு ஸ்ரீ ராஜலிங்கம் அவர்களுக்கு ஏற்பட்டது. இந்தப் போராட்டத்தின் போக்கைக் கவனித்து வந்திருப்பவர்களுக்கு இலங்கையில் உள்ள எட்டரை லட்சம் இந்தியர்களும் ஸ்ரீ கே. ராஜலிங்கத்தினிடம் வைத்த ஏகோபித்த நம்பிக்கை வீண் போகவில்லை என்பது தெரியவரும்.

இன்றைய தினம் இலங்கையிலுள்ள இரண்டு பெரிய ஸ்தாபனங்களுக்கு ஸ்ரீ ராஜலிங்கம் தலைமை வகிக்கிறார். ஒன்று, இலங்கை இந்தியக் காங்கிரஸ். இந்த ஸ்தாபனத்தில் மொத்தம் ஒன்றரை லட்சம் இந்தியர்கள் அங்கத்தினராயிருக்கிறார்கள்.

இன்னொரு ஸ்தாபனம் இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸ். இதில் மொத்தம் ஒன்றே கால் லட்சம் அங்கத்தினர் இருக்கிறார்கள். இவர்களில் சிங்களத் தொழிலாளர் சுமார் பதினாயிரம் பேருக்கு மேல் இருக்கின்றனர்.

ஸ்ரீ ராஜலிங்கம் 1909-ம் வருஷம் பிறந்தவர். எனவே அவருக்கு வயது இப்போது நாற்பது ஆகிறது. பார்த்தால் முப்பது வயது ஆனவர் என்று கூடச் சொல்ல முடியாது. ஆனால் அறுபது ஆண்டு காலத்தில் ஒருவர் செய்யக்கூடிய பொதுநலத் தொண்டுகளை அவர் செய்திருக்கிறார்.

ஸ்ரீ ராஜலிங்கம் நீடூழி வாழ்ந்து ஏழைகளுக்கும் தீனர்களுக்கும் தொண்டு புரியுமாறு இறைவன் அருளப் பிரார்த்திக்கிறோம். அவருடைய தொண்டு விரைவில் பலனளித்து இலங்கை இந்தியர்களின் தீராத் தொல்லைகள் அனைத்தும் தீருமாறு கருணை புரியவும் ஆண்டவனை இறைஞ்சுகிறோம்.

# இதய தாபம்

**வே. லட்சுமணன்**

**வா**ன வீதியில் பூமியிலிருந்து வெகு தூரத்தில் அந்த மயிற்பொறி பறந்து கொண்டிருந்தது. அற்புதமான வேலைப்பாடு காரணமாக நிஜமான ஒரு மயிலே தோகை விரித்துப் பறந்தாற் போலிருந்தது.

கதிரவன் நன்றாகக் காய்ந்து கொண்டிருந்தான் அப்போது. நடக்கக் கூடாத காரியம் நடக்கிறதே என்ற வருத்தம் ஏற்பட்டதனாலோ என்னவோ, திடீரென்று ஒரு கருமேகப் பந்தலுக்குள் அவன் புகுந்து மறைந்து கொண்டான். பகலுக்கு ஒளி செய்யும் கதிரவனுடைய மறைவு உலகில் அந்தகாரத்தைப் பரப்பியது. அவன் மறைந்ததுக்குக் காரணம் மனிதர்களுடைய மன அந்தகாரத்தைக் காணப் பயந்ததுதான்! ஆனால் அவன் மறைந்ததனால் அவன் பரப்பி வந்த ஒளியும் குறைந்து உலகம் அடர்ந்த இருட் பிழம்பாகவே தோற்றமளிக்கத் தொடங்கி விட்டது. ஆயினும் அந்த மயிற்பொறியோ ஒன்றையும் லட்சியம் செய்யாமல் ஓரே சீராக மேகங்களையெல்லாம் துளைத்துக் கொண்டு சென்ற வண்ணமாக இருந்தது. வாயு வேகத்தையும் மனோ வேகத்தையும் ஒன்றாகச் சேர்க்கத் தெரிந்த ஒரு கலைத் தச்சன் பிரம்ம சிருஷ்டியை விட மேலானதாக அப்பொறியைப் படைத்திருந்தான். அது அதைப் படைத்தவனுடைய பெருமைக்கு எடுத்துக் காட்டாய் இருந்தது.

அதுமட்டுமல்ல. இப்பொழுது வானத்திலே பறந்து செல்லும் அப்பொறி இரண்டு ஜீவன்களைப் பயங்கரமான ஆபத்திலிருந்து மீட்டுக் கொண்டு செல்கிறது.

அந்த இரண்டு ஜீவன்களுள் ஒன்று மற்றொன்றைத் தாங்கிக் கொண்டிருந்தது. அவைகள் இரண்டும் ராஜ குடும்பத்துப் புனித ஆத்மாக்கள். மகாராணி விஜயை தன் வயிற்றிலே உலகை ஆளப்போகும் ஒரு குழந்தையைத் தாங்கிக் கொண்டிருந்தாள். அவளையே அந்த மயிற்பொறி ஏந்திச் சென்று கொண்டிருந்தது.

திடீரென்று அப்பொறி ஒரு புறமாய்ச் சாய்ந்தது. பிறகு நேராகத் திரும்பியது. அதன் பின்பு மெல்லக் கீழே இறங்கியது.

மனிதர்கள் வாழ்கின்ற பூமியிலிருந்து புறப்பட்ட அந்த மயிற்பொறி கடைசியில் மனிதர்கள் எரிந்து சாம்பலாகிற மயானத்தில் இறங்கி வந்து நின்றது. இருப்பவர்களைவிட இறந்தவர்கள் நல்லவர்கள் என்ற உண்மை அந்தப் பொறிக்குத் தெரிந்திருக்கவேண்டும்!

உண்மையில் அது திடீரென்று பூமியை நோக்கி இறங்கியதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. அதனுள் அமர்ந்து வந்த மகாராணி விஜயையின் கை செய்த வேலையால் தான் அது அந்த மயானத்தில் இறங்க நேர்ந்தது. கொஞ்ச நேரத்துக்கு முன் விஜயையின் செவியில் தூரத்திலிருந்து கேட்ட முரசொலி ஒரு பூகம்ப ஆட்டத்தைக் கொடுத்தது. அதன் காரணமாக அவள் சோர்ந்து போனாள். அப்பொழுது தற்செயலாக அவளுடைய கை மயிற்பொறியின் விசையின்மேல் பட்டு விட்டதனால் தான் அது கீழ்நோக்கி இறங்க நேரிட்டது.

'காலம் ஒத்துக் கொண்டது' என்கிறார்களே, அது போல நல்ல காலத்தால் அவளுடைய கை நறுக்காகவே அந்த விசையில் பட்டது. இல்லாவிட்டால் அவளும் அவளுடைய வயிற்றில் வளரும் சேயும் கலைத் தச்சனது சிருஷ்டியான அப்பொறியின் பயங்கரமான தலைகீழ்ப் பாய்ச்சலுக்குப் பலியாகிவிட நேரிட்டிருக்கும்.

விஜயை பொறியிலிருந்து ஜாக்கிரதையாக வெளியே வந்தாள். அவள் அந்தப் பொறியில் ஏற வேண்டி வந்த நிர்ப்பந்தம், அவள் பூரண கர்ப்பமாக இருக்கும் நிலைமை ஆகிய எல்லாம் அவளைச் சிறிது நேரம் வாட்டியபடி அவள் முன்பு நின்று ஆர்ப்பரித்தன.

ஒடிந்த சுள்ளியும், சிதைந்த சிதையும், எரிந்த தீயுமாக இருந்த அப்பிரதேசத்தில் மனித சஞ்சாரம் இல்லாமல் இருப்பதில் ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஒரு புறத்தில் பயங்கரமான பிரளயப் பேரொலி எழுந்து கொண்டிருந்தது. இன்னொரு இடத்தில் வாழ்க்கையை இழந்த மாந்தரே போல் உடைந்து தூள் தூள்களாகி உருக்குலைந்து கிடந்த சட்டிச் சிதறல்கள் பயங்கர மௌனத்தைக் கடைப்பிடித்துக் கொண்டிருந்தன.

விஜயை அவற்றையெல்லாம் கொஞ்சங் கூடப் பார்க்கவில்லை அப்போது. 'மயிற்பொறியின் விசையை அஜாக்கிரதையாகத் தட்டிவிட்டோமே' என்று தனக்குள் கூறிக் கொண்டாள். அடுத்தாற் போல் அவள்

கேட்ட அந்த முரசொலியைப் பற்றி அவன் சிந்தனை சென்றது.

'ஆம்! பகைவர்கள் வெற்றி கொண்ட களிப்பில் ஆரவாரம் புரிந்து ஒலியெழுப்பும் ஓசைதான் அது! அதில் சந்தேகமேயில்லை! இந்நேரத்திற்குள் நமது அரண்மனை சின்னா பின்னப் பட்டிருக்கும்! உயிரினும் மேலாக என்னை நேசித்த மன்னர் என்ன கதியை அடைந்தாரோ, தெரியவில்லையே! ஒரு சமயம் அவர் இறந்தே போயிருப்பாரோ? பகைவனுடைய கொடு வாளுக்குத் தன் அருமந்த உயிரைப் பலி கொடுத்திருப்பாரோ! முரசொலி பகைவனுடைய வெற்றியைச் சுட்டிக் காட்டும்போது வேறென்ன நினைப்பது! அப்படியானால் நான் இனி அமங்கலிதானா? என் வயிற்றில் வாசம் செய்யும் ஜீவன் தான் பிறப்பதற்கு முன் தன் தந்தையை இழந்து விட்டதா? என்ன அநியாயம் இது!'

விஜயையின் கண்களிலிருந்து ஒன்றுக்கு மேற்பட்ட நீர் முத்துக்கள் அரும்பி அவளுடைய வயிற்றிலே தெறித்தன. அவற்றின் வெப்பத்தை அவள் உணர்ந்தாள். ஆனால் அதைவிட அதிகமாக அவள் மனம் அப்போது சுட்டுக் கொண்டிருந்தது.

திடீரென்று அவள் தரையில் மயங்கிச் சாய்ந்தாள். எங்கேயோ ஒரு சில பறவைகள் தாங்கள் உறங்கவில்லையென்று அறிவிப்பதே போல் குரல் கொடுத்தன. அதைத் தொடர்ந்து விஜயையின் வேதனைக் கதறல்கள் எழுந்தன.

கபடமும், பயங்கர மௌனமும் நிறைந்த அந்த நிர்மானுஷ்யப் பிரதேசத்தில் 'வீல்' என்ற சில குரலொலிகள் எழுந்ததற்குப் பின் 'க்வா, க்வா' என்ற இனிய குரல் கம்பீரமாய் ஒலித்தது.

அழகின் வடிவாக விளங்கிய ஓர் ஆண் குழந்தை தன் எதிரே மயானத்துத் தரையில் கிடப்பதைத் தாய் விஜயை கண்டாள். அரண்மனையில் சேடியர்கள் போட்டி போட்டுக் கொண்டு ஏவல் செய்ய மிகவும் சொகுஸாகப் பிறந்து செல்வமாக வளர வேண்டிய குழந்தையை அந்த மயானத்துப் பூமி தேவி தன் மடிமீது வைத்துக் கொண்டிருப்பதை அவளால் சிறிதும் சகிக்க முடியவில்லை. குழந்தையை மெல்லத் தூக்கினாள். துயரம் நிறைந்த அவளுடைய அந்த மனத்திலும் ஒரு பாகம் தாய்மைக்கும், மற்றொரு பாகம் குழந்தையைப் பெற்ற மகிழ்ச்சிக்கும் இடம் இராமல் இல்லை.

"என் கண்ணே! ராஜாதிராஜனாகப் பிரகாசிக்கப் போகும் நீ இவ்வளவு துர்ப்பாக்கிய தசையிலா தோன்றவேண்டும்!" —அதற்குமேல் அவளால் வாய்விட்டு ஒன்றும் கூற முடியவில்லை.

வாய் கூற முடியாத பல சொற்களை மனம் கூறிக் கொண்டு விடுகிறது. மனிதனுக்கு மனத்தைப் போன்ற உறவும் கிடையாது. பகையும் கிடையாது. சந்தோஷத்தை அது உணரும்போது உடலைப் பூரிக்கச் செய்கிறது. துயரத்தை உணரும்போது உடலை உருக்கிப் பழைய நினைவுகளாகிய பள்ளங்களிலெல்லாம் பாய்ந்து அலைகடலாகி ஒலிக்கிறது! அந்த மனக்கடலிலே துயர அலையின் ஓசை ஆரம்பிக்கத் தொடங்கி விட்டால், அந்தச் சந்தர்ப்பத்தில் இன்பம் அளிக்கும் எந்த வஸ்துவும் எதிரில் தட்டுப்படுவதில்லை. கண்முன் அது காட்சி தந்தபோதிலும், அதை உணர்ந்து காணக்கூடிய சக்தியைக் கண் இழந்து விடுகிறது.

விஜயையும் பழைய நினைவு அலைகளிலே சில நேரம் ஒதுக்கப்பட்டாள்.

• • •

ராஜமாபுரத்தின் புண்ணிய பூமியில் பொய், களவு, வஞ்சம் முதலிய பைசாசங்கள் எப்போதுமே நிலை காட்டியதில்லை. சச்சந்தன் என்ற வீர மன்னன் மகத்தான நீதி பரிபாலனம் செய்து கொண்டிருந்தான். ஏமாங்கத நாட்டின் திலகமாகிய ராஜமாபுரம் செல்வப் பொலிவும், அறிவுப் பிரகாசமும் பெற்று அமராவதியைப் போல் ஒளி வீசிக் கொண்டுதான் இருந்தது.

ஆனால் எதற்கும் ஒரு மாற்றம் என்பது உண்டல்லவா? அதற்குக் காரணமாகவும் ஒன்று அமையத்தானே வேண்டும்?



ராஜமாபுரம் தன்னுடைய கீர்த்திப் பிரதாபங்களையெல்லாம் இழக்கும்படியான ஒரு காலம்வந்து வாய்த்தது. அதற்குச் சச்சந்த மன்னனும் பணிந்துவிட்டான். விபரீதமும் வளர்ந்து வரத் தொடங்கியது.

அன்று ராஜ சபையில் எல்லோரும் கூடியிருந்தார்கள். சம்பிரதாய முறைப்படி மன்னன் அமைச்

சபையைப் பார்த்து, "நம் நாட்டுப் பிரஜைகள் அனைவரும் சுபிட்சமான வாழ்வை நடத்துகிறார்களா? போதிய உணவுப் பொருள்கள் கிடைக்கின்றனவா?" என்று கேட்டான்.

அமைச்சருள் ஒருவர் தம் இருக்கையிலிருந்து எழுந்தார். "அரசே! சச்சந்த மன்னர் பரிபாலனம் செய்யும் பூமியில் குறையும் உண்டா?" என்று சம்பிரதாய முறைப்படியே பதில் கூறினார்.

மன்னன் அதைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்தான். மற்றவரும் அந்தச் சந்தோஷத்தில் பங்கு கொண்டார்கள். ஆனால் ஒருவன் மாத்திரம் மகிழ்ச்சியைத் தெரிவிக்காமல் வாய் மூடியிருந்தான். அவனே சச்சந்த மன்னனால் மிகவும் கௌரவிக்கப்படுகிறவன். கட்டியங்காரன் என்ற பெயருடன் அமைச்சருள் முக்கியமான ஒருவனாய் அங்கு இருந்து கொண்டிருந்தான். சிறந்த ஊக்கமும், உடல் வலியும் உடைய அவன் மௌனம் சாதிக்கவே மன்னனுக்கு அதன் காரணத்தை அறிய ஆவல் மூண்டது.

"என்ன, கட்டியங்காரரே! உமது அபிப்பிராயம் என்ன?" என்றான் மன்னன்.

"எனக்கு மாத்திரம் அலாதியான ஒரு அபிப்பிராயமா? நம் நாட்டில் குறையேதும் இல்லை யென்பதற்காக நானும்கூட மகிழ்ச்சி கொள்கிறேன். ஆனால் இது நீடித்து இருக்க வேண்டும் என்பதையும் நாம் யோசிக்க வேண்டும் அல்லவா?" என்றான் அவன்.

"ஏன், அதற்கென்ன சந்தேகம்! உம்மைப்போன்ற மதியூகமுள்ள அமைச்சர்கள் இருக்கும்வரை எக்குறையும் உண்டாவதற்கு இடமே யில்லை யல்லவா? இருந்தாலும், நாட்டு மன்னன் எந்த நிலையில் இருக்கிறான், என்பதை உங்களில் ஒருவராவது கவனிக்காமல் இருந்திருக்க முடியாது!"



மன்னன் இவ்வாறு கூறவே கட்டியங்காரனைத் தவிர்த்து மற்ற அமைச்சர்கள், "அரசே! நாட்டு மக்களின் நலமே மன்னனின் நலம்; ஆகவே உங்களுக்கும் குறையிருக்க நியாயமில்லையே?" என்றார்கள். கட்டியங்காரன் தான் ஒரு தீர்க்கதரிசியேபோல் அவற்றை மறுத்துக் கூறினான்.

"அரசே! குடிகள் நலமே மன்னன் நலம் என்று நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் மன்னன் நலமும் குடிகளின் நலம் அல்லவா? உங்களுக்கு ஒரு குறை இருக்கிறது என்பது மட்டும் எனக்குத் தெரிகிறது. ஆனால் அந்தக் குறை என்ன என்பது எனக்குத் தெரியாது!" என்றான்.

தன் மனம் போலக் கூறிய கட்டியங்காரனைச் சச்சந்த மன்னன் மிகவும் பிரமாதமாகக் கொண்டாடினான்.

"ஆம்! நீர் கூறியதுதான் உண்மை. எனக்குள்ள ஒரு குறை யென்ன வென்றால் சிறிது காலம் கூட ஓய்வெடுத்துக் கொள்ள முடியவில்லையே யென்பதுதான். மஹாராணி விஜயையை விட்டுப் பிரிந்திருக்க முடியாத பாச நிலையில் இருக்கிறேன் நான். கொஞ்ச காலத்திற்கு நீரே அரச காரியத்தைக் கவனித்து வந்தால் எனக்கு மிகவும் சௌகரியமாக இருக்கும்" என்றான்.

இதைக் கேட்டதும் இடி தாக்கிய நாகம் போல மருண்டு கலங்கினார்கள் அனைவரும். ஒன்றும் மறுமொழி பேசாமல் தயங்கி, வெறித்துப் பார்த்தபடி நின்றார்கள்.

அப்பொழுது கட்டியங்காரன், "அரசே! பெரிய பொறுப்பை என் தலையில் சுமத்துகிறீர்களே! என்னால் நிர்வகிக்க முடியுமா என்பதே எனக்குச் சந்தேகமாயிருக்கிறது. இருந்தபோதிலும் தாங்களே கூறும்போது மறுத்துப் பேச நாக்கில்லை" என்றான் மிகவும் வினயத்துடன்.

அதைக் கேட்டதும் மன்னன் அளவில்லாத மகிழ்ச்சி கொண்டான்.

மற்ற அமைச்சர்களின் மறுப்பு மொழிகள் அவனுடைய பஞ்சடைந்த செவியில் ஏறவில்லை. அவன் கருத்தும் மாறவில்லை.

மன்னன் அந்தப்புரத்தை அடைந்தான். கட்டியங்காரன் சிம்மாஸனத்தில் அமர்ந்தான். சச்சந்தனை ஏற்றுக் கொண்ட அதே சிம்மாஸனம் கட்டியங்காரனையும் ஏற்றுக் கொள்ளத் தயங்கவில்லை!

* * *

விஜயை அழகின் சிகரங்களைப் பழிக்கும் செல்வி. பிரமன் பல காலம் நினைத்துத்



தன் மானஸீக நிலையில் உருவாக்கிய ஒரு பெண் அணங்கே விஜயையாகத் தோன்றியிருந்தாள். அங்க அழகின் பூரணக் கலையுடன் அறிவு, நற்குணம் முதலிய அழகுகளும் அவளைத் தஞ்சம் அடைந்திருந்தன. அவள் தூய சுடர் ஒளி வீசினாள். "மன்னர் எப்பொழுதும் என்னைப் பிரியாமலிருக்கிறாரே! ராஜ்யம், நீதி, ஆட்சி என்று எதுவுமே கிடையாதா?" என்பதைப் பற்றி அவள் சிந்திக்காமல் இல்லை.

ஒரு நாள் தன்னையே வெகுநேரம் பிரியாது சுற்றிக் கொண்டிருந்த மன்னரைக் கூர்ந்து நோக்கினாள் அவள். அவனது கண்களில் தாண்டவமாடிய காமதேவதையை மாத்திரம் பார்க்க முடியாத ஓர் உணர்ச்சியுடன் பார்த்தாள்.

"என்னை ஏன் இப்படிக் கூர்ந்து பார்க்கிறாய்?" என்றான் அவன்.

"உங்களையா பார்க்கிறேன், இல்லையே!"

சச்சந்தன் அதன் உட்பொருளைப் புரிந்து கொள்ள முடியாமல் விழித்தான். அநாயாசமாக அதைச் சமாளித்தான் அவன்.

"உங்கள் கண்களில் நான் என்னையல்லவா பார்த்தேன்!" என்று ஒரு போடு போட்டான்.

அப்பொழுது அவர்கள் இருவரும் உப்பரிகையில் நிலா முற்றத்தில் நின்று கொண்டிருந்தார்கள். திடீரென்று மதியை மறைத்தது கருமுகில். ஒரு சில துளிகள் தூறின. இருவரும் அங்கிருந்து நகர்ந்தார்கள்.

* * *

"விஜயா!" என்ற குரல் கேட்டது.

"உங்களை விட்டுப் போய் ஒரு விநாடிகூட ஆகவில்லையே! அதற்குள், 'விஜயா!' என்றால் என்ன செய்வாளாம் அவள்!" என்று கூறிக் கொண்டே அருகில் வந்தாள்.

"விஜயா! உனக்கு நான் ஒரு நல்ல செய்தியை இதுவரை கூறவேயில்லை. சதா நான் உன்னைப் பிரியாமலிருக்கிறேனே, ஏன் தெரியுமா?" என்றான்.

"எல்லையில்லாத பிரேமை காரணமாகக் காதலர்கள் ஒருவரை ஒருவர் பிரிய விரும்ப மாட்டார்கள்! ஏன் அதுதானே காரணம்?"

"ஊஹூம்........."

"பின்னே என்ன காரணம்?"

"மலரை வண்டு சிறிது நேரம் பிரிந்து விடுகிறது. வானத்தைச் சில காலம் வயல்கள் எதிர் பார்ப்பதே இல்லை. கன்றைத் தாய்ப் பசு கண நேரமேனும் பிரிந்து விடுகிறது. ஆனால் இயற்கையை விட்டு இறைவன் பிரிவதில்லை! அதே போல் நானும் விளங்க வேண்டும் என்றுதான் இவ்வாறு இருக்கிறேன். நீ இயற்கை. நான் இறைவன்!" என்றான்.

"அரசே! ஒரு மன்னர் நாட்டைப் பாதுகாக்க வேண்டுமல்லவா? என்னையே சதா சூழ்ந்திருந்தால், குடிகளின் அபவாதம் உண்டாகலாமல்லவா?" என்று கேட்டாள்.

"அதற்குத்தான் கட்டியங்காரனை நியமித்திருக்கிறேனே!"

"கட்டியங்காரன் ஒரு மன்னனா?"

"இல்லை......"

"அரசே! இங்கேதான் நீங்கள் தவறி விட்டீர்கள்! குடிகளுக்கு மன்னன்தான் வேண்டும்; மந்திரியல்ல" என்றாள்.

"நீ கூறுவது சரிதான். ஆனால் எனக்கு இந்த சாம்ராஜ்யத்தைவிட நீயே முக்கியமாகப் படுகிறாய்! என்ன செய்ய?"

விஜயை அப்பொழுது எதையோ நினைத்துக் கூறத் தயங்கினாள். அவள் பார்வை அவளது எண்ணத்தை அதிகமாக எடுத்துக் காட்டியது. முகத்தை மூடிக் கொண்டாள்.

"என்ன சமாசாரம்? சொல்லக்கூடாதா?" என்றான் வேந்தன் ஆவலுடன்.

"இன்னும் சில மாதங்களில்..." என்றாள் அவள். உடனே புரிந்துகொண்டான் அவன்.

"நான் தந்தையாகப் போகிறேனா!"

சந்தோஷ வெள்ளம் அவர்கள் முன்னே பெருக்கெடுத் தோடியது.

* * *

கட்டியங்காரன் கையில் ஒதுக்கப்பட்ட ஏமாங்கத நாட்டுச் செங்கோல் முன்போல் பிரகாசிக்கவில்லை யென்பதைக் கூறத் தேவையில்லை. செங்கோல் பிடிக்கும் யோக்கியதை அவனுக்கு உண்மையிலேயே இருக்குமானால் மன்னரிடமிருந்து அதைப் பெற்று நிர்வகிக்க அவன் ஒப்புக்கொண்டே இருக்க மாட்டான். அந்த நிலைமை மாறியிருந்ததனால் தான் ஆசைமேலிட்டு அரச பதவியையும் ஏற்றுக் கொண்டான். சில நாட்கள் அந்தச் சுக போகத்தில் ஊறியவன் நீடித்த போகத்தை எதிர்பார்த்தான்.

பாபாத்மாக்களைச் சுற்றி ஒரு சில நச்சுக் கொடிகள் படர்வதுண்டு. அவ்வாறே கட்டியங்காரனுக்கும் அப்பேர்ப்பட்டவன் ஒருவன் இருக்கத்தான் செய்தான். மதனன் என்னும் பெயர் படைத்த அவன் கட்டியங்காரனுடைய தீய நெறிக்குத் தீபம் காட்டினான்.

"மதனா! சச்சந்தனை இனி இந்த உலகில் வைத்திருக்க என் மனம் விரும்பவில்லை. ஏதோ ஒரு தெய்வம் என் மனத்தில் தோன்றி அவனைக் கொன்றுவிடு என்று கூறுகிறது!" என்றான்.

"தெய்வம் இதுவும் சொல்லும்; இன்னும் சொல்லும்" என்று தனக்குள் கூறிக்கொண்ட மதனன், "அப்படித் தெய்வமே கூறும்போது அதை நிறைவேற்றிவிட்டால் போகிறது" என்றான்.

* * *

நாட்கள் சில சென்றன. விஜயை அன்று மிகவும் களைப்பாகத் தென்பட்டாள். "அரசே! மன்னர் தாம் செய்யவேண்டிய காரியங்களை மறந்தால் மண்ணுலகம் வெறுக்கும். ஆகையினால் நாட்டையும் கவனியுங்கள். எல்லோரையும் விட அந்தக் கட்டியங்காரனை மிகவும் ஜாக்கிரதையாக நீங்கள் கவனித்துக் கொள்ள வேண்டும்" என்றாள்.

"உனக்கேன் இந்தக் கவலைகள் எல்லாம்? சச்சந்தனை ஒரு கோழை என்று நினைத்தாய்? அவனை இந்த உலகம் எப்போதும் போற்றத்தான் செய்யும். சிம்மாசனத்தில் இருந்தாலும், அந்தப்புரத்தில் இருந்தாலும் அவனுடைய கொற்றம் நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கும்!" என்றான்.

அவள் திடீரென்று, "எனக்கு மயக்கமாக வருகிறது" என்றாள்.

"இங்கேயே சற்று இளைப்பாறிக்கொள்" என்றான் மன்னன். அவள் கண்ணயர்ந்தாள். அவளைப் பார்த்தபடியே மனம் லயித்திருந்தான் மன்னன். திடீரென்று "நாதா, நாதா!" என்று கூவினாள். அவன் பரபரப்புடன் "என்ன?" என்றான்.

"நாதா, நான் இப்போது ஒரு கனவு கண்டேன். பயமாக இருக்கிறது" என்றாள் விஜயை. அவன் அவளை ஆசுவாசப்படுத்தினான். அவள் நெற்றியில் வியர்வை முத்துக்கள் அரும்பி யிருந்தன. தன் கையில் சாமரம் கொண்டு விசிறினான் வேந்தன்.

"நாதா! கனவில் ஒரு அசோக மரத்தைக் கண்டேன். அதை ஒருவன் கோடரியினால் வெட்டவே அது அடியோடு கீழே வீழ்ந்ததையும் கண்டேன்."

மன்னனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"இதுமட்டுமா? இன்னும் இரண்டு காட்சிகள் தொடர்ந்து கண்முன் தோன்றின. வீழ்ந்த அசோகமரத்தின் அடியில் பொன் முடியோடு கூடிய ஒரு முளை தோன்றி வளர்ந்தது. அதைத் திடீரென்று எட்டு மலர் மாலைகள் சூழவும் கண்டேன்."

சச்சந்தன் முதலில் தடுமாறினான். பின்பு சமாளித்துக் கொண்டு, "விஜயா! தோன்றிய முளை நமக்குக் குமாரன் பிறக்கப் போகிறான் என்பதையே தெரிவிக்கிறது. முளையைச் சூழ்ந்த மாலைகள் அவனை மணக்கப்போகும் எட்டு மங்கைகளையே குறிக்கின்றன!" என்றான்.

"அப்படியானால் மரம் அடியோடு வெட்டப்பட்டு விழுந்ததே! அது ஒருவேளை உங்களுக்கு......"

அவள் மயங்கி விழுந்தாள்.

அச்சமயத்தில் வாயில் காவலாளி அங்கு வேகமாக ஓடிவந்தவன், "அரசே! வந்தது கேடு! கட்டியங்காரர் வீரர்களுடன் கையில் ஆயுதம் ஏந்தி உங்களைக் கொல்ல வருகிறார். தப்பி ஓடுங்கள்!" என்றான்.

மயங்கிக் கிடந்த விஜயையின் செவியிலும் அச்சொற்கள் நாராசம்போல் பாய்ந்தன. மன்னன் பரபரப்புடன் அவளைப் பார்த்தான். தனக்கு நேர்ந்த விபரீதமான நிலைமைபற்றி அவனுக்கு அப்பொழுது ஒன்றுமே தோன்றவில்லை. எப்படியாவது விஜயையைக் காப்பாற்ற வேண்டும் என்றே கருதினான்.

ஆபத்துக் காலத்திற்கு உதவும் என்ற நோக்கத்தோடே கலைத்தச்சனால் சிருஷ்டிக்கப்பட்டிருந்த மயிற் பொறியின் ஞாபகம் சட்டென்று அவனுக்கு வந்தது. "இதில்

எதிர்கொண்டு இப்பொழுதே இங்கிருந்து நீ செல்!" என்றான் மன்னன்.

"தங்களை விட்டு நான் போகமாட்டேன்" என்றாள் விஜயை.

"நீ போய்த்தான் தீர வேண்டும். ஆபத்து முற்றி விட்டது!"

"உங்களைவிட்டு நான் எங்கே போவது?"

"உன் வயிற்றிலிருக்கும் சிசுவின் க்ஷேமத்தைக் கருதி நீ எங்கேயாவது போகத்தான் வேண்டும்!" என்று கூறி, சச்சந்தன் அவளைப் பிடிவாதமாய் மயிற்பொறியில் ஏற்றி அதன் விசையை முறுக்கி விட்டான். அது வான வீதியிலே பறந்தது.

அதற்குள் கட்டியங்காரனின் துரோகம் பூரண ஆகிருதியுடன் அவன் முன் தோன்றியது. தப்பி ஓட விரும்பாத தூய வீரனான சச்சந்த மன்னன் அந்தப்புரத்தின் உள்ளே தானொருவனாக நின்று எதிரிகளையெல்லாம் எதிர்த்தான். ஆனால் ஒருவனாக இருக்கும் அவனைப் பலராகக் கூடியிருந்த பகைக்கூட்டம் வென்றது. கட்டியங்காரனின் வேல் பாய்ந்த மார்புடன் சச்சந்தன் கீழே விழுந்தான். ஒன்றையும் லட்சியம் செய்யாத கட்டியங்காரன், "வெற்றி முரசை ஒலிக்கச் செய்யுங்கள்!" என்று கூவினான். முரசொலியும் எழுந்தது! வான வீதியில் மயிற்பொறியில் சென்ற விஜயையின் செவியிலும் பயங்கரமாய்க் கேட்டது அது.

* * *

சிறு மழைத் தூறல்கள் தூறவே தன் நினைவுகளிலிருந்து சற்றே விலகினாள் விஜயை. எதிரே குழந்தை தரையில் கிடப்பதைக் கண்டு மெல்லக் கையில் எடுத்தாள்.

"தங்க விக்ரகம் போன்ற இந்தக் குழந்தையை நான் எப்படி வளர்ப்பேன்! கணவனை இழந்து, நாட்டை இழந்து இந்த மயான வாசியாகிவிட்ட எனக்கு இனி வாழ்வுதான் ஏது! துறவு பூண்டு எங்கேயேனும் சுற்றித் திரிந்து வாழ்வதைத் தவிர எனக்கு வேறு மார்க்கம் ஏதும் இல்லையே!" என்று தனக்குள் புலம்பினாள்.

அச்சமயம் யாரோ அங்கு வருகிற மாதிரி சத்தம் கேட்டது. உடனே பரபரப்பாக எழுந்தாள். என்ன நினைத்தாளோ, சச்சந்தன் பெயர் பதித்த ஆழி ஒன்றை அக்குழந்தையின் பெருவிரலில் சூட்டி விட்டு அங்கிருந்து நீங்கி ஒரு புதருக்குள் மறைந்து நின்றாள். குழந்தை தனியே கிடந்தது.

அப்பொழுதுதான் தம்முடைய ஒரே மகனைப் புதைத்து விட்டுத் தீராத் துயருடன் ஒரு வாணிகர் வந்து கொண்டிருந்தார். விஜயை அவர் வருகையை மிகவும் ஆவலோடு மறைந்தபடியே கவனித்துக் கொண்டிருந்தாள். "என் குழந்தை எங்கே வளர்ந்தாலும் சரி; பெற்ற பிள்ளையைப் பிரிந்த பாதகம் எனக்கு வந்தாலும் சில காலம் குழந்தை விலகி யிருப்பதே மேல். தகப்பனை மிஞ்சிய வீரத்துடன் தன் நாட்டைத் திரும்பவும் பெற்று அவன் ஜகஜ்ஜோதியாக வாழ்ந்தால் அதுவே என் பாக்கியம்!" என்று தனக்குள் கூறிக் கொண்டவள் குழந்தை அருகில் அந்த வாணிகர் வந்து விட்டதை அறிந்தாள். அவரோ மிகவும் வருத்தத்தோடு வருவதால் அவர் கண்களின் பார்வையைக் கண்ணீர் மறைத்திருந்தது. அதன் இடையே தரையில் கிடக்கும் குழந்தை அவருக்குத் தென்படவில்லை. அதனால் அவர் குழந்தையைத் தாண்டிச் செல்லத் தொடங்கினார்.

விஜயைக்கு அது பேரிடி தாக்கியதுபோல் இருந்தது. குழந்தை இருக்குமிடத்தைக் கடந்து அவர் மேற்கொண்டு எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியையும் அவள் மிக்க சோகத்தோடு பார்த்தாள். "அவர் எப்படியாவது குழந்தையை எடுத்துக் கொண்டு போய் வளர்க்க மாட்டாரா?" என்ற இதய தாபம் அவளை அதிகமாய் வாட்டி வதக்கியது. அப்பொழுது அவள் இதயதாபத்தைத் தடுத்து நிறுத்தியது குழந்தையின் தும்மல் சப்தம்.

வாணிகர் திரும்பினார். 'சுடுகாட்டில் மயானப் பிரதேசத்தில் தும்மல் சப்தம் கேட்பதா? என்ன ஆச்சரியம்!' என்று பரபரப்போடு திரும்பி நோக்கினார். அங்கே குழந்தை ஒன்று கிடப்பது அவரது பார்வையில் பட்டது. உடனே அதன் அருகில் சென்றார். "ஜீவ!" என்று ஓர் அசரீரி அங்கே ஒலிப்பதுபோல் அவருக்கு உணர்ச்சி ஏற்பட்டது. "ஆம்! இந்த ஜீவன் சிரஞ்சீவனாய் வாழப் போகிறான்! இக்குழந்தை இறைவன் எனக்களித்த பரிசு. ஒரு மகனை இழந்தேன். உடனே மறுமகனை அடைந்து விட்டேன்! ஆகா! ஈசனது விளையாட்டைத்தான் என்னென்பேன்!" என்று கூறி குழந்தையைத் தூக்கிக் கொண்டார்.

புதரின் மறைவிலிருந்த விஜயையின் கண்கள் அக்காட்சியையே கூர்ந்து நோக்கின. வாணிகர் குழந்தையுடன் சென்றார். அவர் சென்ற திசையையே நோக்கியபடி வெறித்து நின்றாள் அவள். குழந்தையின் உருவமும் வாணிகரின் தோற்றமும் மறையும் வரை நின்று கொண்டிருந்தாள்.

அதன் பிறகு அவள் அங்கே நிற்கவில்லை. அவள் கால்கள் தம்மிஷ்டப்படிக்கு அவளை இழுத்துக் கொண்டு சென்றன. அவள் போன பின்பு அவளுடைய அணிகலன்கள் எல்லாம் கீழே சிதறிக் கிடந்தன.

# ஆரோக்கிய ரகசியம்

### வி. என். குமாரஸ்வாமி

## 5. பத்மாசனம் பழகும் வகை

மிருதுவான விரிப்பின் மேல் உட்கார்ந்து இரண்டு கால்களை நீட்டவும். வலது காலை மடக்கி, இரண்டு கைகளால் வலது பாதத்தைத் தூக்கி இடது தொடையின்மேல் அடி வயிற்றில் குதிக்கால் ஒட்டினாற் போல அமர்த்தவும். பிறகு இடது காலை மடக்கிக் கைகளின் உதவியால் இடது பாதத்தை வலது தொடையின்மேல் குதிக்கால் அடி வயிற்றில் ஒட்டினாற் போல் வைக்கவும். இரண்டு பாதங்களும் மேல் நோக்கி இருக்க வேண்டும். மடக்கின முழங்கால்கள் தரையில் ஒட்டியிருக்க வேண்டும்.

இது சிலருக்குச் சுலபமாக வந்துவிடும். சிலருக்கு ஒரு காலை மட்டும் தூக்கித் தொடையின் மேல் போடமுடியும். மறு காலைத் தூக்கிப் போட முடியாது. சிலர் பின்னுக்குச் சாய்ந்து விடுவார்கள். சிலருக்கு ஒரு காலைத் தூக்கிப் போட்டு, மறு காலைத் தூக்கும்போது, முன் போட்டது கழன்றுவிடும். அப்படி இரு கால்களையும் தூக்கிப் போட்டாலும் அடி வயிற்றில் ஒட்டாது. கணுக்கால் நரம்புகள் சுரீல் என்று வலிக்கும். சிலருக்குத் தொடையை வலிக்கும். தொடைநரம்புகள் இழுக்கும். சிலருக்குப் பத்மாசனம் போடக் கால்கள் சரியாக வந்தாலும், இரண்டு முழங்கால் முட்டிகளும் தரையில் ஒட்டாது தூக்கிக்கொண்டு நிற்கும்.

இவைகளெல்லாம் பழகப் பழக மெதுவாக மறைந்துவிடும். வலிக்கிறதே என்று விட்டுவிடக் கூடாது. சிலருக்குக் கால் நரம்புகள் விறைப்பாய் இருக்கும். விடா முயற்சியுடன் பழகினால் நரம்புகளின் பிடிப்பு விடும். சதைகள் தளர்ந்து கொடுக்கும். முதலில் சில விநாடிகள்தான் பத்மாசனத்தில் இருக்கமுடியும். பிறகு ஒரு நிமிஷம் இரண்டு நிமிஷம் என்று நாளுக்கு நாள் அதிகமாக்கிக் கொண்டே போகலாம். பிறகு உட்காரும்போதெல்லாம் இந்த ஆசனத்திலேயே உட்காரப் பழகிக்கொண்டால், நம்மை அறியாமலேயே ஆரோக்கியத்திற்கு விதை யிட்டவர்களாகிறோம். கால் மணி நேரமோ, அரைமணி நேரமோ பத்மாசனத்தில் உட்கார்ந்தால் சற்று கால் வலிக்கும். திமிர் பிடித்தாற்போல் இருக்கும். கால்களைக் கழட்டி, ஐந்து நிமிஷத்திற்குப் பின் மறுபடியும் பத்மாசனம் போட்டுக் கொண்டு உட்காரலாம். பத்மாசனத்திற்கென்று தனியாக நேரம் வேண்டியதில்லை. எப்பொழுதும் எந்த நேரத்திலும் உட்காரலாம். படிக்கும் போதும், பேசும்போதும், எழுதும் போதும், இந்த ஆசனத்தில் உட்காரலாம். பெண்மணிகளும் செய்யலாம்.

“கால்மேல் கால் போட்டு உட்காருவது மரியாதைக் குறைவல்லவா? பெரியோர்கள் முன் எப்படி உட்காருவது?” என்று கேட்கலாம். அவர்களுக்கும் இதன் நன்மைகளை எடுத்துச் சொன்னால் தப்பபிப்பிராயப் படமாட்டார்கள். போகும் இடங்களில் உட்கார வேண்டுமானால் பாதத்தைச் சொக்காயினாலோ அல்லது அங்கவஸ்திரத்தினாலோ மூடிவிட்டால் யாருக்கும் தெரியாது. அப்படியும் தெரிந்து கேட்டால், அவர்களையும் பத்மாசனம் போடச் செய்யலாம். பெண்கள் புடவைத் தலைப்பால் மூடிக் கொள்ளலாம்.

இரண்டு கால்களையும் முன் நீட்டிப் பிறகு ஒவ்வொன்றாய்த் தூக்கிப் போடுவது முறையானாலும், பொது இடங்களிலும் மற்றவர்களின் முன்பும் இப்படிப் போட முடியாது. ஆகையால் வெறுமனே உட்கார்ந்தாற் போலவே கால்களைத் தூக்கிப் போட்டுக் கொள்ளலாம். அதனால் கெடுதல் ஒன்றுமில்லை.

இதை எல்லா நேரங்களிலும் செய்யலாமானதினால், இதற்கென்று தனி உடை வேண்டியதில்லை. சாதாரணமாய் அவரவர்கள் உடுத்தும் உடையில் இருந்தவாறே செய்யலாம். இதைச் சிறுவர்கள், வாலிபர்கள், வயதானவர்கள், பெண்கள் எல்லோரும் போடலாம்.

பெண்கள் மட்டும் மாதவிடாய் காலங்களில் செய்யக் கூடாது. மற்ற நாட்களில் பத்மாசனம் போடலாம். ஆசனங்கள் பழகாத ஸ்திரீகள் கர்ப்பிணியாக இருந்தால், எந்த ஆசனமும் புதிதாய்ப் பழகக் கூடாது. வழக்கமாய் ஆசனங்கள் பழகிக் கொண்டு வந்து, கர்ப்பமானால் சில ஆசனங்கள், சில மாதங்களில் தள்ள வேண்டி யிருக்கும். அவைகளை அந்தந்த ஆசனங்களின் போது விவரமாய்ச் சொல்லுகிறேன்.

ஆசனம் போட்டுப் பழகிய ஸ்திரீகள் கர்ப்பமானால் எட்டு மாதங்கள் வரை பத்மாசனம் போடலாம். அதற்குப் பிறகு பத்மாசனம் போடக் கூடாது.

தியானத்தில் இருக்கும்போதும், பூஜை செய்யும்போதும், பிராணாயாமம் செய்யும் போதும், ஜபம் செய்யும்போதும், பத்மா



கிக் கொண்டிருப்பதால் வயிற்றுக்கோளாறு ஒழிந்து போகும்.

• • •

ஒருவருக்கு வயிற்று நோய் இருந்தது. அவர் பத்மாசனத்தை மட்டும் போட்டு வந்தார். எங்கு உட்கார சமயம் ஏற்பட்டாலும் பத்மாசனத்திலேயே உட்கார்ந்து வந்தார். சில மாதங்களில் அவர் வயிற்று நோய் ஒழிந்து விட்டது. இதை அவர் சொல்லும்போது எனக்கே ஆச்சரியமாக இருந்தது. "வேறு ஆசனங்களும் பழகினீர்களா?" என்று கேட்டேன். "இல்லை; வெறும் பத்மாசனமே உட்காரும் போதெல்லாம் போடுகிறேன். அதிலேயே இவ்வளவு சுகம் கண்டேன். இனி இதை விடப் போவதில்லை" என்று மகிழ்ச்சி பொங்கச் சொன்னார்.

வெறும் பத்மாசனத்திற்கே இவ்வளவு மகிமை இருக்கிறது. அதனால்தான் முனிவர்கள் பெரியார்கள் எல்லாம் இந்த ஆசனங்களிலேயே இருந்தார்கள் போலும்! நமது முன்னோர்களைச் சரீர சாஸ்திர சிற்பிகள் என்று சொல்ல வேண்டும். எந்த நரம்பு எந்த இடத்தில் இழுத்தால் எந்த வியாதி குணமாகும் என்று கண்டிருக்கிறார்கள். பத்மாசனத்தில் தொடை நரம்புகள் மட்டும் இழுக்கிறதாக நமக்குத் தெரிகிறது. ஆனால் அது உடல் நரம்புகளுக்கும் முக்கியமாக வயிற்று உறுப்புகளுக்கும் உற்சாகமளிக்கிறது. நல்ல சுவாசத்தின் மூலமாய் நல்ல இரத்தம் உடல் முழுவதும் பரவுகிறது. ஒரு இடத்தில் வலிக்கிறதென்றால் அந்த இடத்திற்கு நல்ல இரத்தம் வரவில்லை என்று அர்த்தம். தீர்க்க சுவாசத்தின் மூலமாக ரத்தத்துடன் பிராண வாயுவை அந்த இடத்தில் பாய்ச்சினால் வலி மறைந்து விடுகிறது.

அதற்கு முன் அவர் அவ்வயிற்று வலிக்காக எத்தனையோ மருந்துகளை விழுங்கியிருக்கிறார். டாக்டர்களுக்குப் பணத்தைக் கொட்டிக் கொடுத்திருக்கிறார். கடைசியில் எப்படியோ யோகாசனத்தைப் பற்றிக் கேள்விப்பட்டு நேரில் வந்து கற்றுக் கொள்ள நேரமும் அவகாசமும் கிடைக்காததினால், பத்மாசனம் மட்டும் போடக் கற்றுக் கொண்டார். பத்மாசனம் ஒன்றினாலேயே இவ்வளவு குணம் என்றால் மற்றவற்றின் மகிமையைப் பற்றிச் சொல்ல வேண்டுமா, என்ன? (தொடரும்)

சனத்தில் அமர்ந்து செய்தால் மனம் குவிந்து ஒருமைப்படும். வீராசனம் சுகாசனம் முதலிய வேறு பல உட்காரும் ஆசனங்கள் இருக்கின்றன. அவைகளில் பத்மாசனமே சிறந்தது. இதில் சுகங் கண்டு விட்டால், எப்பொழுதும் இப்படியே உட்கார்ந்து, பத்மாசனத்திலேயே இருக்க ஆசை தோன்றும்.

பத்மாசனம் போடுவதினால் முதுகு எலும்பு நேராய் நிமிர்கிறது. அதனால் நுரை ஈரல் சுருங்காமல் தாராளமாய் இருக்க முடிகிறது. பிராண வாயு நன்றாய்ச் சுவாசிக்க முடிகிறது. நுரை ஈரலில் நோய்க் கிருமிகள் இருந்தால் நாசம் ஆகும். இருதயத்திற்கு வேண்டிய பிராணவாயு கிடைப்பதால், கெட்ட ரத்தம் நன்றாய்ச் சுத்தம் செய்யப்படுகிறது. இருதயம் தெம்புடன் தன் வேலையைச் செய்ய முடிகிறது. பிராணவாயு ரத்தத்துடன் கலந்து உடல் பூராவும் நன்றாய்ப் பரவுவதால் நரம்புகளுக்கு வீரியம் உண்டாகிறது. நரம்பு பலஹீனம் போகும். நல்ல பசி உண்டாகும்; சோம்பேறித்தனம் ஒழியும்.

பத்மாசனத்தில் கணுக்கால்தொடைகளை நன்றாய் அழுத்துவதால் தொடையின் பலம் பெருகுகிறது. கணுக்காலும் உறுதி அடைகிறது. அடிவயிற்றைக்குதிக்கால்கள் அமுக்

# கம்பர் தரும் காட்சி

## டி.கே.சி

### 305. பிளந்தது மலையா, மார்பா?

சுக்கிரீவன் அரக்க வீரனை கும்பனுடன் யுத்தம் செய்தான். தண்டாயுதங்களைக் கைக்கொண்டவராய் ஓடியும் சாடியும் பின்வாங்கியும், மறுபடியும் ஓடிச் சாடியும் யுத்தம் செய்தார்கள்.

தோள்களில் ஒருவரை ஒருவர் அடித்துவிட்டுப் பின் வாங்கினார்கள். கடைசியாக, சுக்கிரீவனுக்கு ஆங்காரம் உண்டாகி விட்டது. ஒரே வேகமாகச் சாடி தண்டாயுதத்தால் கும்பனது மார்பில் அடித்தான்.

* * *

இதிலிருந்து தொடர்ந்தது தண்டாயுதங்களின் வேலை. எத்தனை அடிகள் என்று எப்படி எண்ண முடியும்? நிமிஷத்துக்கு நூறு அடி என்றால் பார்த்துக் கொள்ள வேண்டியது தானே கணக்கை!

அடிஆ யிர
கோடியின் மேலும்
அடித் தார் ;

முடிவா னவன்
யாரென வானவர்
மொய்த் தார் ;

இடியோ டிடி
இட்டிய தென்ன
இரண் டும்

பொடிஆ யின
தண்டு ; பொ ருந்தினர்
புக் கார் .

[முடிவானவன் யார் என வானவர் மொய்த்தார்: தோலைந்தவன் எவன் என்று தெரியவில்லை வானவர்களுக்கு. அதன் மேல் நெருங்கி வந்து பார்த்தார்கள்; இடியோடு இடி இட்டியதென்ன: ஒரு இடி மற்றொரு இடியோடு மோதியது என்று சொல்லும்படி தண்டாயுதங்கள் ஒன்றோடொன்று மோதின; இரண்டும் பொடியாயின தண்டு: மோதிய மாத்திரத்தில் இரண்டு தண்டாயுதங்களும் நொறுங்கிப் பொடிப் பொடியாய்ப் போய்விட்டன. பொருந்தினர் புக்கார்: தண்டாயுதம் நொறுங்கிப் போகவும் இருவரும் ஒருவர் கைக்குள் ஒருவராய் அகப்பட்டு மல் யுத்தம் செய்தார்கள்.]

* * *

தண்டாயுதங்கள் இரண்டுமே நொறுங்கிப் போய்விட்டன. வேறு ஆயுதம் இல்லை. மல் யுத்தத்துக்கு ஆரம்பித்து விட்டார்கள்.

மதங்கொண்ட யானைகள்போல் ஒருவரை யொருவர் மோதி யுத்தம் செய்கிறார்கள். அப்படி மோதுவதில் உண்டான சப்தமானது எட்டுத் திசையோடு, வானம், பாதாளம் என்ற இடங்களில் உள்ளவர்களுடைய காது செவிடுபட்டு விடுமோ என்று எண்ணத் தோன்றியது, அவ்வளவு சப்தம்!

மத்தச் சின
மால்களி றென்ன
மலைந் தார் ;

பத்துத் திசை
யும்செவி டெய்தின ;
பல் கால்

தத்தித் தழு-
வித்திரள் தோள்கொடு
தன் னிக்

குத்திக், தனி
குத்தென மார்பு
கொடுத் தான்.

[மத்தச் சின மால்களிறு என்ன மலைந்தார்: மதம் பிடித்துச் சினங்கொண்ட கொம்பன் யானைகள் போலச் சண்டை பிடித்தார்கள்;— பத்துத் திசையும் செவிடு எய்தின. பல்கால் தத்தித் தழுவி: ஒருவர்மேல் ஒருவர் திரும்பத் திரும்பப் பாய்ந்து கட்டி; திரள் தோள்கொடு தன்னிக் குத்தி: தங்கள் பெருத்த தோள்களோடு ஒருவரை ஒருவர் தள்ளியும் குத்தியும் தாக்கி வந்தார்கள்; கடைசியாக, தனி குத்தென மார்பு கொடுத்தான்: கும்பன் 'உன் கை பலம் இவ்வளவுதான் என்பதைப் பார்த்து விடுகிறேன்; ஒரு குத்து வை பார்க்கலாம்' என்று மார்பைக் காட்டினான் சுக்கிரீவனுக்கு.]



★ ★ ★ திருவல்லிக்கேணி தேசியப் பெண்கள் உயர்தரப் பள்ளிக்கூடத்தின் ஸ்தாபகர் ஸ்ரீ என். கே. திருமலாச்சாரி ஞாபகார்த்த கலா மண்டபத்துக்குச் சுதேசமித்திரன் ஆசிரியர் ஸ்ரீ ஸி. ஆர். சீனிவாசன் அவர்கள் சென்ற வெள்ளிக் கிழமையன்று அஸ்திவாரக் கல் நாட்டினர். ★ ★ ★

---

ஆம், கும்பன் மார்பைக் காட்டினன். அந்த மார்பில் சுக்கிரீவன் குத்தினன் ஒரே குத்தாக.

இரும்படிக்கும் இரும்புப் பீடம் போலத்தான் இருந்தது அந்த மார்பு. ஆனாலும் உலையில் காய்ச்சிய இரும்பானது சம்மட்டியால் அடிபட்டதும் சதைந்து போவதுபோலக் கும்பனது மார்பும் சதைந்தது. உடனே பிளந்தும் போய் விட்டது.

நிலையிச் சுட
ரோன்மகன் வன்கை
நெருங் க,

கொலையிற் படு
கம்மியர் கூடம்
அலைப் ப

உலையிற் ப(டு)
இரும்பென வன்மை
ஒடுங் க

மலையிற் பின
உற்றது நீயவன்
மார் பம்.

[நிலையிச் சுடரோன் மகன் வன்கை நெருங்க: உறுதியாக ஒரு மலையில் நின்று கொண்டு சுக்கிரீவன் (சூரியன் மகன்) கையால் குத்தினன். கை வந்து தாக்கின மாத்திரத்தில்: கொலையிற் படு கம்மியர் கூடம் அலைப்ப: அடைகல்லில் அடிபடும் கொல்லர்களுடைய சம்மட்டி அடிக்க; உலையிற்படு இரும்பென: கொல் உலையிற் காய்ச்சிய இரும்புபோல; வன்மை ஒடுங்க: மார்பின் திடம் பங்க; மலையிற் பினவுற்றது நீயவன் மார்பம்: மலையைப் போலப் பிளந்தது கும்பனது மார்பு.]

சுக்கிரீவனும் கும்பனும் பாவலாக் கள் போட்டும், பாய்ந்தும், ஒருவரை ஒருவர் மோதிக்கொண்டிருந்தார்கள்.

பிறகு தண்டாயுதங்கள் கொண்டு இருவரும் போர் செய்த விசித்திரத்தையும் பார்த்தோம்.

தண்டாயுதங்கள் நொறுங்கிப் போனதும் அபாரமான மல் யுத்தம் ஒன்றைச் செய்ததையும் பார்த்தோம்.

டிக்கெட் வாங்கிப் பார்க்க வேண்டிய காரியந்தான்!

சுக்கிரீவன் வெற்றி பெறுகிறன் கடைசியில். சந்தோஷம் கொண்டாட வேண்டிய காரியமே அல்லவா?




# ஸ்ரீராமகிருஷ்ண உபநிஷதம்

## 26. பெற்ற தாய்

சுயசரிதங்கள் எல்லாருமே எழுதுகிறார்கள். ஆனால் நல்ல விஷயங்களை மட்டும் பொறுக்கி எழுதிவிட்டு ஆகாத விஷயங்களைச் சரிப்படுத்தியும் மறைத்துவிட்டும் எழுதுகிறார்கள். உண்மையை முற்றிலும் எழுத ஆரம்பித்தால் எத்தனை மகா பாபச் செயல்களைச் செய்ய எண்ணினோம், அதை பகவான் எப்படியோ தடுத்து நம்மைப் பாபத்தினின்று தப்புவித்தான் என்பதை எல்லோருடைய வாழ்க்கைச் சரித்திரத்திலும் காணலாம்.

ஆண்டவன் பேரருளால் பாபங்களினின்று தப்புகிறோம். அவன் அருள் இல்லாவிட்டால் மிகப் புகழும் பேரும் பெற்ற பெரியோர்களுடைய கதியும் அதோகதியாயிருக்கும்.

அவன் அருள் இருந்தால்தான் மீள்வோம் என்பது உண்மையாயினும், நாமும் எத்தனமின்றிச் சும்மா இருக்கக்கூடாது. அருள் என்பது கடற்காற்றைப் போல். காற்று வீசிக்கொண்டேயிருக்கிறது. ஆயினும் அந்தக் காற்றைப் பயன்படுத்துவதற்காகப் படகுக்காரர்கள்பாய் விரித்தாலன்றி படகு செல்லாது. நம்முடைய உள்ளங்களாகிய பாய்களைச் சரியாக விரித்து, வீசுகின்ற அவன் அருளைப் பயன்படுத்திக் கொள்வோமாக.

• • •

உலக வாழ்க்கையில் நாம் செய்ய வேண்டியதாக ஏற்படும் வேலைகளில் ஒரு வேலை உயர்ந்தது ஒரு வேலை தாழ்ந்தது என்றில்லை. எந்த வேலையும் ஒன்றே, வித்தியாசமில்லை.

எந்தக் காரியத்தையும் ஆண்டவனை மனதில் நிறுத்திக் கொண்டு பக்தியுடன் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் அவன் அருள் பாயில் தங்கி நம்முடைய படகைச் செலுத்தும். எடுத்த காரியத்திற்கு வேண்டிய சாதனங்களும் சூழ்நிலையும் அவன் அருளால் ஏற்படும்.

"எத்தனை ஆண்டுகளோ இருள் மூடியிருந்த ஒரு வீட்டில் விளக்கு ஏற்றினதும் உடனே இருள் நீங்கி ஒளி உண்டாகிறது. அதைப் போலவே ஆண்டவனுடைய அருள் விளக்கு ஏற்றினதும் எத்தனையோ ஜன்மங்களின் பாவங்களும் உன்னை விட்டு விலகி பக்தி ஒளி வீச ஆரம்பிக்கும்."

"சுவாமி! நீங்கள் ஆண்டவன் தரிசனத்தைப் பெற்றீர் என்று எல்

**சக்கரவர்த்தி ராஜகோபாலச்சாரியார்**

லோரும் சொல்லுகிறார்களே, எங்களுக்கும் அவ்வாறு ஆண்டவன் தரிசனம் கிடைக்கச் செய்யுங்கள்" என்று சில சம்சாரிகள் ஒரு நாள் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் கேட்டார்கள்.

"ஆண்டவன் அருள் இருந்தால், உங்களுக்கு அவன் தரிசனம் கிடைக்கும். ஆனால் நீங்களும் முயற்சி செய்ய வேண்டும். பால் கறந்து, தயிர் ஆக்கி வெண்ணெய் கடைந்து, உங்கள் வாயில் ஊட்டச் சொல்லுகிறீர்களோ?" என்றார் பகவான், சிரித்துக் கொண்டு.



* * *

காற்று வீசும்போது விசிறி வேண்டியதில்லை. காற்று வீசாதிருந்தால் விசிறிக் கொள்ள வேண்டும். ஆண்டவன் அருள் உண்டானால் நம்முடைய முயற்சிகள் எல்லாம் நிறுத்தி விடலாம். அப்போது பிரார்த்தனையும் வேண்டாம், ஜபமும் வேண்டாம், தியானமும் தவமும் வேண்டாம். அவன் அருள் ஒன்றே போதும். காற்று வீசாத வரையில் விசிறியை எடுத்து விசிறிக் கொள்ள வேண்டியது அவசியம்.

* * *

நான், எனது என்று எண்ணும் வரையில் அவன் அருள் வீசுவதற்குத் தடை. உன்னை நீ மதிக்கும் வரையில் அவன் தூரவே நிற்பான். ஆண்டவன் ஒருவனே எல்லாம் நடத்துகிறான் என்று மனதினின்று ஆணவத்தை முற்றிலும் அப்புறப்படுத்தினால் அவன் அருளுக்கு ஓடத்தின் பாயை விரித்த மாதிரியாகும். ஆணவம் நிறைந்து கிடந்தால் அருள் காற்றுக்கு இடமில்லை.

* * *

குழந்தையின் சுபாவம், தன் மேல் மண்ணும் குப்பையும் பூசிக் கொள்ளும். தாயின் மகிழ்ச்சி அந்த அழுக்கைத் தேய்த்து அலம்பி நன்றாகச் சுத்தப்படுத்தித் தன் குழந்தையின் அழகு முகத்தைப் பார்த்துக் களிப்படைவது. இவ்வாறே மக்கள் தவறு செய்வது அவர்களுடைய சுபாவமானாலும் ஈசுவரி அந்த அழுக்கைத் துடைப்பாள். நாம் அவளுடைய அருமைக் குழந்தைகள். பயப்பட வேண்டாம். தாயைத் தாய் என்று உணர்ந்து அன்பு செய்யுங்கள். பாவங்கள் எல்லாம் இருந்த விடம் தெரியாமல் தொலைந்து போகும்.

* * *

மகனே! தாயை ஏமாற்றப் பார்க்காதே! அன்பு செய். ஈசுவரிக்குத் 'தாய்' என்பது ஒரு பெயர் மட்டுமல்ல. உன்னைப் பெற்றது யார் என்று எண்ணுகிறாய்? அவள்தானே? பெற்ற தாயை எவ்விதம் அன்பு செய்து வருகிறாயோ அவ்விதம் உன்னையும் அனைத்தையும் பெற்ற ஈசுவரியை அன்பு செய், அதன் பயனை உடனே பார்ப்பாய். உன் உடல், உன் மனம் அனைத்தும் ஒளி பெற்று விளங்கும். உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கும். தாயின் மடியில் உட்கார்ந்து தாயின் முகத்தைப் பார்த்துச் சிரிக்கும் குழந்தை போல் சுகமும் ஆனந்தமும் பெறுவாய்!

# வனஜா வந்தாள்!

கிண்கிணி

மாடிக்குப் போன மைதிலி முனகிக் கொண்டே கீழே இறங்கினாள்.

“அம்மா! சித்தி என்ன இப்படி இருக்கா? நிறைய பட்சணத்தை வைத்துக் கொண்டு ‘தொறக் தொறக்’கென்று தின்று கொண்டிருக்காள். என்னைப் பார்த்ததும் புடவைத் தலைப்பால் மூடிக்கிறாளே!” என்று புகார் பண்ணிக் கொண்டே முகத்தைத் தூக்கிக்கொண்டாள் மைதிலி.

“உஷ்!” என்று தன் பெண்ணின் வாயைப் பொத்தினாள் மங்களம். “பட்சணத்துக்கு என்ன? அப்பா வரட்டும்; வேணும் என்கிறது வாங்கித்தரச் சொல்லுகிறேன்” என்று சொல்லி மைதிலியை அருகில் இழுத்து அணைத்துக் கொண்டு பேச்சை வேறு திக்கில் திருப்பினாள். “ஆமாம், உன் ‘டான்ஸ்’ பாடம் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது?” என்று கேட்டாள்.

“ஒருமாசம் போகட்டும், அம்மா! ஜோராக ஆடி விடுகிறேன்!” என்று தன் டோலக்குகள் குலுங்கச் சின்ன ஆட்டம் ஒன்று ஆடி விட்டு ஓடிவிட்டாள் மைதிலி.

மங்களம் மாடிப் பக்கம் கண்களை ஒரு தரம் திருப்பிப் பார்த்து விட்டுப் பெருமூச்சு விட்டாள். “என் சாது மச்சினனுக்கு இப்படி ஒரு மனைவி வாய்த்தாளே? பாவம், அவர் சம்பளம் இவளுடைய ஹோட்டல் பட்சணம், பூ — இவைகளுக்கே சரியாகப் போய்விடும் போலிருக்கிறதே!” என்று மிகவும் அநுதாபப்பட்டாள்.

★

மங்களத்தின் சின்ன மைத்துனன் வாதன் அவளுடைய பராமரிப்பில் வளர்ந்தவன். குழந்தையாக இருந்த போதே தாய் தந்தையரை இழந்து விட்டதால் அவன் அண்ணாவின் வீட்டோடு இருக்கும்படி ஆயிற்று.

“மதனி! மதனி!” என்று அவனுக்கும் மங்களத்திடம் அத்யந்தப் பிரியம். அண்ணா அனந்தராமன் எப்பொழுதாவது கடுகடுவென்றாலும், மங்களம் சமயம் பார்த்து, “வாதா, வருத்தப் படாதே! அவர் சுபாவம் உனக்குத் தெரியாதா?” என்று இதமொழி கூறுவாள்.

பி. ஏ. வரையில் மதனியின் மகத்தான சலுகையில் படித்துத் தேறிய வாதன் அதிகமாக உத்தியோக வேட்டையில் அலுப்படையாமல் சேலத்தில் ஒரு பாங்கியில் அக்கௌண்டெண்டாகப் போய்விட்டான். இவ்வளவு காலம் வீட்டோடு வளர்ந்த குட்டி மைத்துனன், வேலை என்று வெளியூருக்குப் போகும்படி ஆயிற்றே என்று மங்களத்துக்கு உள்ளூற வேதனையாக இருந்தது. “வாதா! சமர்த்தாக வேலை பார்!” என்று புத்திமதி சொல்லி அனுப்பினாள்.

வேலைக்குச் சென்ற இரண்டு மாதங்களுக்குப் பிறகு வாதன், தன் அண்ணாவுக்கும், மதனி மங்களத்துக்குமாகச் சேர்த்துக் கடிதம் ஒன்று போட்டிருந்தான். கம்பெனி மானேஜருக்கு அழகான பெண் ஒருத்தி இருக்கிறாள் என்றும், அவளைத் தனக்குக் கல்யாணம் செய்து கொடுக்க அவர்கள் இஷ்டப்படுகிறார்கள் என்றும், தனக்கும் அந்தப் பெண்ணைப் பிடித்திருக்கிறது என்றும் மதனியை அழைத்துக் கொண்டு உடனே வந்து கல்யாணத்தை நிச்சயம் செய்து வைக்க வேண்டும் என்றும் அந்தக் கடிதத்தில் விரித்து விரித்து எழுதியிருந்தான் வாதன்.

“மங்களம்! புறப்படலாமா?” என்று கேட்டான் அனந்தராமன்.

“எல்லாம் அவன் பார்த்து நிச்சயம் பண்ணிக் கொண்டதே போதும். அவனுக்குப் பெண்ணைப் பிடித்திருக்கிறது. என்னத்துக்கு நாம் அநாவசியமாக வாதனுக்குச் செலவு வைக்க வேணும்? வாதன் கெட்டிக்காரன். நல்ல இடமாகத்தான் பார்த்திருப்பான்” என்று சொல்லி மங்களம் பிரயாணத்தை நிறுத்தி விட்டாள்.

அனந்தராமனின் குணம் அவளுக்குத் தெரியும். அவன் ஏதாவது நடுவில் குளறி, வாதனுக்கு வருத்தம் வரும்படி செய்து விடலாம். ‘மானேஜர் வீட்டுப் பெண்’ என்கிறான். ஒருகால் எதிர்பாராத விதமாகக் கல்யாண ஏற்பாடு தன் புருஷனின் முன் கோபத்தினால் தடைப்பட்டு விட்டால், கடைசியில் அது வாதனின் வேலைக்கல்லவா ஆபத்தாக முடியும் என்று எண்ணி அவள் பெண் பார்க்கப் போவதைச் சற்று முன் யோசனையுடன் ஒத்தி வைத்தாள். அதற்குப் பதிலாக, “எங்களுக்கு ஆட்சேபணை இல்லை. சர்வ சம்மதம். தேதி வைக்கச் சொல்”



என்று தன் புருஷன் மூலமாகத் தந்தி தட்டுவதற்கும் ஏற்பாடு செய்து விட்டாள்.

சேலத்தில் வரதனுக்கு விமரிசையாக விவாகம் நடந்தது. சகலவிதமான பொறுப்புக்களையும் மங்களம், தானே ஏற்றுக் கொண்டு கல்யாணத்தை மிகவும் விமரிசையாக நடத்தி வைத்தாள். "வரதன் கெட்டிக்காரன், மூக்கும் முழியுமாகக் கிளிபோல உனக்கு ஓர்ப்படியைத் தேர்ந்தெடுத்திருக்கிறான்" என்று அனந்தராமன் கூடக் கோபதாபம் எதுவும் இல்லாமல் அபிப்பிராயம் சொல்லி விட்டான்.

ஆனால் மங்களத்துக்கு மட்டும் வரதன் மனைவி வனஜா தன்னை மிகவும் அலட்சியப் படுத்துவதுபோலத் தோன்றியது. தாலி கட்டி முடிந்தவுடனேயே அந்த அறிகுறிகள் இலேசாகத் தென்பட்டன. அதை அப்போது மங்களம் அவ்வளவாக லட்சியம் செய்யவில்லை.

தலை தீபாவளிக்குப் போனபோதுதான் நாளும் கிழமையுமாக "என்னத்துக்கு இங்கே வந்து அவமானப் படவேணும்?" என்று அழுகை வந்தது. "வரதனை என் சொந்தத் தம்பிபோல மதித்து வந்தேன். இல்லாவிடில் இந்த அகங்காரி வீட்டுக்கு ஆயிரம் தடவைகள் கூப்பிட்டாலும் வருவேனா!" என்று உள்ளூற வேதனைப் பட்டாள் மங்களம்.

ஆனால் அவள் தன்னுடைய உள்ளத்து வேதனைகளை யாரிடமும் காட்டிக் கொள்ளவில்லை. வனஜாவின் அலட்சியத்தைப் பற்றி வரதனிடமோ, தன் கணவனிடமோ ஒரு வார்த்தை சொல்லவும் இல்லை. 'அப்பா வீட்டில் செல்வப் பெண்ணாக இருக்கும் வரையில் அப்படித்தான் இருப்பாள் வனஜா. தனிக் குடித்தனம் என்று போட்டு, வாழ்க்கை என்றால் என்னவென்று புரிந்து கொண்டாளானால் எல்லாம் சரியாகி விடும்' என்று நினைத்துக் கொண்டு சும்மா இருந்து விட்டாள். வரதன் மீது அவளுக்கு இருந்த அபிமானம் கொஞ்ச நஞ்சம் அல்ல. ஆகவே, வனஜாவின் அலட்சியம் அவளுக்கு மிக மிகச் சிறு விஷயமாகப் பட்டது.

★

வரதனுக்குச் சென்னைக்கு மாற்றலாயிற்று. மாமனார் வீட்டோடு சேலத்தில் இருந்து கொண்டு நடத்தும் வாழ்க்கை அவனுக்குப் புளித்து விட்டது. தனிக் குடித்தனம் நடத்தவேண்டும், வனஜாவை அவள் பெற்றோர்களிடமிருந்து பிரிக்க வேண்டும் என்று திட்டம் போட்டுச் சென்னை 'ஹெட் ஆபீஸு'க்குத் தன்னை மாற்றிக் கொண்டான். வீடு கிடைக்கும் வரையில் அண்ணா வீட்டில் இருப்பது என்று தீர்மானித்து வனஜாவையும் கூடவே அழைத்துக் கொண்டு சென்னைக்கு வந்து சேர்ந்தான்.

வரதனையும், வனஜாவையும் அன்புடன் வரவேற்றாள் மங்களம். மாடி அறையில் கிடந்த 'கண்டான் முண்டான்' சாமான்களை எல்லாம் மின்னல் வேகத்தில் எடுத்து அவர்களுக்கு ஒழித்து விட்டாள். மனதில் எந்தவிதமான கல்மஷத்தையும் வைத்துக் கொள்ளவில்லை.

"வரதா! வீடு கிடைக்கும் வரையில்தான் இங்கு இருக்கலாமாக்கும் என்று எண்ணாதே! உன் சொந்த வீடுபோலப் பாவித்துக்கொண்டு எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் நீ இங்கே இருக்கலாம்" என்று சொன்னாள்.

"மதனி! உங்கள் மனசு எனக்குத் தெரியாதா? வனஜாவுக்கும் உங்களைப் போலக் குடித்தனம் நடத்தச் சொல்லிக் கொடுங்கள்!" என்றான் வரதன்.

அப்போது வனஜா முகத்திலே பரவி நின்ற அருவருப்பை மங்களம் கவனித்தாள். ஆனால் வரதன் கவனிக்கவில்லை.

★

வந்து ஒரு வாரம் ஆயிற்று. வனஜா, 'வரதன் உண்டு, மாடி அறை உண்டு, பவுடர் டப்பி உண்டு' என்று இருந்து வந்தாள். கீழே இறங்கி வந்து ஒரு துரும்பைக்கூட இங்கு அங்கு எடுத்துப் போடுவதில்லை.

"என்ன, உன் ஓர்ப்படி படியை விட்டு இறங்குவது இல்லைபோலிருக்கிறதே! கீழே இறங்கி வா, படிகள் இருக்கின்றன என்று சொல்லிக் கொடுப்பதுதானே?" என்று ஒருநாள் அனந்தராமன் கூட வேடிக்கையாகக் கேட்டு விட்டான்.

மங்களம் அதற்காகச் சந்தர்ப்பம் வந்ததே என்று தன் ஓர்ப்படியைப் பழித்துக் காட்டவில்லை. "என்னமோ சிறிசு. இருந்து விட்டுப் போகட்டுமே! புகுந்து புறப்பட்டுச் சங்கோசமில்லாமல் காரியம் செய்ய வெட்கப்படுகிறாளோ, என்னமோ? இங்கேதான் அவளுக்கு என்று செய்ய என்ன காரியம் காத்து இருக்கிறது?" என்று சொல்லி அந்த இடைவெளியைத் தன்னுடைய பாந்த உள்ளத்தினால் மேடு பள்ளம் எதுவும் இன்றி அழகாக நிரவிவிட்டாள்.

அதற்குப் பிறகு ஒருநாள் மாலை நடந்த சிறு சம்பவம் மட்டும் மங்களத்துக்கு ஆறவே இல்லை.

அவளுடைய அருமைப் பெண் மைதிலி கம்பிக் கதவைப் பிடித்துக்கொண்டு வாசற் பக்கம் நின்று கொண்டிருந்தாள். பூக்காரன் வந்தான். வனஜா 'விறு விறு' என்று மாடியிலிருந்து இறங்கி காலணாவுக்குப் பூ வாங்கித் தலை நிறையத் திணித்துக் கொண்டு 'டக்' 'டக்' என்று படி ஏறிப் போய் விட்டாள். தனக்கு ஒரு முழமாவது கதம்பம் கிடைக்கும் என்று ஆசைப் பட்டுக் கொண்டிருந்த மைதிலி ஏங்கிப் போனாள். கூடத்துக் கல்லூரலில் ஏதோ அரைத்துக் கொண்டிருந்த மங்களம் அதைப் பார்த்தாள். அவளுக்குப் படபட வென்று ஆத்திரம் வந்தது.

பாதி அரைத்ததை அப்படியே வைத்து விட்டு 'விர்' என்று படி ஏறிப் போனாள். வரதனும் வனஜாவும் ஜோராக உடை உடுத்திக் கொண்டு எங்கேயோ போகத் தயாராயிருந்தார்கள்.

"மன்னி! வா, வா! என்ன வேண்டும்?" என்று திரும்பிப் பார்த்த வரதன் மங்களத்தை வரவேற்றான்.

வரதனிடம் வனஜாவின் போக்கைப் பற்றிச் சொல்ல வாயெடுத்த மங்களம் சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டாள். "என்ன மன்னி! எங்கே வந்தாய்? நின்று கொண்டே இருக்கிறாயே? நாங்கள் ஸினிமாவுக்குப் போகிறோம். நீயும் வருகிறாயா?" என்று வரதன் கண்ணாடிக்கு முன்னால் நின்று கழுத்துப் பட்டையைச் சரிப்படுத்திக் கொண்டே கேட்டான்.





டாக்டர்:—எனக்கு இன்று உடம்பு சரியாக இல்லை. யாரேனும் ஒரு டாக்டரைப் போய்ப் பார்க்கவேண்டும்.

வந்தவர்:—என்ன ஸார்! நீங்களே ஒரு டாக்டர்தானே?

டாக்டர்:—அது சரி! ஆனால் என்னிடம் 'கன்ஸல்டிங் பீஸ்' ஜாஸ்தி, ஸார்!

---

"சும்மாத்தான் வச்சேன். வரதா, எனக்கு என்னத்துக்கு ஸினிமாவும், டிராமாவும்?" என்று சொல்லி விட்டு, "மணி ஐந்து அடித்து விட்டதா? மைதிலி பள்ளிக் கூடத்திலிருந்து வந்து விடுவாள்!" என்று சாக்குச் சொல்லியவாறே கீழே இறங்கிப் போனாள். "பாவம், நாம் சொல்லி இருந்தால் இப்படி இரண்டு பேரும் சந்தோஷமாக ஸினிமாவுக்குப் போக முடியுமா? சொல்லாமல் இருந்ததே சரி. அந்த ஆனந்தத்தை எதற்கு நாம் கெடுக்கணும்?" என்று தன் முடிவைப் பாராட்டிக் கொண்டாள்.

படம் பார்த்து விட்டு வரதனும் வனஜாவும் திரும்பி வரும்போது நல்ல மழை பெய்தது. ரிக்ஷாவில் ஒண்டிக் கொண்டுவந்த இருவரும் வெட—வெட வென்று நடுங்கிக் கொண்டே இரவு பத்து மணிக்கு "மன்னி!" என்று கதவைத் தட்டினார்கள்.

"அடடா! மறந்தே போனேன். மேல் மாடியில் படுக்கை கிடந்தது. புடவை கூட உலர்த்தி இருந்தேன். எல்லாம் நனைந்து தெப்பமாகப் போயிருக்கும்" என்று வனஜா கதவுக்கு வெளியே நின்றபடி சொல்லிக் கொண்டிருந்தாள்.

"சுத்த அசடு! அவைகளை எடுத்து வைப்பதை விட வேறு என்ன காரியம் செய்து புரட்டுகிறாய்?" என்று வரதன் அவளைக் கடிந்து கொண்டிருந்தான்.

★

மங்களம் சற்றுக்கூட முணுமுணுக்காமல் கதவைத் திறந்தாள். வனஜா மாடிக்கு ஓடினாள். அங்கே அவளுக்கு ஆச்சர்யம் காத்திருந்தது.

புடவை ஒழுங்காக மடித்துக் கொடியில் சற்றுக் கூட நனையாமல் மடித்துப் போடப் பட்டிருந்தது! படுக்கை பொட்டுத் தண்ணீர் படாமல் கட்டிலின் மீது சுற்றி வைக்கப் பட்டிருந்தது! வனஜா தன் ஓர்ப்படிக்கு இருக்கும் சிரத்தையைக் கண்டு திகைத்துப் போனாள். இப்படிப்பட்ட மன்னியிடம் சரியாகக் கூடப் பேசாமல் அலட்சியமாக நடந்து கொண்டது எப்படிப்பட்ட மகத்தான தவறு என்று வருந்தினாள். "இதோ வந்து விட்டேன்!" என்று வரதனிடம் சொல்லிவிட்டு விறுவிறு வென்று கீழே இறங்கி வந்தாள் வனஜா.

"மன்னி! பெரிய இடத்தில் பிறந்த தோஷம் என் கண்களை மறைத்து விட்டது. உங்கள் உள்ளம் புரியாமல் எப்படி எப்படியோ நடந்து கொண்டு விட்டேன். என்னை மன்னியுங்கள், மன்னி!..." என்று கண்களில் கண்ணீர்த் துளிகள் மின்ன, வனஜா மன்றாடி வேண்டிக் கொண்டாள்.

"வனஜா, நான் எதையும் மனதில் வைத்துக் கொள்வது வழக்கமில்லை. என் சொந்தத் தங்கையைப் போல உன்னைப் பாவித்துக் கொண்டு விட்டேன்" என்று தன் ஓர்ப்படியைத் தேற்றினாள் மங்களம்.

"மன்னி! அங்கே வனஜா என்ன செய்கிறாள்?" என்று மாடிப்படியில் நின்றவாறே வரதன் கேட்டான்.

"இதோ, வந்துவிடுவாள்! நான்தான் 'படம் நன்றாக இருந்ததா?' என்ன கதை? என்று கேட்டேன்" என்று மனதாரப் பொய் சொன்னாள் மங்களம்.

இப்படிப்பட்ட மகத்தான மன்னியை எந்தக் கோவிலில் வைத்துப் பூஜிப்பது என்று வனஜாவுக்குப் புரியவில்லை. பிரமிப்பும், நன்றி விசுவாசமும் பின் தொடரப் படியேறி மாடிக்குச் சென்றாள்.

# புதிய ரெக்ஸோனா சோப்!

★ புதிய குறைந்த விலை

★ புதிய சிறந்த வடிவம்

★ மலர்ச்சிதரும் பரிமளம்

ரெக்ஸோனாவிலுள்ள கேடில் சருமத்தை சுத்தம் செய்து மழுமழுப்பாக்குவதுடன் அழகுபடுத்துகிறது.




**கேடில் கலந்த சோப் ரெக்ஸோனா ஒன்றே**

RP. 65-172 TM




முத்தா

## 3. சின்னப் பண்ணையார்

ஒரு மாதம் சென்றது. செங்கிப்பட்டியின் சின்னப் பண்ணையாராகி விட்ட நகுலன் ஆனந்தமாக வாழ்க்கை நடத்தலானான். அவனுக்குப் பணிவிடை செய்வதற்கும் அவன் சொன்ன சொல்லைக் கேட்பதற்கும் எத்தனையோ ஆட்கள் கைகட்டி வாய் புதைத்து நின்றனர். அவன் தன் குடிபடைகளிடமும் பணியாட்களிடமும் மிகவும் பட்சமாக நடந்து கொண்டான். ஆகவே, எல்லோரும் சின்னப் பண்ணையார் ரொம்ப நல்லவர் என்று புகழ்ந்து பாராட்டினர்.

அவன் பொழுது போக்காகக் கார் விடவும் கற்றுக்கொண்டு விட்டான். சில தினங்களுக்கெல்லாம் ஒரு புதிய அழகிய காரும் சொந்தமாகவே விலைக்கு வாங்கிக் கொண்டான்.

திடீரென்று ஒருநாள் அவனுக்குத் தன் தாயாரைப் போய்ப் பார்த்து வரவேண்டும் என்ற எண்ணம் தோன்றிற்று. ஆகவே அவன் அந்தப் புதுக்காரை எடுத்துக் கொண்டு தாயாரைப் பார்க்கப் புறப்பட்டான். தன்னுடைய பழைய நிலைமை பிறருக்குத் தெரியக் கூடாது என்பது அவன் எண்ணம். ஆகவே அவன் தன் பின்னோடு வேறு யாரையும் அழைத்துக் கொண்டு போகவில்லை.

ஜன நடமாட்டமே இல்லாத ஒரு இடம்; அந்த இடத்தைத் தாண்டிக் கார் போய்க் கொண்டிருந்த போது நன்றாக இருட்டி விட்டது. காரின் முகப்பு விளக்கு பளிச்சென்று எரியத் தொடங்கியது. எதிரேயிருந்த இருளைக் கிழித்துக் கொண்டு கார் 'விர்' என்று வெகு வேகமாகப் போகும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. தன் தாயாரைப் போய்ப் பார்க்கும் மகிழ்ச்சியில் மிதந்த வண்ணம் நகுலன் காரை ஓட்டிக் கொண்டிருந்தான். கொஞ்ச தூரம் போவதற்குள்ளாக, "டப்!" என்று ஒரு சத்தம் வந்தது. நகுலன் காரை விட்டு இறங்கி 'என்ன?' என்று பார்த்தான். பின் பக்கத்து டயரை யாரோ சுட்டு விட்டார்கள். அது அழுங்கி உட்கார்ந்து விட்டது.

நகுலன் சுற்று முற்றும் பார்த்தான். முகமூடி அணிந்த ஒரு திருடன் "அப்படியே நில்! நகர்ந்தால் சுட்டு விடுவேன்" என்று உறுமிக் கொண்டே நகுலன் முன்னால் பயங்கரமாகத் தோன்றினான்.

நகுலன் பயந்து நடுங்கி விடவில்லை. "உனக்கு என்னவேண்டும்? பணந்தானே? இந்தா, எடுத்துக் கொள்!" என்று பையிலிருந்த மணிபர்ஸை எடுத்து முரடனிடம் நீட்டினான். "கைக் கெடியாரம்..." என்றான் முரடன். அடுத்த கணம் அதையும் கழற்றிக் கொடுத்தான் நகுலன்.

பிறகு நகுலன் திருடனைப் பார்த்து, "எனக்கு நீ ஒரு உதவி செய்ய வேண்டும். நீ கூட்ட டயரைக் கழற்றி விட்டு வேறு டயரை மாட்டினால்தான் என் மோட்டார் நகரும். இதோ இன்னொரு டயர் இருக்கிறது. அதை மாட்டுவதற்குத் தயவு செய்து எனக்கு நீ உதவி செய்வாயா?" என்று மிகவும் தைரியமாகவே கேட்டான்.

"சரி!" என்றான் முரடன். நகுலனுடன் சேர்ந்து அந்த டயரைப் பிடித்துக் கீழே இறக்கினான். "இவ்வளவு கல்ல பையனிடம் கொள்ளை அடித்தோமே! கொள்ளை அடித்த பொருளைத் திருப்பிக் கொடுத்து விட்டே போய்விடுவோமா?" என்ற எண்ணம் திருடனின் இதயத்திலே ஒருகணம் எழுந்தது. ஆனால் அடுத்த கணமே, 'கிடைத்த பணத்தைக் கை விடுவதாவது?' என்ற எண்ணம் எழுந்து முன் எண்ணத்தை மாற்றி விட்டது.

டயரைப் பிடித்து மாட்டும் போது திருடனுக்குத் தேன் கொட்டியது போல ஏதோ ஒரு உணர்ச்சி ஏற்பட்டது. அவன் அந்த இளைஞனின் முகத்தை உற்றுக் கவனித்தான். பிறகு அவனுடைய கையைக் கவனித்தான். வலது கையில் கட்டை விரலுக்கு அருகே தனியாக அரை அங்குல உயரத்துக்கு ஆறுவது விரல் ஒன்று இருப்பதைக் கவனித்தான். அவன் உள்ளத்தில் பழைய நினைவு பளிச்சிட்டது.

"ஏன் அப்பா! உன் பேர் என்ன?" என்று கேட்டான் திருடன். அதைக் கேட்கும்பொழுது அவனுடைய குரலில் மிகவும் பரபரப்பு தொனித்தது.

"நகுலன்!" என்று பதிலளித்தான் நகுலன்.

நகுலன் தன் பெயரைச் சொல்லி வாய் மூடினானோ இல்லையோ! திருடன் தன் முக மூடியைக் கழற்றி எறிந்து விட்டு "ஹா! என் மகனே! நகுலா!" என்று அலறினான். நகுலனுக்கும் திருடனாக வந்திருப்பவன் தன் தகப்பன் என்பது நன்றாக விளங்கி விட்டது.

"அப்பா! அப்பா!" என்று அன்புடன் கூப்பிட்டான் நகுலன். அதற்கு மேல் என்ன பேசுவது என்று அவனுக்குப் புரியவில்லை. திகைத்துப் போய் வாய் திறவாமல் நின்றான்.

"...நேற்றுத் தான் சிறையிலிருந்து விடுதலை ஆகி வந்தேன். இந்தியா குடியரசு ஆயிற்று அல்லவா? அதை ஒட்டி எனக்கு ஒரு வருஷத்துக்கு முன்னதாகவே விடுதலை கிடைத்து விட்டது. வீட்டுக்குப் பறந்து ஓடினேன். உன்னையும் உன் அம்மாவையும் பார்க்க வேண்டும்; இனி திருட்டுத் தொழிலையே விட்டுவிடுவதாகச் சபதம் செய்ய வேண்டும் என்று முடிவு கட்டிக் கொண்டு போனேன்.

"வீடு இருந்த இடம் தரை மட்டமாக இருந்தது. உன் அம்மா ஏக்கத்தினால் இறந்து விட்டாள் என்றும், வீடு தீப்பற்றி எரிந்து விட்டது என்றும் கேள்விப் பட்டேன். 'இனி நாம் யாருக்காக உயிர் வாழவேண்டும்?' என்று என் மனம் வெறுப்படைந்து விட்டது. வெளியில் கஞ்சிக்குக் கஷ்டப்பட்டு எல்லோரும் "திருடன், திருடன்!" என்று பழித்துக் காட்டப் படுவதை விட மறுபடியும் திருடனாகிச் சிறைக்குச் செல்லுவதே மேல் என்று தோன்றியது. ஒரே ஒரு மனக்குறை பாக்கி இருந்தது. அதையும் தீர்த்துக் கொண்டு சிறைக்குச் செல்ல நினைத்தேன். அதற்குள் உன்னைப் பார்த்து விட்டேன்..." என்று நகுலனின் தகப்பன் மூச்சுத் திணறச் சொல்லி முடித்தான்.





"உங்கள் மனதில் உள்ள அந்தக் குறை என்ன, அப்பா?" என்று அன்புடன் கேட்டான் நகுலன்.

"செங்கிப்பட்டி பண்ணையார் இருக்கிறாரே, அவரால் தான் நான் திருடனுனேன். என்னுடைய நிலங்களையெல்லாம் அவர் அக்கிரமமாக எடுத்துக்கொண்டு எனக்கு ஆத்திரத்தை உண்டுபண்ணி அயோக்கியனுகை மாறும்படி செய்து விட்டார். என் வாழ்நாளில் என்றைக்காவது ஒரு நாள் அவருடைய வீட்டில் புகுந்து இஷ்டப்படி கொள்ளையடித்து விட்டு நிம்மதியுடன் சிறைக்குப் போக வேண்டும் என்று எண்ணியிருந்தேன். ஆனல், நகுலா! இனி மேல் நீ என்ன சொல்லுவாயோ?" என்றுன் தகப்பன்.

"அப்பா! உங்களுடைய அந்த ஆசை நிறைவேறி விட்டது. ஆனல் இனி மேல் நீங்கள் அதற்காகச் சிறைக்குப் போக வேண்டிய அவசியமில்லை" என்றுன் நகுலன்.

"என்ன? என்ன? என்னுடைய அந்த ஆசை நிறைவேறி விட்டதா? நீ சொல்லுவது ஒன்றுமே எனக்கு விளங்கவில்லையே! சற்று விவரமாகச் சொல்லேன்!" என்று கேட்டான் நகுலனின் தகப்பன்.

"ஆமாம்! செங்கிப்பட்டி பண்ணையார் கொள்ளையடிக்கப்பட்டார்! இப்போதுதான்! அதுவும் உங்கள் கைகளால்தான்...!" என்றுன் நகுலன்.

அதைக் கேட்ட நகுலனின் தகப்பனுடைய கண்கள் ஆச்சரியத்தினுல் இன்னும் அகலமாக விரிந்தன.

"உங்களுக்கு நான் சொல்லுவது வியப்பை அளிக்கிறதல்லவா? நான் தான் இப்போது செங்கிப்பட்டி பண்ணையார்" என்றுன் நகுலன்.

"நீ சொல்வது எனக்கு இன்னும் புதிர் போடுவது போலவே அல்லவா இருக்கிறது!" என்றுன் தகப்பன்.

"நான் செங்கிப்பட்டி பெரிய பண்ணையாரின் உள்ளத்தையே கொள்ளை கொண்டு விட்டேன். ஆகவே, இப்

## அதன் தவறு இல்லை!



பொழுது செங்கிப் பட்டியின் சின்னப் பண்ணையாராகிவிட்டேன். தாங்கள் சின்னப் பண்ணையாரைக் கொள்ளையடித்தால் என்ன? பெரிய பண்ணையாரைக் கொள்ளையடித்தால் என்ன? இரண்டும் ஒன்றுதானே?" என்றான். நகுலனின் தந்தை என்ன பேசுவது என்று தெரியாமல் விழித்தான்.

அதற்குள் நகுலன், "ஏன் அப்பா! இனி தாங்கள் திருடப் போகமாட்டீர்களே?" என்று கேட்டவாறே தகப்பனின் முகத்தைக் கூர்ந்து கவனித்தான். அப்பொழுதும் நகுலனின் தந்தை ஒன்றும் புரியாமல் ஆச்சரியத்துடன் விழித்துக் கொண்டு நிற்கவே, நகுலன் "அப்பா! அது ஒரு பெரிய கதை. பிறகு விவரமாகச் சொல்லுகிறேன். எனக்குக் கிடைத்திருக்கும் இவ்வளவு பெருமைக்கும் காரணம் அம்மாதான். காரில் ஏறுங்கள்! அவள் மடிந்து மண்ணான இடத்தைத் தொட்டு என் கண்களில் ஒத்திக் கொள்ள வேண்டும்!" என்றான் நகுலன். அப்பொழுது அவன் குரல் தழுதழுத்தது.

அடுத்தகணம் இருவரையும் ஏற்றிக் கொண்டு கார் கிளம்பிற்று. (முற்றும்)

**இரண்டு விடுகதைகள்**

1. ஒற்றைக்காலி ஓடிப்போனாள் முத்துமுத்தாய்ப் பல்லுக்கொட்டும்
2. பிரித்த பாயைச் சுருட்ட முடியாது

சென்ற வார கணக்குக்கு விடை:
மூத்த பிள்ளைக்கு 27. இரண்டாவது பிள்ளைக்கு 18. மூன்றாவது பிள்ளைக்கு 6

# ஆள் மாறாட்டம்

அன்று வாத்தியார் அம்மாள் வகுப்புக்குள் நுழைந்ததும் நுழையாததுமாகத் தன் வகுப்புப் பெண்களைப் பார்த்து, "குழந்தைகளே! அடுத்த திங்கட்கிழமை இன்ஸ்பெக்டர் அம்மாள் வரப்போகிறாள். அதற்காக நான் என்ன செய்யப் போகிறேன், தெரியுமா? இன்றைக்கே உங்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கேள்வியும், அதற்குச் சரியான பதிலும் சொல்லித் தந்து விடுகிறேன். இன்றைக்கு உங்களிடம் எந்தக் கேள்வியை யாரிடம் கேட்கிறேனோ, அதே கேள்வியைத்தான் அன்றும் கேட்பேன். நான் கேட்கும் கேள்விகளுக்கு 'டக், டக்' என்று தயங்காமல் பதில் சொல்லிவிட வேண்டும். என்ன தெரிந்ததா!" என்றாள். பிறகு "ஏன், சரளா! நம்மைப் படைத்தது யார், தெரியுமா?" என்று கேட்டாள்.

"கடவுள், டீச்சர்!" என்றாள் அவள்.

"ரைட், நீ உட்காரு! கமலா, கடவுள் படைத்த முதல் மனிதனை என்ன பெயர் கொண்டு அழைக்கிறோம்? சொல்லு, பார்ப்போம்?" என்றாள்.

"அவனை ஆதி மனிதன் என்று அழைக்கிறோம்."

"ரொம்ப சரி!"

இவ்விதமாக வாத்தியார் அம்மாள் இன்ஸ்பெக்டர் அம்மாள் வரப் போகும் தினத்தன்று, தான் கேட்கப் போகும் கேள்விகளையும் பதிலையும் சொல்லிக் கொடுத்தாள்.

திங்கட் கிழமை வந்தது. குறிப்பிட்ட நேரத்துக்கு இன்ஸ்பெக்டர் அம்மாளும் வந்து சேர்ந்தாள். சிறிது நேரத்துக்கெல்லாம் வாத்தியார் அம்மாள் இன்ஸ்பெக்டர் அம்மாளை அழைத்துக் கொண்டு வகுப்புக்கு வந்தாள்.

வாத்தியார் அம்மாள், "நம்மைப் படைத்தது யார்?" என்ற முதல் கேள்வியைக் கேட்டாள்.

கமலா எழுந்து, "ஆதி மனிதன், டீச்சர்!" என்று பதில் சொன்னாள்.

"என்ன, தப்பாகச் சொல்லுகிறாயே, குழந்தை! நம்மைப் படைத்தது கடவுள் அல்லவா?" என்று திருத்தினாள் இன்ஸ்பெக்டர் அம்மாள்.

"அது எனக்குத் தெரியும். ஆனால் அந்தப் பதிலைச் சொல்ல வேண்டிய சரளா என்னும் பெண் மசிக்கூடு அலம்பி வருவதற்காக வெளியே போயிருக்கிறாள். நான் அடுத்த கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டியவள். ஆகவேதான், நான் என் கேள்விக்குச் சொல்ல வேண்டிய பதிலைச் சொன்னேன்" என்று அழுத்தந் திருத்தமாகச் சொன்னாள் கமலா.



—அக்ஷயம்




இதோ இருக்கும் இந்த சர்க்கஸ் வண்டிக்குள் ஒரு மிருகம் இருக்கிறது. உங்களால் கண்டு பிடிக்க முடிகிறதா, பாருங்கள்! A என்னும் புள்ளியில் ஆரம்பித்து B என்னும் புள்ளிவரை கோடு இழுத்தால் என்ன மிருகம் என்பது தானாகத் தெரியும்.



சைனா தேசத்தவர்கள் மீன் பிடிப்பதற்குக் கையாளும் புது வழி இது. பளபளவென்று பிரகாசிக்கும் பலகை ஒன்றைப் படகின் பக்க வாட்டில் தொங்க விடுவார்களாம். தங்கள் நிழலைக் காண்பதற்காகத் துள்ளிக் குதிக்கும் மீன்கள் படகுக்குள்ளேயே விழுந்து விடுமாம்.



இது ஒரு பெரிய வித்தை இல்லை. மேலே காணும் படத்தில் உள்ளது போல் படங்கள் தயார் செய்து கீழே காட்டப் பட்டிருப்பது போல் தீப் பெட்டியில் செருகிக் கொள்ளுங்கள். குச்சியைச் சுற்றினால் கோழி தன் குஞ்சுகளுடன் ஓடும்.



தாத்தா, உனக்கு இந்தப் புதிருக்கு விடை தெரியுமா? தலை இல்லை, முகம் இல்லை. ஆனால் பல் மட்டும் ஏராளம். இது என்ன?

என்ன தாத்தா, விழிக்கிறாய்? உனக்கு உபயோகமில்லாத வஸ்து. உனக்கு எங்கே தெரியப் போகிறது? சீப்பு, தாத்தா! சீப்பு!












## 10. ரேம்பஸ் பிழைத்தான் !

தூண்டினிற் புழுவாகத் நியூனஸ் துடித்தாள். அவளுக்கு அனைத்துமே அஸ்தமித்து விட்டதுபோலத் தோன்றியது. ஏனெனில் அந்தக் கொலைகாரக் கல் ரேம்பஸின் தலைக்குமேல் ஓரே ஒரு அங்குலத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. அது இறங்கும் பொழுது இலேசாக ஆடிக்கொண்டு இறங்கியது. அதைக் காணும் பொழுது மரணம் மலைபோல ஆடி அசைந்து கொண்டு கீழிறங்கி வருவது போலத் தோன்றியது.

இன்னும் சில வினாடிகள்தான்! அதற்குப் பின் ரேம்பஸின் வாழ்க்கைச் சூரியன் எக்காலத்துக்குமே எந்நேரத்துக்குமே அஸ்தமித்து விட வேண்டியதுதான்! ரேம்பஸை அதற்குப் பின் இப்புவியில் காண முடியுமா? காண முடியாதுதான்!

நியூனஸ் தீவிரமாகச் சிந்தனையில் ஆழ்ந்தவாறே பின் நகர்ந்தாள். அவளுடைய சிந்தனை மறுபடியும் விட்ட இடத்துக்கே வந்து தொட்டுக் கொண்டது. '......ஆமாம் நான் முன் நினைத்தவாறே பருனிடம் சொல்லி வெற்றி கண்டு விடுகிறேன் என்று வைத்துக் கொள்ளுவோம். அதன் முடிவு என்ன ஆகும்?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள்.

"என்ன ஆகும்? ரேம்பஸ் கட்டாயம் உயிர் தப்பி விடுவான். இதைத் தவிர வேறு நல்ல முடிவு ஏது இருக்க முடியும்? ஆனால் எனக்கும் ரேம்பஸுக்கும் இடையே மிக மிகப் பெரிய அகழி அல்லவா ஏற்பட்டுவிடும்? அதை அகழி என்று சொல்லுவதுகூடத் தவறு. கொந்தளிக்கும் கருங்கடல் என்று சொல்லுவது தான் சரி. அதன் ஒரு கரையில் நான் நிற்பேன்; இன்னொரு கரையில் அவன் நிற்பான். இருவருமே உயிர் வாழ்வோம். இருவருமே மனம் துடிப்போம். ஒருவருக்காக ஒருவர் ஏங்கித் தவிப்போம், ஒருவரை யொருவர் எண்ணிப் புலம்புவோம். எங்கள் இருவருக்குமே வாழ்க்கையில் ஒரு இன்பம் இராது; மன நிம்மதியிராது. உயிர் வாழ்ந்திருப்பதும் ஒன்றுதான், சாவதும் ஒன்றுதான் என்ற நிலைமை ஏற்பட்டு விடும். செத்துச் செத்துப் பிழைப்பதும் ஒரு பிழைப்பா? காதல் பாதையிலே சென்று இருவருமே இறந்து விடுவதும், இறந்தும் அமரர்களாகி விடுவதும் எவ்வளவோ மேலானதாயிற்றே! செத்தும் சிரஞ்சீவிக் காதலர்களாகத் திகழ்வதில் தனிப் பெருமை இருக்கத் தானே செய்கிறது? ஒருவரை யொருவர் பிரிந்து மனம் புழுங்கி நம்பிக்கையற்ற வாழ்வு வாழ்வதைக் காட்டிலும் காதலில்

கட்டுண்டு காலன் வாயில் விழுந்து மடிவது எவ்வளவோ மேலான தல்லவா?' என்று எண்ணினாள்.

நியூனஸுக்கு இருப்புக் கொள்ளவில்லை. மறுபடியும் ஜன்னல் அருகே சென்றாள். அந்தக் கருங்கல் ரேம்பஸின் மூக்குக்கு வெகு சமீபத்தில் வந்துவிட்டது. அவளுடைய பார்வைக்கு அந்தக் கல் அவனுடைய மூக்கின்மேல் உராய ஆரம்பித்துவிட்டதோ என்ற பிரமையைக்கூட உண்டு பண்ணியது. அவள் தன் தொண்டை கொண்ட மட்டில் வீறிட்டுக் கத்திவிட்டாள். பீதியில் கிறீச்சிட்ட அவளுடைய குரல் மிகவும் பயங்கரமாக நாலு திசையும் ஒலித்தது. அடுத்த கணம் ஜன்னலிலிருந்து தலைதெறிக்க ஒரே ஓட்டமாக வாசற் கதவு இருந்த பக்கம் ஓடினாள்.



வாசற் கதவு வெளிப்புறமாகத் தாளிடப்பட்டிருந்தது. நியூனஸ் தன் பலம் கொண்ட மட்டில் ஓங்கி இரு கைகளாலும் கதவைத் 'தடதட' வென்று தட்டினாள். கதவு திறந்து கொண்டது. காவலாளி தன் உடைவாளின் முனையைத் தரையில் ஊன்றிய வண்ணம் அவளெதிரே தலை வணங்கி நின்றான்.

"ஓடு, ஓடு!"—நியூனஸ் வெறி பிடித்தவள் போல இரைந்து கத்தினாள். "உடனே ஓடிப் போய் உன் பாதுஷாவிடம் நான் அவனுடைய விபத்தினை ஏற்றுக் கொண்டு விட்டதாகச் சொல்லு. சீக்கிரம்! சீக்கிரம்!!" என்றாள்.

என்ன இருந்தாலும் கடைசியில் அவள் பெண்தானே? அபலைதானே? அது மட்டுமா? அவளுடைய உள்ளத்தில் ரேம்பஸின் மீது அளவற்ற காதலும் வேறு அல்லவா குடி கொண்டிருந்தது!

அதைச் சொல்லி முடித்ததும் அவள் 'விடு விடு' என்று நேரே ஜன்னலண்டை வந்தாள். அப்பொழுது அவள் கண்ட காட்சி அவளுக்கு அளவற்ற மகிழ்ச்சியை அளித்தது; வயிற்றில் பால் வார்த்தது போலிருந்தது. அந்தக் கொலைகார இயந்திரத்தின் பாவிச் சக்கரங்கள் நேர் மாறாகச் சுற்றிக் கொண்டிருந்தன. முன்பு சிறிது சிறிதாகக் கீழே இறங்கிக் கொண்டிருந்த அந்தக் கொலைகாரக் கருங்கல், இப்பொழுது மேல் நோக்கிச் சென்று கொண்டிருந்தது! அதைக் காணத்தான் அவளுக்கு என்ன மகிழ்ச்சி! என்ன ஆனந்தம்! என்ன குதூகலம்!

ரேம்பஸும் வியப்பு மிகுதியினால் இங்கும் அங்கும் படுத்தபடியே பளிச்சிட்ட கண்களுடன் பார்த்தான். சிறைச்சாலையின் வேலையாட்கள் அவனைப் பிணைத்திருந்த சங்கிலியை அவிழ்த்து விட்டுக் கொண்டிருந்தனர்.

பருனுக்கு என்மேல் இவ்வளவு இரக்கம் ஏற்படக் காரணம் என்ன? அவனுக்கு இரக்கம் காட்டுவது, கருணை புரிவது என்பதெல்லாம் தெரியாத விஷயம் ஆயிற்றே! இதென்ன விந்தை!' என்று ரேம்பஸ் யோசித்துப் பார்த்தான். ஆனால் அவனுக்கு அது சரியாக விளங்கினால்தானே? அதைப் பற்றிச் சிந்திக்கச் சிந்திக்க அவனுக்கு வியப்புத்தான் அதிகரித்தது.

நியூனஸின் மனதுக்கு நிம்மதி ஏற்பட்டது. அவள், 'அப்பாடா!' என்று நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டு பின்புறம் திரும்பினாள். அதற்குள் வாசல் கதவு திறந்து கொண்டது. பருன் புன்னகை புரிந்த வண்ணம் அறைக்குள்ளே நுழைந்தான். நியூனஸ் மிகுந்த ஆவலுடன், "அவன் பிழைத்து விட்டானா?" என்று கேட்டாள்.

பருன் பேராசை தவழும் விழிகளால் நியூனஸை அப்படியே விழுங்கிவிடுபவன் போலப் பார்த்தான். பிறகு மிகவும் மெதுவான குரலில், "ஆம், அவன் பிழைத்து விட்டான். ஆனால் இன்னும் ஐந்து வருஷங்களுக்கு அவன் கல் உடைத்தாக வேண்டும்!" என்றான். அதைக் கேட்ட நியூனஸ் அப்படியே அசந்து விட்டாள்.

மறு நாள் கல்யாணம் ஆகிவிட்டது.

அன்று மாலை பருன் அரசாங்க ஆடை அணிந்து, நியூனஸுக்கும் அரசாங்க அணிகளும் ஆடைகளும் அணிவித்து, அவளுடைய கையுடன் கை கோத்த வண்ணம், தன் மாளிகையின் உப்பரிகை மீது தன் நாட்டு மக்களுக்குத் தரிசனம் தருவதற்காக வந்து நின்றான். மாலைக் கதிரவனின் மஞ்சள் வெய்யிலிலே 'தக தக' வென்று ஜொலிக்கும் ஆடைகளும் அணிகளும் அணிந்து கொண்டு அழகே உருவெடுத்து நிற்கும் தங்கள் மகாராணியைக் கண்டு மக்கள் ஆனந்த பரவசமுற்றனர். 'ஆகா! என்ன அழகு! என்ன அழகு! இந்த அழ

குக்கு ஈடு இணையான அழகு ஈரேழு பதினாலு உலகத்திலும் உண்டா?' என்று மனதுக்குள் வியந்தனர். அவர்களுக்கு ஏற்பட்ட ஆனந்தத்துக்கும் ஆச்சரியத்துக்கும் ஓர் எல்லை இல்லை. அவர்கள் தரையில் விழுந்து வணங்கி மன்னனுக்கும் மகாராணிக்கும் மரியாதை செலுத்தினர். பட்டமகிஷியைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் பருனின் தனிப்பட்ட மேதை பிரகாசித்திருப்பதைக் கண்டு மிகவும் வியந்து பாராட்டினர். தங்கள் மகாராணியைப் போன்று அழகு வாய்ந்தவர்கள் இந்த உலகத்திலேயே இருக்க முடியாது என்ற பெருமையில் உள்ளும் புறமும் மகிழ, ஆனந்த நர்த்தனமே புரிந்து விட்டனர் என்றால் அதற்குமேல் அதிகம் சொல்லுவானேன்?

தியூனஸூம் இன்றைய நேற்றைய தியூனஸாகவா காட்சி அளித்தான்? அவள் நேற்று இருந்த இருப்புக்கும் இன்று இருக்கும் இருப்புக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் அல்லவா இருந்தது! நேற்றோ அவள் ஒரு அடிமைப் பெண். இன்றோ அவள் எகிப்து நாட்டின் மகாராணி; பட்டமகிஷி! நேற்று அவள் மணம் ஆகாத கன்னிப் பெண். இன்று மணம் ஆன மணப் பெண். நேற்று அவள் தாறுமாறாகக் கிழிந்து கிடந்த கந்தல் துணிகளை உடுத்தியிருந்தாள். இன்று மிக மிகப் பெரிய சாம்ராஜ்யத்தின் விலை மதிக்க முடியாத மிகவும் உயர்ந்த முத்துக்களும் மாணிக்கங்களும், வைரங்களும் வைடூரியங்களும் அழகிற் சிறந்த ஆபரணங்களாக உருவெடுத்து அவளுடைய தேகத்தில் ஏறி அழகுக்கு அழகு செய்து கொண்டிருந்தன. இன்றைய இந்தத் தியூனஸூக்கும் நேற்றைய அந்தத் தியூனஸூக்கும் அடே அப்பா! எவ்வளவு மாபெரும் வித்தியாசம்? மலைக்கும் மடுவுக்கும், வானத்துக்கும் புவிக்கும் என்று உவமைகளை அடுக்கிக் கொண்டே போகலாம். அவ்வளவு வித்தியாசம் அவளிடையே ஏற்பட்டிருந்தது. இன்று அவளுடைய தாயாரே அவளை நேரில் நின்று பார்த்தாலும் கூட அவளை அடையாளம் கண்டு கொள்ள முடியாது. இன்று எகிப்து நாட்டிலே ஒப்பில்லாத அதிர்ஷ்டம் வாய்ந்த அழகி ஒருத்தி உண்டு என்றால் தியூனஸைத்தான் சொல்ல வேண்டும். இன்று அவளைப் பருன் தன் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொண்டு விட்டான். அதை விட அவளுக்கு அதிர்ஷ்டம் வேறு என்ன வேண்டும்? ஆகவே அகில உலகமும் அவளைக் கண்ணின் மணியெனப் போற்றிப் புகழ்ந்து பாராட்டத் தயாராயிருந்தது. அன்று முழுவதும் எங்கு பார்த்தாலும் அவளைப் பற்றியேதான் பேச்சு! அன்று எகிப்து நாடு முழுவதும் மகிழ்ச்சி வெறியில் மிதந்து கொண்டிருந்தது என்று சொன்னால் கூட அது மிகையாகாது.

ஆனால் அவள் கொஞ்சமாவது மகிழ்ச்சியுடன் இருந்தாளா?

இல்லை, அதுதான் இல்லை. அருமையும் பெருமையும் அலாதிச் சோபையும் வாய்ந்த, இன்பக் கேளிக்கைகளுக்கும் ஐசுவரியத்துக்கும் உறைவிடமான எகிப்து சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்திலே அமரும் பாக்கியம் கிடைத்த பின்னரும் கூட அவள் அந்த அதிர்ஷ்ட ஹீனனான அப்பாவி ரேம்பனின் நினைவாகவே இருந்தாள். அவன் எந்தக் கண் காணாத இடத்திலே கல் உடைத்துக் கொண்டிருந்தானோ, யார் கண்டார்கள்? அவன் அந்தக் கொடுமைக்கு ஆளாக அப்படி என்ன பெரிய குற்றம் செய்து விட்டான்? அவன் தியூனஸைக் காதலித்தான் அல்லவா? அதுதான் அவன் செய்த குற்றம். காதலித்தது ஒரு குற்றமா? இல்லா விட்டால் இந்தத்

## பூ! இவ்வளவுதானா?



தண்டனைக்கு அவன் ஏன் ஆளாக வேண்டும்? நியூனஸ் அவனை நினைத்து இரவு—பகல் எந்நேரமும் மனம் புழுங்குவான்; பெருமூச்செறிவான். பித்தம் தலைக்கேறியவள் போலப் படுத்துப் பொருமுவாள். அவள் பெருமூச்செறிவதும் பொருமுவதும் ஒரு கணம் கூட நிற்பதில்லை. அவளுடைய பெருமூச்சுக்கு ஒரு முடிவே கிடையாதோ?

பருன் அந்தக் காட்சிகளையெல்லாம் தன் கண்களாலேயே கண்டான். அவளைக் கல் நெஞ்சம் வாய்ந்தவள் என்று எண்ணி அவளை நெருங்கவே அவன் யோசித்தான்; அஞ்சினான். என்றைக்காவது ஒரு நாள் அவளுடைய அந்தக் கல் நெஞ்சம் உருகி இரக்கம் என்னும் திரவ பதார்த்தம் உண்டாகாதா? என்றைக்காவது ஒரு நாள் அவளுடைய உள்ளத்திலிருந்து ரேம்பனின் நினைவு புகை போலப் புகைந்து போகாமலே இருந்து விடுமா? என்றைக்காவது ஒரு நாள் அவள் நம்முடைய அரசாங்கத்தின் அருமை பெருமைகளை உணர்ந்து கை நீட்டி அன்புடன் நம்மை ஆலிங்கனம் செய்து கொள்ள முன்வர மாட்டாளா? என்றைக்காவது ஒரு நாள் நமக்கு அந்த நன்னாள் வந்தே தீரும். அதுவரை விட்டுப் பிடிப்பதுதான் மிகவும் உத்தமமானது என்ற நம்பிக்கை அவன் உள்ளத்திலே வேரூன்றியிருந்தது. ஆகவே அவன் அந்த நன்னாளை மிகவும் ஆவலுடன் எதிர் நோக்கிக் கொண்டிருந்தான்.

அவனோ அகிலம் புகழும் சக்கரவர்த்தி; தன் நிகரில்லாத பாதுஷா. அப்படியிருக்கும்பொழுது அவனுடைய ஆட்சிக்குட்பட்ட அந்த சாம்ராஜ்யத்திலே, அவன் விருப்பத்துக்கு எதிரிடையாக அயலான் ஒருவன் பங்கு போட்டுக் கொள்ள வருவதென்றால் அதை அவன் மனம் ஒப்புமா? அந்த சாம்ராஜ்யம் அன்பின் சாம்ராஜ்யமாயிருந்தால் என்ன? அல்லது கேவலம் கற்பனைக் கோட்டையாகவே இருந்தால் தான் என்ன? பிறர் பங்கு போட்டுக் கொள்ள வருவதைப் பருனினால் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? அம்மாதிரி எண்ணத்துக்கே அவன் மனம் இடம் கொடுக்கக் கூசிற்று. தனக்கு மிஞ்சித்தான் தானமும் தர்மமும் என்ற கொள்கையை அவனுடைய மனம் தீவிரமாகக் கடைப் பிடித்தது. தான் விரும்பிய பெண்ணின் உள்ளத்தை இன்னொருவன் கொள்ளை கொண்டு போவதென்றால் சும்மா கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருக்க அவன் என்ன ஜடமா? அவனுடைய உள்ளத்திலே, இல்லாத எண்ணம் எல்லாம் எழுந்து உள்ளூறப் புகைந்து கொண்டிருந்தது.

ஆனால் நியூனஸின் பெண் பிடிவாதத்தைக் கண்ட பருனுக்குத் நியூனஸின் அன்பைப் பெறவேண்டுமென்றால் வெகு காலம் வரை, தான் காத்திருக்க வேண்டும் என்பது நன்கு விளங்கிவிட்டது. ஆனால் ஆவலை அடக்கமாட்டாமல் அலை பாய்ந்து கொண்டிருக்கும் தன் நெஞ்சு அவ்வளவு நீண்ட காட்கள் எப்படிப் பொறுத்திருக்கும் என்பதுதான் அவனுக்குப் புரியாத புதிராகவே இருந்து வந்தது. கடவுளுக்கு அவன் படும் அவஸ்தையைக் காணச் சகிக்கவில்லை; கருணை பிறந்துவிட்டது. ஆகவே, கல்யாணம் ஆகி ஒரு வாரம் ஆவதற்கு முன்பாகவே நீக்ரோவர்களின் தலைவனான ஷம்லார்க் தன் பெண்ணை அவமதித்த குற்றத்துக்காகப் பழி வாங்கும் நோக்கத்துடன் எல்ப்து நாட்டின் மீது படையெடுத்து விட்டான்.

பருன் சுகவாசி. இன்பம் ஒன்றையே குறிக் கோளாகக் கொண்டவன். நெஞ்சிலே ஈவு இரக்கம் என்னும் திரவ பதார்த்தமே இல்லாதவன். தலைலத்திலே நாட்டம் கொண்டவன். அவன் தன்னுடைய பொக்கிஷத்தை நிரப்புவதற்காக ஆயிரக்கணக்கான-லட்சக்கணக்கான ஏழைகளின் வாழ்க்கையை மண்ணோடு மண்ணாக்கிப் பாழ்படுத்தியவன். ஆனால் அவன் கோழை அல்ல; பேடி அல்ல; பயங்கொள்ளி அல்ல. நெஞ்சு உரம் வாய்ந்தவன்; நல்ல யுத்த வீரன். ஆகவே, அவன் சுல்தான் ஷம்லார்க் தன் நாட்டின் மீது படையெடுத்துவிட்டான் என்னும் செய்தியைக் கேட்டுச் சிறிதும் கலங்கவில்லை. அதை ஒரு பெரிய விஷயமாகக் கருதிப் பொருட்படுத்தவும் இல்லை. அந்தச் செய்தி காதில் விழுந்த உடனேயே முன்பின் சிறிதும் யோசிக்காமல், தன் படைகளை உடனே யுத்தத்துக்குத் தயாராகும்படி உத்தரவிட்டான். அது மட்டும் அல்ல; வீரப் போர் புரிந்து வெற்றி வாகை சூட்டிக் கொள்ளவோ, அல்லது யுத்த களத்திலே வீர மரணம் எய்தி வீர வாழ்வு வாழ்வதற்கோ தன்னையும் தயார் செய்து கொண்டு விட்டான்.

அன்று மாலை இருட்டியதும் இருட்டாததுமாக இருக்கும்பொழுது எல்பது நாட்டின் பிரதான சேனாதிபதி கோட்டையின் கொத்தளத்தின்மீது ஏறி நின்று நீக்ரோவர்களுடனே யுத்தம் நிகழப் போகிறது என்ற செய்தியை கர்ஜிதம் செய்துவிட்டான். அதைக் கேட்டதும் அந்நாட்டு மக்கள் தேசத்தின் பொருட்டுத் தியாக வேள்வியில் குதிக்கவும் தயாராகிவிட்டனர்.

இரவு வந்தது. இருள் கவிந்தது. பருன் இரும்புக் கவசம் பூண்டு, நியூனஸினிடம் விடை பெற்றுக் கொள்ளுவதற்காக அவளுடைய மாளிகைக்குச் சென்றான். (தொடரும்)

வேறொன்றும் கூற தேவையில்லை



சிறந்த பிஸ்கோத்து

# பிரிட்டானியா




SC. 2216




# 3

'செத்துத்தான் சமூகத்தின் அனுதாபத்தைப் பெற வேண்டுமென்றால், அந்தப் பாழும் அனுதாபம் எனக்கு வேண்டவே வேண்டாமே!' — அகல்யா.



ஜனகலிங்கம் தன் அறையை விட்டுச் சென்றதும் அகல்யா ஒன்றும் தோன்றாதவளாய் ஒரு கண நேரம் நின்றாள். மறுகணம் கட்டிலின் மேல் 'தொப்'பென்று குப்புற விழுந்தாள். அவளையும் அறியாமல் அவளுடைய கை விரல்கள் ஒன்றையொன்று 'மளக், மளக்' கென்று நெரித்தன. "என்ன இருந்தாலும் அந்தத் தசரதகுமாரனைப் போல இவர் அவ்வளவு அசடு இல்லை!" என்று அவளுடைய இதழ்கள் முணுமுணுத்தன.

அவ்வளவுதான்; அவளுடைய மனத்தில் அப்புறம் எந்தவிதமான சலனமும் இல்லை. அவளுடைய கண்கள் எதையும் குறிப்பிட்டு நோக்காமல் நிலைத்தது நிலைத்தபடி நின்றன. இமைகள், 'இனி தங்களுக்கு ஒரு வேலையும் இல்லை' என்று எண்ணியோ என்னவோ, அவள் புருவங்களுக்குக் கீழே ஒதுங்கி விட்டன.

இந்த நிலையில் தன்னைமறந்து அவள் எவ்வளவு நேரம் இருந்தாளோ, தெரியவில்லை. 'டக்' என்ற சத்தம் அவள் காதில் விழுந்தது. அந்தச் சத்தத்தின் காரணமாக அவள் மனம் மீண்டும் சலன முற்றது. கண்கள் நிலை குலைந்தன; இமைகளும் அவற்றைத் தொடர்ந்து தங்கள் வேலையைச் சுறுசுறுப்பாகச் செய்ய ஆரம்பித்தன. அவள் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுவிட்டு, அடுத்த அறையைப் பரிதாபத்துடன் நோக்கினாள்!

அதே சமயத்தில் அந்த அறையில் எரிந்து கொண்டிருந்த மின்சார விளக்கு 'டக்'கென்று அணைந்தது.

"சரி, அந்தப் பீஷ்மாச்சாரியார் கதவைத் தாளிட்டுவிட்டார் போலிருக்கிறது; விளக்கையும் அணைத்துவிட்டார் போலிருக்கிறது!" என்று அகல்யா தனக்குள் நினைத்துச் சிரித்துக் கொண்டாள்.

அத்துடன் அவள் சும்மா இருந்துவிடவில்லை; "இருட்டில்தான் உங்களுக்குத் தூக்கம் பிடிக்குமோ?" என்றாள் நிலையணையில் சாய்ந்தபடியே.

"ஆமாம், ஏன் அப்படிக் கேட்கிறாய்?—பணக்காரர்களுக்கும் திருடர்களுக்குந்தான் இருட்டில் தூக்கம் பிடிப்பதில்லை!" என்றான் அந்த அதிகப்பிரசங்கி தன் அறையில் இருந்தபடியே.



"அவர்களுடன் காதலர்களையும் சேர்த்துக்கொள்ளுங்கள்!" என்று சொல்லி விட்டு அவன் சிரித்தான்; அவளும் சிரித்தாள்.



இரண்டு அறைகளிலும் ஒரு நிமிஷம் அமைதி நிலவியது; மறு நிமிஷம், "என்னுடைய அறையில் விளக்கு எரிந்துகொண்டிருப்பது உங்களுக்குச் சிரமமாயில்லையே?" என்று கேட்டாள் அவள்.

"நான் என்னத்தைச் சொல்வது? உபசாரத்துக்காக 'அதெல்லாம் ஒன்றுமில்லை' என்று வேண்டுமானால் சொல்லிவைக்கலாம்!" என்றான் அவன்.

"அப்படியெல்லாம் நீங்கள் ஒன்றும் சொல்ல வேண்டாம்" என்று சொல்லிக்கொண்டே எழுந்து சென்று, அகல்யா குறிப்பறிந்து விளக்கை அணைத்தாள்.

"கதவைத் தாளிட்டுவிட்டு விளக்கை நிறுத்து!" என்றான் கனகலிங்கம்.

"அவசியமில்லை; உங்களிடம் எனக்கு நம்பிக்கை இருக்கிறது!" என்றாள் அகல்யா சிரித்துக் கொண்டே.

கனகலிங்கத்தின் உள்ளத்தில் இது 'சுருக்'கென்று தைத்தது. அடுத்த நிமிஷம் 'நடக்' என்ற சத்தம் மீண்டும் அவனுடைய அறையிலிருந்து வந்தது; அதைத் தொடர்ந்து அந்த அறையின் கதவும் திறந்தது.

"ஏன் கதவைத் திறந்து விட்டீர்கள்?" என்று அகல்யா ஒன்றும் அறியாதவள் போலக் கேட்டாள்.

"உன்னிடமும் எனக்கு நம்பிக்கை இருக்கிறது!" என்று கனகலிங்கம் கூறினான்.

"முதலில் இல்லை போலிருக்கிறதே?" என்றாள் அகல்யா.

"இருந்தது; 'பசியைப் போன்றது காதல்' என்று நீ சொன்னதும் சோற்றைக் கண்ட பசியைப் போல அது பறந்துவிட்டது!" என்றான் கனகலிங்கம்.

அகல்யா பதிலுக்கு ஒன்றும் சொல்லவில்லை; சிந்தனையில் ஆழ்ந்து விட்டாள்.

'காதல் ஒரு பசி!—ஆம், காதல் ஒரு பசிதான்!—உணவுப் பஞ்சத்தால் வயிற்றுப் பசி ஏற்படுகிறது; கல்விப் பஞ்சத்தால் அறிவுப் பசி ஏற்படுகிறது; அறிவுப் பஞ்சத்தால் காதல் பசி ஏற்படுகிறது!—இல்லையென்றால் அன்பு மிக்க அப்பாவை விட்டு, அருமை மிக்க அம்மாவை விட்டு, இப்படி யாரோ ஒருவன் பின்னால் நிம்மதியான்று ஓடி வந்திருப்பேனா? அவன் கடவுளிடம் என்னை ஒப்படைத்துவிட்டுச் சொல்லிக் கொள்ளாமல் கம்பி நீட்டியிருப்பானா?'

'பார்க்கப் போனால் இதில் தான் என்ன தவறு இருக்கிறது?—நான் ஒரு பெண்; என்றைக்காவது ஒரு நாள் அப்பாவையும் அம்மாவையும் விட்டு யாரோ ஒருவன் பின்னால் ஓட வேண்டியவள்தானே?— இருந்தாலும் அப்பா, அம்மாவுக்குத் தெரிந்து ஓடுவதற்கும் தெரியாமல் ஓடுவதற்கும் வித்தியாசம் இருக்கிறதல்லவா?—பெற்றவர்களுக்குப் பெருமை தேடி வைப்பதற்குப் பதிலாக இப்பொழுது நான் சிறுமையல்லவா தேடி வைத்திருக்கிறேன்? அத்துடன், நானும் பெருமையடைவதற்குப் பதிலாகச் சிறுமையல்லவா அடைந்திருக்கிறேன்?'

'வீடிழந்து வாசல் இழந்து, தந்தையை இழந்து தாயாரை இழந்து, மதி இழந்து மானம் இழந்து, இடமொன்று எங்கிருந்தோ வந்து அடுத்த அறையில் யாரோ ஒருவனுடன் கூடிக் குலாவும் அளவுக்கல்லவா இப்பொழுது நான் துணிந்து விட்டிருக்கிறேன்?'

'ஓ, ஓ! என்ன கேவலம், என்ன கேவலம்! நினைக்கும்போதே நெஞ்சம் பதறுகிறதே!—இந்த நிலையிலும் நான் இன்னும் உயிர் வாழ்ந்து கொண்டிருப்பதற்குக் காரணம்



என்ன ?—உயிரின்மீதுள்ள ஆசையா ?—ஆம், உயிரின்மீதுள்ள ஆசைதான் !—ஆனால் அந்த உயிர் மிகமிக அற்பமானதென்றும், உலகத்திலுள்ள ஆண் - பெண்கள் மனம் வைத்தால் சுலபமாகச் சிருஷ்டிக்கக் கூடியதென்றும் சில மேதாவிகள் சொல்கிறார்களே, அது உண்மையில்லையா ? — உண்மையாயிருந்தால் அப்படிச் சொல்பவர்கள் ஏன் இன்னும் இந்த உலகத்தில் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் ? மேல் உலகத்துக்குப் போய்த் தொலைவதுதானே ?'

'எப்படிப் போக முடியும் ?—அவர்களும் நானும்—ஏன், இந்த உலகமே—இன்று வரை உயிர் வாழ்ந்து கொண்டிருப்பதற்குக் காரணம் அந்த ஒரு கண நேர இன்பந்தானே ? அந்த இன்பம் மனித உயிரைப் போலவே மிகமிக அற்பமானதாயிருக்கலாம். ஆனால் அந்த அற்ப இன்பத்துக்காக இதுவரை உலகத்தில் நடந்திருக்கும் போராட்டங்கள் எத்தனை ! படுகொலைகள் எத்தனை ! சரித்திர சாம்ராஜ்யங்கள் எத்தனை ! — அப்பப்பா ! எண்ணத்தான் தொலையுமா ? எழுத்தில்தான் அடங்குமா ?'

'அப்படியே இருக்கட்டும்; ஆனால் அந்த இன்பத்தைத் தேடிக் கொள்ள வேண்டிய முறையில் தேடிக்கொண்டிருந்திருக்கலாமல்லவா ? அதற்காக இப்படி வந்து நடுத் தெருவில் நிற்காமல் இருந்திருக்கலாமல்லவா ?'

'அப்பா, அம்மா மட்டும் தன்னுடைய காதலை ஏற்றுக் கொண்டு தனக்கு முறைப்படி கல்யாணம் செய்து வைத்திருந்தால்...?'

'அப்பொழுது மட்டும் என்ன வாழ்ந்திருக்கப் போகிறது ? தன்னை நம்பி—தன்னுடைய சொந்த உழைப்பை நம்பி—வாழ்வதற்குத் தைரியமில்லாத அவன், என்னுடைய நகை நட்டுக்களைக் கொண்டு வாழ முடியும் வரை 'கண்ணே, மூக்கே !' என்று என்னுடன் காதல் புரிந்திருக்கப் போகிறான் ; அதற்குப் பிறகு, 'அதைக் கொண்டா, இதைக் கொண்டா !' என்று அப்பாவிடமும் அம்மாவிடமும் விரட்டியடித்திருக்கப் போகிறான் !'

'என்ன அநியாயம் ! — இந்தப் புண்ணியாத்மாக்கள்தான் வருங்காலத் தலைவர்களாமே ! சமூகத்தைச் சீர்திருத்தப் போகிறவர்களாமே !'

இதை நினைத்ததும் அகல்யா தன் துயரத்தை மறந்து 'களுக்' கென்று சிரித்து விட்டாள். அத்துடன் அவள் சிந்தனையும் கலைந்துவிட்டது. "அட — கடவுளே, கடவுளே !" என்று வாய் விட்டுச் சொல்லியபடி, அவள் கட்டிலை விட்டு எழுந்து, முந்தானையைத் தரையில் விரித்துப் படுக்கப் போனாள்.

"கடவுள் இல்லை ; இங்கே கனகலிங்கம் தான் இருக்கிறார் !" என்றான் கனகலிங்கம் படுக்கையில் கிடந்தபடியே.

"இன்னும் நீங்கள் தூங்கவில்லையா ?" என்று கேட்டாள் அவள்.

"நீகூட இன்னும் தூங்கவில்லைபோலிருக்கிறதே !" என்றான் அவன்.

இருவரும் சிரித்தார்கள் ; சிரித்து, தங்கள் குற்றத்தையும் அதனால் ஏற்பட்ட வெட்கத்தையும் ஒருவருக்கொருவர் மறைத்துக் கொள்ளப் பார்த்தார்கள் !

* * *

**ம**றுநாள் பொழுது விடிவதற்கு முன்பே அகல்யா தன்னுடைய தூங்காத தூக்கத்திலிருந்து எழுந்து விட்டாள். அப்பொழுது இளைய சூரியனின் ஒளியை முக மலர்ச்சியுடன் வரவேற்று முதுமை படைந்த இருள் கொஞ்சங் கொஞ்சமாக விலகிக் கொண்டிருந்தது. அந்த அபூர்வக் காட்சியைக் கண்டதும் 'பகலுக்காக இரவும் இரவுக்காகப் பகலும் தியாகம் செய்வது போல, உலகத்தில் ஆணுக்காகப் பெண்ணும் பெண்ணுக்காக ஆணும் தியாகம் செய்தால் வாழ்க்கை எவ்வளவு இன்பகரமாயிருக்கும் !' என்று அகல்யா நினைத்தாள்.

அவள் அவ்வாறு நினைத்ததும், 'இப்பொழுதுகூட ஒன்றும் குடி முழுகிப் போய் விடவில்லை ; வேண்டுமானால் அந்த இந்திரனுக்காக நீ எந்த நிமிஷத்திலும் தியாகம் செய்யலாம்' என்றது அவளுடைய அந்தராத்மா.

'எப்படி?' என்று கேட்டது அவள் மனம்.

'அவனுக்காக நீ உன்னுடைய உயிரை விட்டுவிடலாம் !'

இதைக் கேட்டதும் அவள் மனம் சீறி எழுந்தது. 'அந்தத் துரோகிக்காக நான் ஏன் உயிரை விட வேண்டும் ? அதனால் நான் அடையப்போகும் நன்மைதான் என்ன ?—சமூகத்தின் அனுதாபத்தை வேண்டுமானால் பெறலாம். செத்துத்தான் சமூகத்தின் அனுதாபத்தைப் பெறவேண்டுமென்றால் அந்தப் பாழும் அனுதாபம் எனக்கு வேண்டவே வேண்டாமே !' என்று அது ஆர்ப்பரித்தது.

அதைத் தொடர்ந்து, "ஆம், சமூகத்துக்கும் நான் பலியாகமாட்டேன் ; அந்தச் சண்டாளனுக்கும் பலியாக மாட்டேன். இருதாரத்தாரும் எனக்கு வேண்டுமானால் பலியாகட்டும்" என்று சொல்லிக் கொண்டே அகல்யா

எழுந்து நின்றான். கட்டுக் குலைந்திருந்த அவள் புடவை நழுவிக் கீழே விழுந்தது. 'சட்'டென்று அதை எடுத்து அவள் சரிப்படுத்துவதில் முனைந்தாள்.

அதே சமயத்தில் அவள் அறையின் கதவை யாரோ 'டொக், டொக்' என்று தட்டினார்கள்.

"யார் அது?" என்று கேட்டாள் அகல்யா.

"நான் தான்!" என்றான் கனகலிங்கம்.

"ஓ, பீஷ்மாச்சாரியாரா? — வாருங்கள், வாருங்கள்; உங்கள் பிதாமகருக்குக் கல்யாணமாகி விட்டதா?" என்று கேட்டாள் அகல்யா சிரித்துக்கொண்டே.

கனகலிங்கத்துக்கு ஒன்றும் புரியவில்லை. "பிதாமகருக்குக் கல்யாணமாகாமலா நான் பிறந்து இவ்வளவு பெரியவனாக வளர்ந்திருக்கிறேன்......?" என்று அவன் ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

"நீங்கள் முதல் மனைவிக்குப் பிறந்திருப்பீர்கள்; இரண்டாவதாக எந்தப் படகோட்டியின் பெண்ணையும் உங்கள் அப்பா காதலிக்க வில்லையா? அவருக்காக 'நான் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன்' என்று நீங்கள் சபதம் எடுத்துக் கொள்ள வில்லையா? 'எத்தனை கல்யாணங்கள் வேண்டுமானாலும் நான் செய்து கொள்கிறேன்; நீ ஒரு கல்யாணமும் செய்து கொள்ளாமல் எனக்காகப் பிரம்மசாரியாக இருந்தால் சரி!' என்று உங்கள் அப்பா உங்களிடம் சொல்லவில்லையா......?" என்று கேள்விக்குமேல் கேள்வியாக அடுக்கிக் கொண்டே போனாள் அகல்யா.

கனகலிங்கத்துக்கு இப்பொழுதுதான் விஷயம் புரிந்தது. அவன் குறுக்கிட்டு, "நான் பீஷ்மாச்சாரியும் இல்லை; எங்கள் அப்பா எந்தப் படகோட்டியின் பெண்ணையும் காதலிக்கவும் இல்லை!" என்றான்.

"காதலிக்கவில்லை என்று சொல்லாதீர்கள்; காமுறவில்லை என்று சொல்லுங்கள்!" என்று திருத்தினாள் அகல்யா.

"எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்!" என்றான் கனகலிங்கம்.

"நல்ல வேளை! பீஷ்மாச்சாரியாரையும் அவருடைய தகப்பனாரையும் எல்லோரும் பின்பற்றவில்லை. அப்படிப் பின்பற்றியிருந்தால் உலகமே சூன்யமாய்ப் போயிருக்கும்!— என்ன இருந்தாலும் உங்கள் அப்பா ரொம்ப நல்லவராயிருந்திருப்பார் போலிருக்கிறது; அதனால்தான் நீங்களும் ரொம்ப ரொம்ப நல்லவராயிருக்கிறீர்கள்!" என்றாள் அகல்யா.

"ஆச்சரியமாயிருக்கிறதே! — நான் நல்லவன் என்று இதற்குள் உனக்கு எப்



மணியம்.

படித் தெரிந்தது?" என்று கேட்டான் கனகலிங்கம்.

"தாளிடாமல் மூடி வைத்திருக்கும் கதவைக் கூட 'டொக், டொக்' என்று தட்டுகிறீர்களே!—அதிலிருந்தே தெரியவில்லையா, நீங்கள் ரொம்ப ரொம்ப நல்லவர் என்று?"

"அறைக்குள் இருப்பவர்கள் எப்படி எப்படியோ இருக்கலாம். அதனால் உள்ளே வருபவர்கள் அவர்களை எச்சரித்துவிட்டு வருவது நல்லதல்லவா?"

"ஆமாம், ஆமாம்; வெள்ளைக்காரர்களிடமிருந்து 'சூட்' அணிவது, 'ஸிகரெட்' குடிப்பது, 'லவ்' பண்ணுவது, 'டைவர்ஸ்' செய்து கொள்வது, இங்கிலீஷ் படித்துவிட்டுத் தமிழைப் பழிப்பது, ஷேக்ஸ்பியரையும் மில்டனையும் கண்டவன்போல் கதையளந்து, கம்பனையும் வள்ளுவனையும் காணாதவன்போல் நடிப்பது—இப்படி அவர்களிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டிய 'நல்ல பழக்கங்கள்' எத்தனையோ இருக்க, நீங்கள் போயும் போயும் கதவைத் தட்டிவிட்டு உள்ளே வரும் 'கெட்ட பழக்க'த்தைக் கற்றுக் கொண்டிருக்கிறீர்களே?"

"எனக்கென்னவோ, அது ஒன்றுதான் அவர்களிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டிய நல்ல பழக்கம் என்று தோன்றிற்று; அதனால் அதைக் கற்றுக் கொண்டேன்—அது சரி; இப்போது காலை டிபனுக்காக உனக்குக் காசு வேண்டாமா?" என்று கேட்டான் கனகலிங்கம்.

"தேவையில்லையே; ஏழையின் மீது இவ்வளவு தயவாவது வைத்திருக்கிறீர்களே?"

"காரணம் வேறொன்றும் இல்லை; நானும் உன்னைப்போல ஏழையாயிருப்பதுதான்!" என்றான் கனகலிங்கம்.

"நான் பெண்ணாயிருப்பது இல்லையே!—அப்படியானால் சரி; கொடுங்கள்!" என்று சிரித்துக்கொண்டே, அகல்யா இரு கைகளையும் அவனுக்கு முன்னால் ஏந்தினாள்.

கோயில் குருக்கள் ஹரிஜனுக்கு விபூதிப் பிரசாதம் கொடுப்பது போலக் கனகலிங்கம் ஒரு ரூபாயை எடுத்து அவள் கைகளில் போட்டுவிட்டுக் குளிக்கும் அறையை நோக்கி நடந்தான்.



"இது பலனை எதிர்பாராமல் செய்யும் கருமமாகும்?" என்றாள் அகல்யா.

கனகலிங்கம் திரும்பி, "ஆமாம்; ஆனால் இதே கருமத்தைச் சிலர் செத்துப் போனவர்களுக்காகச் செய்கிறார்கள்; நான் உயிரோடிருப்பவர்களுக்காகச் செய்கிறேன்—அவ்வளவுதான் வித்தியாசம்!" என்றான்.

"நான் அந்தக் கருமத்தைச் சொல்லவில்லை........" என்று ஏதோ சொல்ல வந்தாள் அகல்யா.

"நீ சொல்லும் கருமமும் நான் சொல்லும் கருமமும் ஏறக்குறைய ஒன்றே!" என்று சொல்லிவிட்டுப் போனான் கனகலிங்கம்.

சிறிது நேரத்துக்குப் பிறகு அகல்யா தன்னுடைய காலைக் கடன்களையெல்லாம் முடித்துக் கொண்டு வந்து பார்த்தபோது, கனகலிங்கத்தின் அறை பூட்டப்பட்டிருந்தது. 'எங்கேயோ வெளியே போயிருக்கிறார் போலிருக்கிறது' என்று எண்ணிக் கொண்டே அகல்யா தன் அறையின் கதவைத் திறந்தாள். உள்ளேயிருந்த மேஜையின் மீது ஐந்தாறு புத்தகங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அதன் மேல் ஒரு சீட்டும் இருந்தது. அந்தச் சீட்டில், 'பொழுதை வீணாகப் போக்காதே; அப்படிப் போக்குவதாயிருந்தால் எந்தச் சமயத்திலும் உன்னைக் கைவிடாத 'நண்பர்க'ளான புத்தகங்களைப் படிப்பதில் போக்கு!" என்று எழுதியிருந்தது. 'எல்லாம் இவருடைய வேலைதான்!' என்று சொல்லிக் குறுநகை பூத்துக்கொண்டே அவற்றில் ஒன்றை எடுத்துப் படிக்க ஆரம்பித்தாள் அகல்யா.

## 4

அன்று காலை மணி எட்டு இருக்கும். அகஸ்தியர் விழா கோழையை வீரனாக்கும், மிருகத்தை மனிதனாக்கும், மனிதனைத் தெய்வமாக்கும் பாரதியார் பாடலுடன் ஆரம்பமாயிற்று. பண்டிதர்களில் சிலர் அந்தப் பாடலைப் பாடி முடிக்கும் வரை தங்கள் காதுகளைப் பொத்திக் கொண்டிருந்தனர். கேட்டால் புரிந்துவிடுமோ, உள்ளத்தைக் கவர்ந்து விடுமோ, உணர்ச்சியைப் பெருக்கி விடுமோ என்று அவர்களுக்குப் பயம்!



கனகலிங்கம் அவர் அனைப்போல் பயப்படவில்லை; அவன் விழாப் பந்தலுக்கு வெளியே புத்தகங்களைத் தரையில் பரப்பிவிட்டு, பாரதியாரின் பாடலை உணர்ச்சியின் மிகுதியால் கண்களில் நீர் மல்கிய வண்ணம் கேட்டுக் கொண்டிருந்தான்.

"எம்பா!"

கனகலிங்கம் குரல் வந்த திசையை நோக்கித் திரும்பினான். அவனுக்கு எதிரே தொந்தி பெருத்த மனிதர் ஒருவர் நின்று கொண்டிருந்தார். அவரைப் பார்த்தால் குறைந்த பட்சம் ஒரு நூறு பேருடைய உழைப்பையாவது அவர்களுக்குத் தெரியாமல் தொடர்ந்து திருடித் தின்று கொண்டிருப்பவர் போலத் தோன்றியது. அடியில் தும்பைப் பூவை நிகர்த்த 'வைாஸ்கோ' வேஷ்டி; மேலே ஜிலுஜிலுக்கும் பட்டுச் சட்டை; கழுத்திலிருந்து கால் வரை நீண்டு தொங்கிப் பளபளக்கும் சரிகை உத்தரீயம்; சண்டைக்குச் சென்டைக் கொடுக்காமலிருப்பதற்காக வெட்டிக் கொண்டிருந்த 'ஸம்மர்' கிராப்; காதில் வைரக் கடுக்கன்; பயங்கர மீசை—ஆகியவையெல்லாம் சேர்ந்து அவரை 'நிகர்ப் பிரமுகர்' என்று எடுத்துக் காட்டின. அவருடைய கைவிரல்களில் மின்னிக் கொண்டிருந்த வைர மோதிரங்களுக்கிடையே பழைய ஆங்கிலப் பத்திரிகையொன்று பரிதாபமாக விழித்துக் கொண்டிருந்தது!

கனகலிங்கம் அவரை நோக்கி, "என்ன வேண்டும்?" என்று கேட்டான்.

வந்தவர் கீழே கிடந்த புத்தகங்களையெல்லாம் வைடுருவிப் பார்த்துவிட்டு, "இங்கிலீஷ் பொஸ்தகம் எதுனாச்சும் உங்கிட்ட இருக்குதாப்பா?" என்று 'வெளிச்சம்' போட்டார்.

கனகலிங்கத்துக்கு விஷயம் புரிந்துவிட்டது. அவன் "இல்லை" என்று அவரிடம் உண்மையைச் சொல்லவில்லை; அதற்குப் பதிலாக, "ஒ, எஸ்! வாட் புக் யூ வாண்ட்?" என்று ஒரு போடு போட்டான்.

"என்னப்பா சொல்றே, நீ?" என்றார் அந்தப் பிரமுகர்.

"ஒன்றும் சொல்லவில்லை; நீர் போய் வாரும் ஐயா, போய் வாரும்!" என்றான் கனகலிங்கம்.

அந்தத் 'நிகர்ப் பிரமுகர்' முகத்தில் அசடு வழிய அவனைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றார். அவருடன் வந்திருந்த ஒரு 'காலி பாக்கெட்' ஆசாமி, "என்ன தம்பி, உனக்கு விஷயம் தெரியாது போலிருக்கிறது! அவருடைய செலவில்தான் இந்த விழா நடக்கிறதாக்கும்!" என்றான்.

"தெரியாமலென்ன? — தெரிகிறது, தெரிகிறது!" என்றான் கனகலிங்கம் தலையைப் பலமாக ஆட்டிக் கொண்டே.

அவர்கள் சென்றதும் யானைக் காதுகள் போன்ற 'காலர்'ரைத் தூக்கி விட்டுக் கொண்டு, கையில் காண்டீபத்தைப் பிடித்த அர்ஜுனனைப் போல 'அக்கினியாஸ்திர'த்தைப் பிடித்துக் கொண்டு, இந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த நாட்டின் 'வருங்காலத் தலைவர்'கள் என்று சொல்லப்படுபவர்களில் ஒருவர் வந்தார். அவர் கனகலிங்கத்தைக் கம்பீரமாக நோக்கி, கையிலிருந்த 'அக்கினியாஸ்'திரத்தை 'டபக்' கென்று வாயில் வைத்து, 'ஜிவ்' என்று பலமாக ஓர் இழுப்பு இழுத்து விட்டுவிட்டு, "ஆண் - பெண் மர்மங்கள் இருக்கிறதா?" என்று 'பளிச்' என்று கேட்டார்.

"ஆண்-பெண் மர்மமா! — எனக்குத் தெரிந்தவரை ஆண் ஆண்தான்; பெண் பெண்தான். இதில் என்ன மர்மம் இருக்கிறது, சுவாமி?" என்றான் கனகலிங்கம்.

"சரி; இரகசியங்கள்......?"

"என்ன இரகசியம்......?"

"ஆண்-பெண் இரகசியம்தான்!"

"அந்த இழவெடுத்த இரகசியத்தைத்தான் வாழையடி வாழையாகத் தினசரி எல்லோரும் தங்கள் தங்கள் வாழ்க்கையில் பார்த்துக் கொண்டிருக்கிறார்களே, புத்தகம் வேறு வேண்டுமா?" என்றான் கனகலிங்கம்.

"இருந்தால் கொடு; இல்லையென்றால் 'இல்லை' என்று சொல்லி விட்டுப் போயேன்! — வீண் பேச்சு எதற்கு?" என்று முறைத்துக் கொண்டே அந்த 'வருங்காலத் தலைவர்' சென்றார்.

அவர் சென்றதும் தோளின் மீது அரிணைக் கயிற்றைப் போட்டுக் கொண்டு ஒரு பால்காரன் வந்தான். அவன் எல்



லாப் புத்தகங்களையும் அவனுடன் எடுத்துப் புரட்டிப் பார்த்து விட்டு, "என்னப்பா, எல்லாத்திலும் அச்சுப் போட்டிருக்குமா? வெள்ளையா ஒண்ணுமே இருக்காதா? இத்தினை பொஸ்தகம் இருக்குது; பால் கணக்கு எழுதறத்துக்கு எத்தாப் போல ஒண்ணுமே இல்லையே!" என்றான்.

கனகலிங்கத்துக்கு ஆத்திரம் தாங்கவில்லை. "அட தமிழா, தமிழா!" என்று சொல்லி, அவன் தன் அடி வயிற்றில் அடித்துக் கொண்டான்.

"நீ மட்டும் இங்கிலீசுக்காரனோ?" என்று ஒன்றும் புரியாமல் கேட்டுக் கொண்டே அந்தப் பால்காரன் கடையைக் கட்டினான்.

அதே சமயத்தில், "... ...விழா இத்துடன் முடிந்தது; மீண்டும் மாலை மூன்று மணிக்கு ஆரம்பமாகும்" என்று தலைவர் அறிவித்தார்.

கனகலிங்கம் கூட்டம் கலைந்ததும் புத்தகங்களை எடுத்து அவசர அவசரமாக அடுக்கிக் கட்டிக் கொண்டு, 'ஜா விலா'வுக்குத் திரும்பினான்.

* * *

புத்தகக் கட்டை மேஜையின் மீது 'தொப்'பென்று போட்டதும் "யார் அங்கே?" என்று கேட்டுக் கொண்டே தன் அறையைவிட்டு வெளியே வந்தாள் அகல்யா.



ஹோட்டல் முதலாளி (உள்ளே யிருந்து சாப்பிட்டு விட்டு வந்தவரைப் பார்த்து):— உட்காருங்கோ ஸார், இப்படி! வெற்றிலை பாக்கு கொண்டுவரச் சொல்லட்டுமா?

சாப்பிட்டுவிட்டு வந்தவர்:— கையலம்புகிறதுக்குள்ளே சாப்பிட்டது ஜீரணமாகிவிட்டது, ஸார்! சீக்கிரமாகக் கொஞ்சம் டிபனும், காப்பியும் கொண்டுவரச் சொல்லுங்கோ!

"சாப்பாட்டு வேலையெல்லாம் முடிந்து விட்டதா?" என்று அவளைக் கனிவுடன் விசாரித்தான் கனகலிங்கம்.

"இல்லை; நீங்கள் வந்த பிறகு சாப்பிடலாமென்று இருந்தேன்!" என்றாள் அகல்யா.

கனகலிங்கம் சிரித்தான்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?"

"ஒன்றுமில்லை; சாப்பாட்டுக்குக் காசு வேண்டாமா?"

"வேண்டாம்; காலையில் கொடுத்த காசில் மிச்சம் இருக்கிறது" என்றாள் அகல்யா.

"சரி; என்ன இருந்தாலும் பெண்கள் சிக்கனம் பிடிப்பதில் கெட்டிக்காரர்களல்லவா? அதற்கு நீ மட்டும் எப்படி விதிவிலக்காயிருக்க முடியும்?—நான் சாப்பிடப் போகிறேன்; நீயும் சாப்பிடப் போ!" என்று சொல்லிவிட்டுக் கனகலிங்கம் கீழே இறங்கினான். அகல்யாவும் அவனைத் தொடர்ந்து கீழே இறங்கினாள்.

சிறிது நேரத்துக்குப் பிறகு, கனகலிங்கம் சாப்பிட்டுவிட்டு மேலே வந்தான். சட்டைப் பையில் சாவியைக் காணோம். 'எங்கே வைத்து விட்டோம்?' என்று இப்படியும் அப்படியுமாகக் கொஞ்சம் நடை போட்டபடி அவன் யோசித்துப் பார்த்தான். சீக்கிரத்தில் நினைவுக்கு வரவில்லை. 'என்னமோ தெரியவில்லை; நம்முடைய புத்தி இரண்டு நாட்களாகத் தடுமாறுகிறது!' என்று அவன் தனக்குத்தானே முணுமுணுத்துக் கொண்டான்.

'எதற்கும் கீழே சென்று சாப்பிட்ட இடத்தில் பார்த்தால் என்ன?' என்று தோன்றிற்று அவனுக்கு. உடனே 'சட்'டென்று திரும்பி, மாடிப் படிகளில் 'தட தட'வென்று இறங்கினான்.

"நில்லுங்கள்; சாவியைத்தானே தேடிக் கொண்டு வருகிறீர்கள்?" என்று கேட்டுக் கொண்டே, அகல்யா அவனுக்கு எதிரே படி ஏறி வந்தாள்.

அவனும் அதற்குமேல் கீழே இறங்கவில்லை; அவளும் அதற்குமேல் மேலே ஏறவில்லை!

இருவரும் ஒரு ஜோடிக் கண்கள் படபடக்க, ஒரு ஜோடி இதழ்கள் துடிதுடிக்க, நின்றது நின்றபடி நிலைகுலைந்து நின்றார்கள்!

அவர்களுக்கு இடையே ஒரே ஒரு படி—ஆம், ஒரே ஒரு படிதான் இருந்தது!

கனகலிங்கம் ஒரு பெரும் பிரயத்தனம் செய்து தன்னைச் சமாளித்துக் கொண்டான். பிறகு, அவன் தன் வெடவெடக்கும் கைகளை நீட்டி அவளிடமிருந்த சாவியை வாங்கிக் கொண்டு, "ஏன் இவ்வளவு

நேரம்?" என்று சம்பந்தா சம்பந்த மில்லாமல் விசாரித்தான்.

அகல்யா தன் அழகான முகத்தை இன்னும் அழகு படச் சுளித்துக் கொண்டு, "ஹோட்டல்காரர் என்னை மேலும் மேலும் பொய் சொல்லத் தூண்டுகிறார்; அதனால் தான் இவ்வளவு நேரம்!" என்று கிள்ளையைப்போலக் கொஞ்சினாள்.

"ஏன், நீங்கள் இருவரும் ஏற்கெனவே ஏதாவது பொய் சொல்லியிருந்தீர்களா?" என்று அதற்குள் ஒரு நிதானத்துக்கு வந்து விட்ட கனகலிங்கம் கேட்டான்.

"ஆமாம்; அந்த மோசக்காரன் அவர் ஏதோ அன்று கேட்டதற்கு, 'எனக்கு இங்கே உத்தியோகம் மாற்றலாகியிருக்கிறது!' என்று ஓர் அபாண்டத்தைச் சொன்னான். அது மட்டுமல்ல; நாலே நாலு நாட்கள் தான் ஹோட்டலில் தங்கியிருப்போமென்றும், அப்புறம் வீடு பார்த்துக் கொண்டு போய்விடுவோமென்றும் அவன் சொல்லி வைத்தான். இப்பொழுது 'உங்கள் கணவர் எங்கே?' என்று அந்த ஹோட்டல்காரர் கேட்கிறார். நான் என்னவென்று சொல்வது?— வீடு கிடைத்து விட்டதென்றும் அவர் வெளியிலிருந்து சாமான்களை எடுத்துக் கொண்டு வரப் போயிருக்கிறாரென்றும் ஒரு பிரம்மாண்டமான பொய்யைச் சிருஷ்டித்துச் சொன்னேன். 'அப்படியானால் இப்பொழுது நீங்கள் தனியாகவா இருக்கிறீர்கள்?' என்று கேட்டார். 'இல்லை; அடுத்த அறைக்கு வந்திருப்பவர் அவருடைய நண்பர் தான். அவரிடம் என்னைப் பார்த்துக் கொள்ளும் படிச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்' என்று இன்னொரு பொய்யைத் தூக்கிப் போட்டேன். அவர் மிரண்டு போய், 'அப்படியானால் இந்தாருங்கள் — இது அவருடைய சாவி போலிருக்கிறது; இதைத் தயவு செய்து அவரிடம் கொடுத்துவிடுங்கள்' என்றார்; நான் 'சரி' என்று வாங்கிக் கொண்டு வந்தேன்!" என்றாள் அகல்யா.

"இதற்காகவா இவ்வளவு சங்கடப்படுகிறாய்? பொய் சொல்லத் தூண்டுபவர்கள், பொய் சொல்வதற்குக் காரணமாயிருப்பவர்களெல்லாம் சங்கடப்படாமல் இருக்கும்போது நீ மட்டும் ஏன் சங்கடப்பட வேண்டும்?" என்றான் கனகலிங்கம்.

"ஏற்கெனவே பழக்கமில்லை; அதனால் தான்......"

"பழக்க மில்லாவிட்டால் என்ன?— பழக்கிக் கொடுக்கத்தான் இந்தப் பாழ்த்த உலகம் விரித்து கிடக்கிறதே!" என்றான் கனகலிங்கம்.



மாஜிஸ்டிரேட்:— நீ ஆடு திருடினாய் என்று குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. உனக்கு யாரேனும் சாட்சி உண்டா?

குற்றவாளி:— இல்லீங்க; நான் சாட்சிகளை வைத்துக் கொண்டு ஆடு திருடுகிறதில்லீங்க!

---

"இருந்தாலும் இதில் இன்னொரு சங்கடமும் இருக்கிறது......"

"அது என்ன சங்கடம்?"

"ஹோட்டல்காரர் அந்த 'ஓடிப் போனவ'னுக்கு நீங்கள் நண்பரா என்று உங்களைக் கேட்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது நீங்களும் எனக்காகப் பொய் தானே சொல்லவேண்டியிருக்கும்?"

"உலகத்தில் எத்தனையோ பேர் ஒரு பெண்ணுக்காக எத்தனையோ பாதகங்கள் செய்கிறார்கள். அப்படியிருக்கும்போது நான் உனக்காக ஒரு பொய்கூடவா சொல்லக் கூடாது?" என்றான் கனகலிங்கம்.

இதைக் கேட்டதும் நன்றி யுணர்ச்சியால் தன்னை மறந்து அகல்யா இரு கரங்களையும் கனகலிங்கத்தின் கன்னங்களுக்கு அருகே கொண்டு போனாள்.

இந்தச் சமயத்தில் ஹோட்டல்காரர் தம் ஹோட்டலில் சாப்பிட்டுத் தம்முடைய வயிற்றைக் கெடுத்துக் கொள்ள விரும்பாமல் வீட்டுக்குப் போவதற்காக வெளியே கிளம்பி, அந்த வழியே வந்தார்!

அவரைப் பார்த்ததும் அடுப்பங்கரையில் திருட்டுத்தனமாகப் பால் குடிக்கும் பூனை வீட்டுக்காரியைக் கண்டதும் பதுங்கி ஓடுவதுபோல, இருவரும் ஒருகணம் தயங்கி, மறுகணம் இரண்டே எட்டில் தங்கள் தங்கள் அறையை அடைந்தனர். (தொடரும்)




## 5. சங்கரின் கோபம்

மூனுசாமி, சபேசய்யர் வீட்டில் உண்மையான வேலைக்காரன். பத்து வருஷ காலமாக அவன் அந்த வீட்டில் வேலை செய்து வருகிறான். அவனுடைய மனைவி காமாட்சியும் அவனோடு அந்த வீட்டிலேயே வேலை செய்து வருகிறாள். இந்த இருவரும் அந்தக் குடும்பத்தோடு சேர்ந்தவர்கள் போலவே எப்பொழுதும் நடந்து கொள்வார்கள்.

மூனுசாமிக்கும் அவனுடைய மனைவிக்கும் தெரியாமல் அந்த வீட்டில் ஒரு ரகசியமும் இருக்காது. இந்தப் பத்து வருஷ காலத்தில் மூனுசாமியும் அவன் மனைவியும் எவ்வளவு எஜமான விசுவாசத்தோடு உழைத்திருக்கிறார்கள்! அதனால் அவர்கள் கண்ட பலன் ஏதேனும் உண்டா! ஒன்றுமில்லை. அவர்கள் காட்டும் விசுவாசத்திற்கு மெச்சி இரண்டு ரூபாயாவது சம்பளத்தில் அதிகமாக்கினார்களா என்றால் இல்லை. சபேசய்யர் வியாபாரம் செய்து நாளுக்கு நாள் காசுக்கு மேல் காசாகச் சேர்ப்பது போல் தன் வீட்டு வேலைக்காரர்களின் பொருளாதார நிலைமையும் சீரடைய வேண்டும் என்று நினைப்பதில்லை. அவருடைய சகதர்மிணி சீதம்மாள் மிகவும் தாராளமாகவும் பரிவாகவும் பேசுவாளே தவிர, நிதி விஷயத்தில் கணக்காகவும் கறாராகவும் இருப்பாள். சங்கரன் ஊரில் மேடை மீது ஏறி ஏழைகளையும் தொழிலாளர்களையும் பற்றி வானளாவப் பரிந்து பேசுவானே தவிர, தன் வீட்டில் ஒரு வேலைக்காரனின் வாழ்க்கையை உயர்வாக்குவோம் என்ற நினைப்பே தோன்றுவதில்லை. அதற்கு நேர் மாறாக அவர்களிடம் அதிகாரம் செய்யவும், விரட்டவும் நன்றாகப் பழகியிருந்தான். பிரேமா சில சமயம் மூனுசாமியிடமும் காமாட்சியிடமும் அனுதாபமும் பச்சாத்தாபமும் கொண்டவள் போல் பேசினாலும் தன் காரியத்திலேயே கண்ணாக இருந்து அவர்களை வேலை வாங்குவாள்.

இந்த நிலையில் மூனுசாமிக்கு நாளுக்கு நாள் அந்த வீட்டில் வேலை செய்வதற்கே வெறுப்பேற்படாமல் என்ன செய்யும்! ஒரே சமயத்தில் நான்கு பேர்களும் வேலை ஏவுவார்கள்- அந்தச் சமயத்தில் யார் சொல்வதை முதலில் கேட்பது என்று அவனுக்குத் திணறல் ஏற்படும். ஒருவர் வார்த்தையைக் கேட்டால் மற்றவர்களுக்குக் கோபம் வந்து விடும். வசை மாரி எல்லை மீறிவிடும்—அவன் அந்த வேலையை விட்டு விடுவதென்று எவ்வளவோ தடவை முயற்சி செய்தும் அவனுடைய சம்சாரத்தின் யோசனையின் பேரில் மனச் சமாதானமடைந்திருக்கிறான்.

அன்று மூனுசாமிக்கு வெறுப்பு அசாத்தியமாகி விட்டது. அன்று மாலை பிரேமா மூனுசாமியைத் தன் சிநேகிதி வீட்டிலிருந்து ஏதோ ஒரு புஸ்தகத்தை வாங்கிக் கொண்டு வரும்படி சொன்னாள். அந்தச் சமயத்தில் சங்கர் அவனைக் கடையில் போய் இரண்டு க்ஷவர பிளேடுகள் வாங்கி வரும்படி அவசரமாக உத்தரவிட்டான். மூனுசாமி பிரேமாவின் சிநேகிதியின் வீட்டிற்குப் போய்ப் புத்தகத்தை வாங்கிக் கொண்டு வரும் வழியில் கடையில் இரண்டு க்ஷவர பிளேடுகள் வாங்கிவந்தான்—சிறிது தாமதமாகிவிட்டது. சங்கரன் முகத்தில் சோப்பு நுரையுடன் மூனுசாமிக்காகக் காத்திருக்கும்படி நேர்ந்து விட்டது. இதன் காரணமாக சங்கரனின் ஆத்திரம் எல்லை கடந்து விட்டது. அந்த ஆத்திரத்தில் மூனுசாமியை இரண்டடி கூட அடித்து விட்டான். இந்தப் பத்து வருஷ காலமாக மூனுசாமியை

அந்த வீட்டில் ஒருவருமே அடிக்கத் துணிந்த தில்லை. இன்று சங்கரன் முனுசாமியை அடித்தது முனுசாமியின் மனதை மிகவும் புண்ணாக்கி விட்டது. அன்றிலிருந்து வேலையை விட்டு விடுவதாகத் தீர்மானித்துவிட்டான் முனுசாமி.

முனுசாமி தோட்டத்தில் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து ஆழ்ந்த யோசனையிலிருந்தான். வழக்கம்போல அவன் மனைவி காமாட்சி அவனைச் சமாதானப் படுத்தலானாள். அவளுடைய சமாதானம் எதுவும் முனுசாமியின் மனதிற்குப் பிடிக்கவில்லை. "இதோ பார், காமாட்சி! நானும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்துவிட்டேன். இனிமேல் இந்த வீட்டில் வேலை செய்ய நமக்கு யோக்கியதை இல்லை. இந்த வீட்டில் உள்ள ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக இருக்கிறார்கள். அவரவர்களுக்கு ஏற்றபடி நாம் நடந்துகொள்ள வேண்டியிருக்கிறது" என்றான் வெறுப்புடன்.

"நீங்க என்னவோ அப்படிச் சொல்லுறீங்க! நான் என் ஆயுசிலே இந்தமாதிரி ஒரு நல்ல வீட்டிலே வேலை செய்ததே இல்லை. இந்த மாதிரி ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு நினுசா இருந்தாத்தான் நமக்கு நல்லது. எல்லோரும் ஒண்ணாய்ச் சேர்ந்துக்கிட்டா இதைவிடக் கஷ்டமாயிருக்கும். தெரிஞ்சுக்கிங்க! இந்த அப்பு ஐயா வாராரே, அவரைப் பாரு! ஆளுக்குத் தக்கபடி பேசித் தன் காரியத்தை எப்படியோ சாதிச்சுக்கிட்டுப் போறாரு! ஒரு ஆண்பிள்ளை இந்தக் காலத்திலே அப்படி இருந்தால்தான் பிழைக்க முடியும். சும்மா உடலாலே உண்மையா உழைச்சுப் புண்ணியமில்லே. வாயாலே பேசித்தான் காரியத்தைச் சாதிச்சுக்கிடணும்" என்றாள் காமாட்சி.

"வாங்குகிற கூலிக்கு உண்மையா உழைக்கணும் என்றுதானே புத்தி தோணுது! சும்மா ஆளுக்குத் தகுந்தாப்போலே பேசி ஊரை ஏமாற்றித் திரியப் பிடிக்கவில்லையே...!"

"பிடிக்கவில்லை என்றால் இப்படி உண்மையா உழைச்சு உழைச்சு உடம்பு ஓடாகப் போக வேண்டியதுதான்!" என்றாள் காமாட்சி, தன் புருஷனைக் கடிந்து கொள்ளும் தோரணையில்.

"சரி, கோபிக்காதே! இனிமேல் அப்படி வேணுமானாலும் நடந்து பார்க்கிறேன், ஏதேனும் நன்மை ஏற்படுகிறதா என்று. மறுபடியும் எனக்கு இந்தமாதிரி அவமானம் ஏற்பட்டால் ஒரு நிமிஷம்கூட இந்த வீட்டிலே நிற்க மாட்டேன். அது போகட்டும்; இங்கே வாராரே அப்பு ஐயா, அவருக்குச் சின்ன அம்மா மேலே ஒரு கண்ணு இருக்கும்போலிருக்குதே...!" என்றான் ஜாடையாக முனுசாமி.

"அதிலே என்ன ரகசியம்! அவருக்கு ஒரு கண்ணு மாத்திரமில்லே; இரண்டு கண்ணும் இருக்குது சின்னம்மா பேரிலே. சின்னம்மாவைப் பார்த்துட்டா வெட்டுக் கடாவைப் போல விழிக்கும்போதே தெரியவில்லையா!" என்று சொல்லிக் கொண்டே திரும்பியவன் திடுக்கிட்டான். அப்பு கையில் ஒரு தோல் பையுடன் அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்தான். மேல் காட்டுத் தோரணையில் சூட்டும் ஹாட்டும் அணிந்து ஆடம்பரமாக அவன் வந்தது கண்கொள்ளாக் காட்சியாகத் தானிருந்தது. "அதோ பாரு! அந்த அப்பு ஐயாவே நம்மை நோக்கி வாராரு. இத்தனை நேரம் சின்னம்மாவோடேதான் மாடியிலே பேசிக்கிட்டிருந்தாரு!" என்றாள் காமாட்சி. அதற்குள் அப்பு அவர்களை நெருங்கி விட்டான்.

"என்ன முனுசாமி! சின்னய்யா இன்று உன் மேலே கொஞ்சம் கோபமாய் இருக்கிறார் போலிருக்குது; ஜாடையாய்த் தெரிந்தது!" என்றான் அப்பு சிரித்துக் கொண்டே.

"நான் என்ன செய்யட்டுங்க! அவர் வேலை சொல்ற சமயத்திலே சின்னம்மா ஒரு வேலை சொல்லுது. சின்னம்மா வேலை சொல்லுகிற சமயத்திலே பெரியம்மா கூப்பிடுது. பெரியம்மா வேலை ஏவுகிற சமயம் பார்த்துத்தான் பெரிய ஐயா ஏதாவது அவசரமா ஒரு வேலை சொல்லுவாரு. எல்லாத்துக்கும் நான் ஒருவனே ஏன் என்று கேட்கணும்னு முடியுங்களா!" என்றான் ஆற்றமாட்டாத குறையுடன் முனுசாமி.

"பாவம்! நீதான் என்ன செய்வாய்! என்ன இருந்தாலும் இது ஒரு பெரிய குடும்பம் பாரு! நீதான் எல்லோரையும் அனுசரித்துப் போகணும். சங்கர் இப்படி அரைப் பைத்தியம் போல இருக்கானே என்று நினைக்காதே! அவன் மகா புத்திசாலி; தங்கமான குணம்" என்றான் அப்பு.

"என்னமோ அவருடைய மகா புத்திசாலித்தனமும் தங்கமான குணமும் உங்களுக்குத் தான் விளங்குது. நான் பத்து வருஷமாக இந்தக் குடும்பத்திலே பழகுகிறேனே! எனக்குத் துளிக்கூட விளங்கவில்லே" என்றான் அலுப்புடன் முனுசாமி.

காமாட்சி, முனுசாமியின் வார்த்தையை அடியோடு மறுத்தாள். "ஆமாம், உனக்கு என்ன தெரியும் சின்னய்யாவின் குணத்தைப் பற்றி! அவங்க கோபித்துக் கொள்கிறதுதான் உனக்குத் தெரியுது. குணமா நடந்துக்கிறதெல்லாம் தெரியறதே இல்லை" என்றாள்.

"குணமாக நடந்தால் அல்லவா தெரியப் போவுது! நானும் நீயும் சேர்ந்து பத்து வருஷமா இந்தக் குடும்பத்திலே நாயா உழைக்கிறோமே, இதனால் ஏதாவது தம்பிடிக்குப் புண்ணிய முண்டா!" என்றான் முனுசாமி.



"நீங்கள் இருவரும் ஏன் இப்படிச் சண்டை போடுகிறீர்கள்! எல்லா விஷயமும் எனக்குத் தெரியும். முனுசாமி, நீ கவலைப்படாதே! சமயம் நேர்ந்தபோது சின்ன ஐயாவிடமும் பெரிய ஐயாவிடமும் சொல்லி உன் சம்பளத்தை இரண்டு பங்காக்குகிறேன்" என்றான் அப்பு. "ஏதோ, ஐயா தயவு இருந்தால் சரி!" என்றாள் காமாட்சி.



ஸ்திரீ :—நீங்கள் கொரியா பார்டர் புடவை என்று சொல்லிப் போன வாரம் கொடுத்த புடவை இவ்வளவு மோசமாய்ப் போய் விட்டதே! புடவையில் இருந்த நட்சத்திரம், கோடுகள் எல்லாம் மறைந்து ஒரே சிவப்பு மயமாகி விட்டதே!

கடைக்காரர் :—கொரியாவில் அநேகமாக எல்லா இடத்தையும் கம்யூனிஸ்டுகள் பிடித்துக் கொண்டு விட்டார்களே, நாம் என்ன செய்யலாம்?

---

"எங்களுக்கு நல்லாத் தெரியுங்க, உங்க வார்த்தைக்கு எதிர் வார்த்தை அங்கே இல்லேன்னு. சின்னய்யா உங்களைக் கண்டா மோடி வைச்ச சர்ப்பம்போலல்லவா அடங்கிப் போகிறார்!" என்றான் முனுசாமி அசட்டுச் சிரிப்புடன்.

"சின்னய்யா மாத்திரம் என்ன! சின்னம்மாளும் ஐயாவைக் கண்டுட்டா அப்படியே முகம் மலர்ந்து போயிடறாங்களே!" என்றாள் காமாட்சி.

"எல்லாம் சரிதான்! ஆனால் ஒண்ணு, அவங்க கொஞ்சம் பணக்காரங்க. பெண்ணுக்குக் கல்யாணம் செய்யணும்னா பணக்கார இடமாப் பார்ப்பாங்க!" என்றான் முனுசாமி.

"பணம் கிடக்குது பணம்! பிறக்கும் போதே எல்லோரும் பணத்தோடுதான் பிறந்தாங்களா! இந்த வீட்டிலே மாத்திரம் என்ன! இந்தப் பத்து வருஷ காலமாத்தானே பணம் கொழிக்குது! பணம் வரும், போகும். குணமில்லே வேணும்! ஐயா மாதிரி எல்லாருக்கும் நல்லவரா நடந்துக்கிறவங்க உலகத்திலே தேடிப் பிடிச்சாலும் அகப்படுவாங்களா!" என்றாள் பதிலுக்குக் காமாட்சி.

"அது எப்படி அகப்படுவாங்க! ஐயா காணக் கிடைக்காத தங்கம் போல!" என்றான் முனுசாமி அவளுக்குப் பக்கத் துணையாக.

இவ்வளவையும் கேட்டுக் கொண்டிருந்த அப்புவுக்குத் தனக்குள் பெருமை பூரித்து வழிந்தது. அவன் முனுசாமியைச் சிறு துரும்பைப் பெருந் தன்மையோடு பார்ப்பது போல் பார்த்துக் கொண்டு, "முனுசாமி! எனக்கு இந்த வீட்டில் இன்னும் ஏதோ ஒரு வகையில் நல்ல பிடிப்பு ஏற்பட்டுவிட்டால் உன்னை யெல்லாம் இப்படி வைத்திருக்கவே மாட்டேன்—" என்றான்.

"அந்த மாதிரியான யோகம் எங்களுக்கு ஏதேனும் வருங்களா! உங்களைப் போல இரண்டு நல்லவங்க வரப் போக இருக்கிறதினாலேதான் நானும் நம்பிக்கையை விடாமல் இந்த வீட்டிலே இருக்கிறேன்" என்றான் முனுசாமி.

"எல்லாம் சின்னம்மா மனசு மாறணும். அவங்க மனசு மாறணும் என்று முதல்லே மாரியாத்தாளை வேண்டிக்க" என்றான் முனுசாமி.

"எனக்கென்னமோ சின்னம்மா மனது மாறும் என்று நம்பிக்கையே இல்லே. இப்படி ஆண் வாடையே அடிக்கக் கூடாது என்று சொல்லுகிற பெண்ணை இப்பத்தான் நான் உலகத்திலேயே பார்க்கிறேன்" என்று அதிசயமாகச் சொல்லிக் கன்னத்தில் கை வைத்துக் கொண்டாள் காமாட்சி.

"எல்லாம் தானே மனசு மாறிடும் பாரு! இந்த அப்பு என்ன, சாதாரணமானவனா? என்னுடைய நாலு வருஷ திட்டத்தை உருவாக்குவதை விடக் கடினமல்ல பிரேமாவின் மனதை மாற்றுவது. இன்னும் இரண்டே நாளில் அவள் மனதை மாற்றுகிறேன், பாருங்கள். ஆனால் நீங்கள் எனக்குக் கொஞ்சம் உதவியாய் இருக்கணும்" என்றான் அப்பு.

"உதவி செய்யக் காத்துக்கிட்டிருக்கோம். நீங்க இந்த ஏழை மீது இவ்வளவு தயவு வைத்திருக்கிறபோது...." என்று குழைந்தான் முனுசாமி.

"நீங்கள் இரண்டு பேரும் பிரேமாவிடம் பேசும் போதெல்லாம் என்னைப் பற்றிப் பெருமையாகப் பேசிக் கொண்டிருங்கள், போதும்."

"இதென்ன பிரமாதமுங்க!—எப்பொழுதும் உங்க பாட்டாவே பாடித் தீர்த்துப் பிடறோம். கவலைப்படாதீங்க!" என்றான் முனுசாமி.

"கதையோ புராணமோ, சொல்லும்போது ரொம்ப ஜாக்கிரதையாகச் சொல்ல வேண்டும். அதே போலப் பெரிய ஐயா, பெரிய அம்மா எல்லோரிடமும் என்னைப் பற்றிப் பெருமையாகச் சொல்லிக் கொண்டே இருக்கணும்."

"சரிங்க, என் சம்சாரத்துக்கு இதெல்லாம் சொல்லித் தரவேண்டாம். அவ கதை சொல்ல ஆரம்பிச்சுட்டா பொழுது விடியறதே தெரியாதுங்க. கேட்கிறவங்க தங்களையே மறந்து சிலையா உட்கார்ந்துதான் கேட்டுக்கிட்டிருப்பாங்க. அதிருக்கட்டும், நீங்க தீவாளிக்கு ஒண்ணும் கொடுக்காமல் இருந்திடாதீங்க...." என்று இழுத்தான் முனுசாமி.

"ஐயா! இதுவா சமயம் ஐயாவைக் காசு பணம் கேட்க? என்ன இருந்தாலும் உங்க சின்ன புத்தி போக மாட்டேங்குதே! அவங்க மனசு குளிர்ந்திருந்தா போதாதா?" என்று தன் கணவனைக் கடிந்து கொண்டாள் காமாட்சி.

அப்பு சட்டென்று மணிபர்ஸை எடுத்து அப்பொழுதுதான் சங்கரிடமிருந்து இரண்டாவது தடவையாகக் கைமாத்து வாங்கிய இரண்டு ஐந்து ரூபாய் நோட்டுக்களில் ஒன்றை எடுத்து முனுசாமியிடம் அலட்சியமாகக் கொடுத்துவிட்டு, "எப்பொழுதும் பணம் காசைப் பற்றிக் கவலையே படாதே! என்னுடைய நாலு வருஷ திட்டத்தில் பெரிய பேப்பர் மில் ஒன்று ஏற்படுத்தப் போகிறேன். அதற்குக் குறைந்தது மூன்று கோடி ரூபாய் முதல் போடப் போகிறேன். பேல் பேலாக வரும் அந்தக் காகிதங்களை இந்த ஊரில் வைத்து வியாபாரம் செய்ய ஒருவர் இல்லையே என்று கவலைப்பட்டேன். நல்லவேளை, நீ இருக்கிறாய்! மாதம் முந்நூறு ரூபாய் வரையில் கமிஷனிலேயே சம்பாதிக்கலாம். கவலைப் படாதே!" என்றான் அப்பு.

"எல்லாம் சரிதாங்க. சின்ன அய்யா குணம் ஒரு தினுசாச்சே!" என்றான் முனுசாமி.

"சங்கரனைப் பற்றித்தானே! கவலைப் படாதே நீ! அவனுக்கு என் தங்கை மீனுவைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று ஆசை. அந்த ஆசை நிறைவேறணும் என்றால் அவன் நம்முடைய காரியம் எதற்கும் தடங்கல் செய்ய மாட்டான்."

"ஓ! அப்படியா சங்கதி! சரிதான், சரிதான். சின்னய்யா மூளையும் திருந்திடும்" என்றாள் காமாட்சி.

"இந்தக் குடும்பத்தில் எல்லோருடைய மூளையும் திருந்தணும் என்பதற்காகத்தானே நான் வந்து போய்க் கொண்டிருக்கிறேன்!" என்று சொல்லிவிட்டு அதிவேகமாக நடந்தான் அப்பு.

காமாட்சி, முனுசாமியைப் பார்த்துக் குறும்பாகச் சிரித்துக்கொண்டே "பார்த்தாயா! இப்படி ஆசாமிக்குத் தகுந்தாப்போலே பேசாவிட்டால் அடிச்ச அடியிலே ஐந்து ரூபாய் கிடைக்குமா!" என்றாள்.

"இந்த ஐந்து ரூபாய் கெடக்குது. இனிமேல் விஷயம் விளங்கிடுச்சு. சமயம் சேர்ந்தபோதெல்லாம் பணம் கறந்துட மாட்டேனா! அது இருக்கட்டும்; சின்னய்யாவுக்கு இவருடைய தங்கச்சியைக் கல்யாணம் செய்துக்கணும்னு ஆசையாமே!" என்றான் ஆச்சரியத்துடன்.

"இந்த ரகசியம் நமக்குத் தெரிஞ்சதும் நல்லதுக்குத்தான்! இதை வச்சுக்கிட்டுச் சின்னய்யாவுக்குத் தகுந்தாப்போலே பேசிக்கிட்டு வந்தா அவர் தயவும் கிடைக்கும்" என்றாள் காமாட்சி.

"ஆமாம், யாருடைய தயவு கிடைச்சாலும் பணத்திலேதான் குறியாய் இருக்கணும். இந்த வழி எனக்கு இப்போதுதான் புலனாச்சு!" என்று முனுசாமி விஷமமாகச் சிரித்துக் கொண்டே சொன்னான். (தொடரும்)

ஷாலிமார் தயாரிப்புகளை ஆர்டர் செய்யும்போது எந்த வேலைக்காக என்பதைத் தெரிவிக்கவும்.






ஷாலிமார் மாட்கோட் நீடித்து உழைக்கவல்ல, கழுவிவிடக்கூடிய பூச்சுக் காளான் படியாத ஓர் எண்ணெய் கலந்த வர்ணப் பூச்சு. காரை, காங்க்ரீட், சிமெண்டு, மரத்தின் மேல் பூசலாம். ஷாலிமார் மாட் கோட் 24 அழகிய வர்ணங்களில் கிடைக்கும்.

## அடித்தாற் போல் சொல்லுங்கள் ஷாலிமார் மாட் கோட்

SPX-64-TM

சுவர்களுக்கான வர்ணப்பூச்சு

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.**

Post Box 136, Madras 1. Importers & Distributors for Ceylon:
Lewis Brown & Co., Ltd., Post Box 85, Colombo

# நீங்காக் குறை

## துரோணன்

இன்றைக்குச் சற்றேறக்குறைய ஒரு வருஷமாகி விட்டது, நான் என் நண்பன் கறுப்பனை விட்டுப் பிரிந்து. உலகத்தில் நண்பனென்றாலும், இவன் போலவா? இவனைப்போல் நண்பன் எனக்குக் கிடைப்பதாயிருந்தால் எவ்வளவு பிறவிகள் வேண்டுமானாலும் நான் கஷ்டப் படத் தயார்!

நண்பன் போயே போய் விட்டான், அமர உலகத்திற்கு. எங்கள் எஜமானனுக்கும், உலகத்திற்கும் இந்த ஒரு வருஷத்திற்குள்ளாகவே என் நண்பனின் ஞாபகம் மறந்தே போய் விட்டது. ஆனால் எஜமானனுக்கு என்ன? ஒருவன் போனால் மற்றொருவன். வாரி யிறைக்கக் கையில் காசா இல்லை? இல்லை; இந்தப் பரந்த உலகத்தில் அவருக்குக் கிடைக்காதது தான் உண்டா? என் உள்ளத்திற்கோ ஒவ்வொரு நிமிஷமும் அவன் என் அருகிலேயே இருப்பதாகப் பிரமை.

இன்று நான் தனி; என்னிடம் பேசுவார் ஒருவரில்லை. நானுண்டு, என் துக்கங்களுண்டு. ஆனால், நானும் போகத்தான் போகிறேன், என் நண்பனிருக்கும் உலகத்திற்கு. இது ஒரு மனச்சாந்திதான். இருந்தாலும் எஜமான உள்ளத்திற்கும் அடிமை உள்ளத்திற்கு முள்ள பாகுபாடுகள் மனதைக் குலைக்கத்தானே செய்கின்றன?

அவனது குடும்பம் எது, அவனது உற்றார் யார், அவன் எனக்கு எப்படி நண்பனாக வாய்த்தான்—என்பதெல்லாம் விசித்திரம்தான். சுமார் பத்து வருஷங்களுக்கு முன் நீலத்தகல் ஊரில் அவனைச் சந்தித்தேன். உருவத்தில் ஏறக்குறைய என்னைப் போலவே அவனிருந்ததுதான் எங்கள் நட்பிற்குக் காரணம். ஆனால், நான் சற்று முன் கோபக்காரன்; அவன் பரமார்த்தி. உழைப்பிலும் கொஞ்சமும் சளைத்தவனில்லை. நான் பொறுமிக் கொண்டே வேலை செய்வேன்; அவனோ வெளியிற் காட்டாது புழுங்கிக் கொண்டே உழைப்பான். அவனது அன்பான முகம் எனக்குப் புத்தி புகட்டும்.

அவனும் நானும் சேர்ந்து உண்டு, சேர்ந்து உறங்கி, சேர்ந்து உழைத்துப் பத்து வருஷங்களைக் கழித்தோம். இது தெய்வத்திற்கே பொறுக்கவில்லை.

அவனுக்கும் எனக்கும் வயது-ஏதாவது ஒரு ஆறுமாத வித்தியாசம்தானிருக்கும். அவன் என்னை அருமையாக 'அண்ணா!' வென்று அழைப்பான். நான் வேலை செய்த களைப்பையும், மனச்சோர்வுகளையும் அதே கணத்தில் மறந்து விடுவேன்.

2

நான் ஏதோ சஞ்சலங்களுடன் அன்று கண்ணயர்ந்தேன். இவன் தோட்டத்தின் பக்கம் சற்றுக் காலாறப் போயிருந்தான். திடீரென்று என் தூக்கத்தைக் கலைத்து என்னை வந்து எழுப்பினான்.

"அண்ணா, குளத்தங்கரை வரையில் போய் விட்டு வந்தேன். அங்கே நான்..." என்று ஆரம்பித்தவன், என்ன நினைத்துக் கொண்டானோ—அதை முடிக்காமலே வேறு பேச்சுக்குத் திரும்பினான். நான் அவனை விடுவதாக இல்லை. ஆகவே லஜ்ஜையுடன் குழம்பிக் கொண்டே விஷயத்தை ஒருவாறு தெரிவித்தான். என் மனதில் எது விஷயமாகப் 'புயல்' வீசிக் கொண்டிருந்ததோ, அதுவேதான் அவனிடமும் இருந்தது. இருந்தும் நான் அவனுக்கு உபதேசம் செய்தேன்!

"போடா, பைத்தியம்! உலகத்தின் மாயையை அறியாமல் 'காதல், கீதல்' என்பதெல்லாம் வீண் புரட்டு. தலையை நீட்டி என்றைக்கு இந்தப் பூமியில் விழுந்தோமோ, அன்றைக்கே அடிமைத்தனம் நம்மை அணைத்துக் கொண்டு விட்டது. தேகத்தை விற்ற சேவகன் சுகத்தைப் பற்றி எப்படிக் கனவு காண முடியும்? உழைப்பு ஒன்றுதான் நீ அறிய முடிந்த செயல். பசியைப் பற்றித் தெரிவிக்கக் கூட நீ 'அருகதை யற்றவன்' என்ற கடுமையான தலையைக் கடவுள் நமக்குப் பூட்டியிருக்கும்போது நீ என்னவோ பகற் கனவு காண்கிறாயே! இதை விட்டுத் தள்ளு! என் முதுகை அரிக்கிறது; சற்றுச் சொறிந்து கொடு!" என்று பேச்சை மாற்றிக் கொண்டேன்.

பாவம், அப்புறம் அந்த அப்பாவி வாய் திறந்து என்னிடம் ஒன்றும் சொல்லவில்லை. ஆயினும் எவ்வளவு நாட்கள் பிரமை பிடித்தவன் போல் மனதுக்குள்ளேயே வைத்துக் கொண்டு அவன் ஏங்கியிருக்கிறான்? — இதெல்லாம் என் ஒருவனுக்குத்தான் தெரியும். ஏனெனில், அவனைப்போல் நானும் ஒரு அடிமை!

மற்றொரு நாள் கறுப்பன் என்னிடம் ஒரு பைத்தியக்கார யோசனை சொன்னான். "அண்ணா, இந்தக் கஷ்டம் பொறுக்க முடியவில்லை. நாம் பேசாமலே இருந்து



ஹோட்டலில் சாப்பிடுபவர் :— ஓய்! சோறு சகிக்கவில்லை; இந்தச் சோற்றைதான் சாப்பிட முடியாது. கூப்பிடும், உங்கள் முதலாளியை!

சிப்பந்தி :—கூப்பிட்டுப் பிரயோஜனம் இல்லை; அவரும் சாப்பிட மாட்டார்!

---

என்ன செய்வது? 'கூடிய வரையில் எங்களுக்கு வெய்யில் இல்லாத வேளையிலேயே வேலை கொடுங்கள்' என்று எஜமானனிடம் கேட்டாலென்ன?" என்றான்.

பாவம், அப்பொழுதுதான் அவன் அந்த அசுர வெய்யிலில் தனியாகப் பத்து மைல் நடந்து வந்திருந்தான். அவனது அறியாமையை நினைத்து எனக்குச் சிரிப்புத்தான் வந்தது. அவனோ, ஏமாற்றத்துடன் பரிதாபமாகத் தலைகுனிந்து கொண்டான்.

தெய்வம்தான் அந்த வழி விட்டது. எங்கள் எஜமானராவது — அப்பப்பா! என்ன கொடூர சித்தம்? இவர்கள் மனதில் மருந்திற்குக்கூட சுவிரக்கம் இருக்காதா?

'அற்ற குளத்தில் அருநீர்ப் பறவை போல்—உற்றுழித் தீர்வார் — உறவல்லர்' என்பது போல் எங்கள் உடம்பில் ஒவ்வொரு நரம்பும் இயங்கிக் கொண்டிருக்கும் வரையில் தான் எங்கள் தயவு அவர்களுக்குப் பூரணமாகத் தேவை. 'பாவம், நீ களைத்திருக்கிறாய்; இன்று ஒரு நாள் ஓய்வெடுத்துக் கொள்!' என்ற வார்த்தைகள் எப்பொழுதுதான் அவர்களது நாவில் உதயமாகும்? ஏன் அவர்களுக்கு இந்த ஞாபக சக்தி ஒன்று மாத்திரம் குறைந்து விடுகிறது?

அதோ, அடுத்த வீட்டுப் பையன் ஏதோ ஒரு செய்யுளை மனப்பாடம் செய்து கொண்டிருக்கிறான். உரக்கத்தான் படிக்கிறான். என் எஜமானரும் பக்கத்திலேயே தான் இருக்கிறார்!

'மெய் வருத்தம் பாரார்—பசி நோக்கார்—கண் துஞ்சார்—' இந்தச் செய்யுளையும் எங்கள் வாழ்க்கையையும்தான் சற்று அவர் ஒப்பிட்டுப் பார்க்கட்டுமே? இது ஏன் அவருக்குத் தோன்றவில்லை? எனக்கு மட்டிலும் தோன்றுவானேன்? நான் அடிமைப் பிறவி; அவர்......

## 3

எப்படியெல்லாமோ நினைத்து வருந்தித்தான் என்ன? என் நண்பன் இனி திரும்பி வரப் போகிறானா?

எனக்கும் என் எஜமானனின் கெடு நெருங்கிக் கொண்டுதானிருக்கிறது. ஏனெனில், நான் இப்பொழுது கிழவன்...

போன வருஷம் இதே தினத்தில் அவன் என் பக்கத்திலிருந்தான். ஏதேதோ—நாங்கள் சாப்பிட்டறியாத அன்னம் பழம் எல்லாம் ஆடம்பரமாக எங்களுக்கு எதிரில் வைக்கப்பட்டன.

என் உள்ளத்தில் நண்பனைப் பற்றிய 'புயல்' ஒரு பக்கம்; எங்கள் 'விதி'யைப் பற்றிய ஏக்கம் ஒரு பக்கம். ஆனால், என் எதிரேயோ ஏக உபசரணைகள். ஒரு நாளுமில்லாமல் திடீரென்று என் அலங்காரத்தில் அவர்களுக்கென்ன அக்கறை பிறந்து விட்டது இன்று? என் கழுத்தில் 'பளபள'வென்ற சதங்கைச் சங்கிலியும், கொம்புகளுக்கு வெள்ளிக் கொப்பிகளும் அணிவிக்கப்பட்டிருக்கின்றன. இவையெல்லாம் இல்லையென்று யார் அழுதார்கள்?

உண்மையில் இதையெல்லாம் நாங்கள் வாய் திறந்து கேட்கக் கூடுமாயின் எந்தக் குறையைத்தான் நாங்கள் தெரிவித்துக் கொள்ள முடியாது? ஏதோ நினைத்துக் கொண்டு வாயைத் திறந்தால் 'அம்மா!' என்ற ஒரு சொல்தானே வெளிக் கிளம்புகிறது? இவையெல்லாம் சாசுவதமான எங்கள் 'நீங்காக் குறை'தானே? என்ன இருந்தாலும் நாங்கள் உழைக்கப் பிறந்த மாடுகள்தானே?

* * *

அன்று மாட்டுப் பொங்கல். மிராசுதார் பொன்னம்பலம் எதேச்சையாகத் தொழுவத்தின் பக்கம் வருகிறார். அங்கிருந்த பத்து மாடுகளும் தங்களுக்கு எதிரேயிருந்த அபூர்வமான மனித ஆகாரத்தைச் சாப்பிட்டுவிட்டு, சாவதானமாக அசை போட்டுக் கொண்டிருக்கின்றன. 'வெள்ளையன்' மட்டும் அதைக் கொஞ்சமும் இலட்சியம் செய்யாமல் நிற்கிறது. பாவம், அவருடைய விசாரணையும் தீர்மானமும் எவ்வளவு தூரம் அதன் விஷயத்தில் நிறைவேறப் போகிறதோ!

# முள்ளில் ரோஜா

"சுப்புடு"

சென்ற ஆகஸ்டு 27ல் மாலை திருவல்லிக்கேணி பைன் ஆர்ட்ஸ் கிளப் சங்கத்தார் "முள்ளில் ரோஜா" என்ற நாடகத்தை மயிலாப்பூர் ரஸிக ரஞ்சனி சபை ஹாலில் நடித்தார்கள். "கல்கி" ஆசிரியர் நாடகத்துக்குத் தலைமை வகித்தார். டில்லியிலிருந்து வந்த நானும் நாடகக் கலையில் சிரத்தை கொண்டவனாதலால் இந்த நாடகத்துக்குப் போயிருந்தேன்.

ஒரு தாசிப் பெண்ணை அவள் தாயார் பொட்டுக் கட்டிப் பரம்பரைத் தொழிலில் ஈடுபடுத்தப் பார்க்கிறாள். இந்தப் பெண்ணை ஒரு யுவன் காதலிக்கிறான். அவளைக் கலியாணம் செய்து கொள்ள எண்ணுகிறான். அந்த எண்ணத்துக்குப் பெற்றோரும், மற்றோரும் குறுக்கே நிற்கவே மனமுடைந்து தாசிப்பெண் பாசிக் குளத்தில் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்ளுகிறாள். கதாநாயகன் "உடன் தண்ணி" ஏறுகிறான் உடன்கட்டைக்குப் பதிலாக. — இது கதை.

அன்று மேடையில் பேசிய ஸ்ரீ டி. கே. சண்முகம் காட்சி ஜோடனைகளை வியந்து பாராட்டினார். "நாடகத் தொழிலாளிகளே பிரமிக்கும் வண்ணம் ஜோடனைகளையும் விறுவிறுப்பையும் அமெச்சூர்கள் காட்ட முடியும் என்பதை பைன் ஆர்ட்ஸ் சங்கத்தார் நிரூபித்து விட்டார்கள். அவர்களுக்கு என் "வாழ்த்து" என்றார்.

நாடகத்தில் நடிப்பு மொத்தத்தில் நன்றாயிருந்தது. கதாநாயகி, கதாநாயகன் இவர்களுக்கு வேஷப் பொருத்தம் நன்றாயிருந்தது. உணர்ச்சியுடன் பேசினார்கள்; நடித்தார்கள். கதாநாயகி பாடாமலும் கதாநாயகன் அதிகம் அழாமலும் இருந்திருக்கலாம்.



செல்லமாக நடித்த
ஆர். சீனிவாசகோபாலன்

நாராயணன் நடிப்புப் பிரமாதம். நறுக்குத் தெறித்தது போல் பேசிச் சபையோர் குலுங்கக் குலுங்க நகைக்கும்படி செய்துவிட்டார்.

நடிப்பில் முதல் பரிசு தாசியின் தாயாக நடித்தவருக்குச் சபையோர் அளித்தனர். முதலில் அவரைப் பெண் வேடம் தரித்த ஆண் என்றே நம்ப இயலவில்லை. ஒரு மனுஷ்யனுக்குத் தொண்டைகூட இப்படி பெண்பிள்ளையின் தொண்டை மாதிரியே இருக்குமா என்று மூக்கின்மேல் விரல் வைக்கும்படியிருந்தது.

இவருடைய நடிப்பைப் பற்றி ஸ்ரீ கல்கியவர்கள் பேசும்போது சொன்னார்:- "தாய்க் கிழவியாக நடித்த பேர்வழியின் நடிப்பைப் பார்த்தபோது, இது வெறும் நடிப்பா அல்லது பரம்பரைத் தொழிலாகவே இந்த ஆசாமி வைத்துக் கொண்டிருக்கிறாரா என்று எனக்குச் சந்தேகம் வந்துவிட்டது!" அஸ்ஸாமில் பூகம்பம் ஏற்பட்டதை நேரில் பார்க்கக் கொடுத்து வைக்காதவர்கள், 'கல்கி'யவர்கள் மேற்கண்டவாறு சொன்னபோது சபையில் ஏற்பட்ட கரகோஷத்தையும் ஆரவாரத்தையும் பார்த்திருந்தால் ஒருவாறு புரிந்து கொண்டிருப்பார்கள்! தொடர்ந்து கல்கியவர்கள் ஆசிரியர் ப. நீலகண்டனைப் பற்றிப் புகழுரைகள் கூறித் தாம் இலங்கை சென்றிருந்த போது இலங்கை வாசிகளின் உள்ளத்திலும் ஸ்ரீ நீலகண்டனின் "வாழ்க்கை"ச் சித்திரம் இடம் பெற்று விட்டதைக் கண்டதாகத் தெரிவித்தார். அன்னாரை மேலும் தமிழ் நாடகத் துறைக்குத் தொண்டாற்றுமாறு கேட்டுக் கொண்டார்.

திருவல்லிக்கேணி பைன் ஆர்ட்ஸ் கிளப் சங்கத்தார் கொஞ்ச காலமாக அமெச்சூர் நாடகத் துறையில் வெகுவாக முன்னேறி அருந்தொண்டாற்றி வந்துள்ளனர். அவர்களுடைய முந்தைய இரண்டொரு நாடகங்களையும் பார்க்க எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்திருந்தது. ஆனால் அவைகளில் நடிகர்கள் கையாண்ட



ராமநாதனாக நடித்த
எஸ். ஆர். கிருஷ்ணசாமி



கமலமாக நடித்த
ஜி. என். விஸ்வநாதன்

சம்பாஷணைகளை கவனித்த போது அவை தமிழ்நாடகமா, ஆங்கில நாடகமா என்று சந்தேகப் படும்படி அவ்வளவு ஆங்கில வாக்கியங்கள் அடிபட்டன. "முள்ளில் ரோஜா" அதற்கு ஒரு விலக்காக இருந்தது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது.

சபைக் காரியதரிசி கடைசியில் பேசினதில்—இல்லை பேச முயன்று அதனின்றும் வெளிப்பட்டதில்–பின்வரும் செய்தி தெரிந்தது. அடுத்தபடியாக ஸ்ரீ கல்கியின் "கள்வனின் காதலி"யை அரங்கேற்றப் போவதாக அவர் தெரியப்படுத்தினார்.

டில்லியில் தலைவர் ராஜாஜியின் நன்மதிப்பைப் பெற்றதும், பிரபல ரேடியோ நாடகாசிரியர் பூர்ணம் விஸ்வநாதன் அவர்களால் நாடகப் படுத்தப் பட்டுஎன்றால் அரங்கேற்றப் பட்டதுமான, அந்த அழியாப் புகழ்பெற்ற நாடகம் இந்தச் சபையினரால் பன்மடங்கு வெற்றியுடன் நடத்தப் படும் என்று நான் நம்புகிறேன்.



நாராயணனாக நடித்த
என். என். நடராஜன்

# யமனாக வந்தார்!

"என்ன, மிஸ்டர் குப்புசாமி! சௌக்கியமா?" என்று கேட்டுக்கொண்டே வந்தார் இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டு தர்மராஜய்யர்.

"சௌக்கியத்திற்கு என்ன ஸார் குறைச்சல்! இந்த 'அய்யர்த் துரை ஹோட்டலில்' 'கல்லை'ச் சாப்பிட்டுக் கொண்டு, நானும் 'கல்லை'ப் போலவேதானிருக்கிறேன்!"

"நீங்க அந்த ...... கம்பெனியில்தானே வேலை பார்க்கிறீர்கள்?"

"ஆமாம்! அந்த ஆபீஸில்தான்" என்று சுவாரஸ்யமற்ற பதிலளித்தான் குப்புசாமி.

"உத்தியோகம் காயமாகிவிட்டதல்லவா?"

"காயமாகவாவது! நான் எங்கேயாவது விழுந்து 'காயம்' ஆக்கிக்கொண்டால்தான்!"

"உங்கள் சம்பளம் என்னவோ?"

"சம்பளம்—மாதம் முடிந்ததும் ஆறு ரூபாய் முழுசாகக் கொடுக்கிறார்கள்! என் செலவுக்கே போதவில்லை. பாருங்கள், நேற்றுத்தான் ஆபத்சகாயமய்யரிடம் அறுபது ரூபாய் கடன் வாங்கினேன்."

குப்புசாமியின் மேற்படி பதிலைக் கேட்டதும் தர்மராஜய்யரின் முகம் சுருங்கியது! அவர் சொல்லிக் கொள்ளாமலேயே அவனை விட்டுப் பிரிந்தார். தன் சாமர்த்தியத்தினால் அவரை இன்ஷ்யூரென்ஸ் பேச்சையே ஆரம்பிக்க வொட்டாமல் திரும்பச் செய்து விட்டதை எண்ணி மகிழ்ந்தான் குப்புசாமி!

ஒரு மாதம் சென்றது. அவன் தகப்பனார் சுந்தரமய்யர் ஊரிலிருந்து எழுதிய கடிதம் கிடைத்ததும், உறையை ஆவலுடன் பிரித்தான். விடுமுறையில் ஊருக்குச் சென்றிருந்தபோது, தான் பார்த்து 'பிடித்தம்' என்று சொல்லிவந்த அந்த மதுரைப் பெண்ணுக்கும் தனக்கும் கலியாணத் தேதி குறிப்பிட்டு அப்பா எழுதியிருப்பார் என்ற எண்ணத்தில் கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தான்.

அவர் எழுதியிருந்தார்! "......அந்த மதுரைப் பெண்ணின் சிற்றப்பா அங்கு மாதுங்காவில்தான் இருக்கிறாராம்; இன்ஷ்யூரன்ஸ் தர்மராஜய்யர் என்றால் எல்லோருக்கும் தெரியுமாமே! உன்னைப் பற்றியும் உன் வேலை சம்பந்தமாகவும் விசாரிக்கச் சொல்லியும் பெண் வீட்டார்கள் அவருக்கு எழுதியிருப்பதாகவும், பதில் வந்ததும் முகூர்த்தத்திற்குத் தேதி குறிப்பிட வேண்டியதுதான் என்றும் பெண்ணின் தகப்பனார் சொல்லி விட்டுப் போனார். ஏனோ அதன் பின் கடிதமே வரவில்லை! அந்த தர்மராஜய்யர் உன்னை வந்து பார்த்தாரா என்ன?......"

அதற்குமேல் குப்புசாமியினால் கடிதத்தைப் படிக்க முடியவில்லை! தன் கல்யாணப் பிரச்னைக்கு 'யமனாக' அந்த தர்மராஜய்யர் வருவார் என்று தெரிந்திருந்தால் ஆயிரத்திற்கென்ன, மூவாயிரம் ரூபாய்க்குக் கூட அவன் முன்பே 'இன்ஷ்யூர்' செய்து கொண்டிருப்பானே!—வி. எஸ். சீனிவாசன்.




## உங்கள் விருந்தாளிகளுக்கு **டால்டாவில்** தயாரித்த தக்காளி மகாஷாவை அளியுங்கள்!

தக்காளிகளில் இரும்புச்சத்து இருப்பதினால் இவை இரத்தத்திற்கு மிகவும் சிறந்தவை. தவிர இவைகள் ஆரோக்கியத்தைப் பாதுகாக்கும் விடமின்களையும் தருகின்றன. தக்காளிகளை பக்குவம் செய்யாமலோ அல்லது பின்வரும் முறைப்படி ருசியாக சமைத்தோ பரிமாறலாம். நல்ல கெட்டியான 6 தக்காளிகளின் மேல்பாகங்களை நறுக்கி உட்பாகத்தை குடைந்தெடுக்கவும். ½ கப் வெந்து மசித்த துவரைப்பருப்பு அல்லது துருவி வெந்த மாமிசம் இவைகளில் ஏதாவதொன்றுடன், வெந்து உரித்த உருளைக்கிழங்கு, நறுக்கிய பச்சைமிளகாய், உப்பு இவைகளை கலக்கவும். இக்கலவையை ஆறவைத்து, தக்காளிகளில் நன்றாக திணித்து, திறந்திருக்கும் பாகங்களை மைதாமாவினால் மூடவும். குழிவு குறைந்த வாணலியில் டால்டாவை சூடாக்கி தக்காளிகளின் மாவுதடவிய பாகங்களை முதலில் பொரிக்கவும். சிவந்ததும் திருப்பி எல்லா பாகங்களையும் இலேசாக பொரிக்கவும். டால்டாவில் தயாரித்த உணவு சூடாகவோ, ஆறியோ எப்படி இருந்தபோதிலும் ருசி மிக்கதாய் இருக்கும். டால்டா ஒரு சுத்தமான தாவரக்கொழுப்பாகையால் அது அதிகநேரம் சூட்டைத் தாங்குகிறது—எனவே, உணவுகள் ஒழுங்காக முழுவதும் பக்குவமாவதற்கு போதுமான அவகாசம் அளிக்கிறது

வீட்டிலேயே சிரமமின்றி ருசிமிக்க
மதுரபதார்த்தங்களை தயாரிப்பது எப்படி?

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது
என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள்!

**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




HVM. 183-172 TM




பாங்காக்கில் சயாம் மன்னர் ஒருவரால் தங்கத்தினாலும் பளிங்குக் கற்களாலும் நிர்மாணிக்கப்பட்ட பிரசித்தி பெற்ற புத்தர் ஆலயம்.

---

ஜெயமணி

● ● ● “பாலைவனத்தின் நடுவே பூஞ்சோலை” என்று சயாம் நாட்டை அதன் பிரதம மந்திரி விபுல ஸாங்க்ராம் சில தினங்களுக்கு முன் ஒரு பத்திரிகைப் பிரதிநிதியிடம் வர்ணித்தார்.

ஆஸ்திரேலியா, இந்தோனேஷ்யா, பர்மா, கொரியா, மலேயா முதலிய நாடுகளைப் பற்றி ஏற்கெனவே விவரிக்கப்பட்டிருக்கிறது. “பாலைவனத்தின் நடுவே பூஞ்சோலை”யாக விளங்கும் தாய்லந்து அல்லது சயாம் நாட்டைப் பற்றிய வரலாறு இந்தக் கட்டுரையில் ஆரம்பமாகிறது. ● ● ●

## 6. சயாம்

பர்மாவையும் மலாய் நாட்டையும் பிரிட்டிஷார் ஆக்கிரமித்துக் கொண்டனர். இந்தோ சீனா பிரஞ்சுக்காரர்களின் வசமாயிற்று. சீனாவை ஒரு புறம் உள் நாட்டுக் கலகங்களும் மற்றொரு புறம் அன்னியரின் ஆதிக்கமும் சின்னாபின்னமாக்கின. இவ்வாறு அரசியல் பூகம்பங்களினால் ஆட்டிவைக்கப்பட்ட நாடுகளின் நடுவே இருந்தும், சயாம் அத்தகைய துர்ப்பாக்கியத்துக்கு இலக்கு ஆகாமல் தப்பியது ஆச்சரியம் அல்லவா? சிறிய தேசமாக இருந்தும் சுதந்திரத்தை இழந்து அன்னியர்களிடம் இதுவரையில் அடிமைப் படாமல் தந்திரமாகத் தப்பிய ஆசியா நாடு தாய்லந்து ஒன்றுதான்.

இன்றுகூட சயாம் தேசத்தைச் சுற்றி நாலாபுறத்திலும் கொந்தளிப்பு அடங்கவில்லை. சீனா, பர்மா, இந்தோ சீனா, மலேயா இந்த நாடுகளில் கலகங்களும் உள்நாட்டு யுத்தங்களும் கோரமாக நடந்து வருகின்றன. அத்தகைய உற்பாதங்கள் சயாம் தேசத்தில் ஏற்படாதது சயாமியர்களின் அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும். எனவே பாலைவனத்தின் நடுவே சயாம் ஒரு பூஞ்சோலையாக இருந்து வருகிறது என்று சயாம் நாட்டின் பிரதம மந்திரி வர்ணித்திருப்பது மிகப் பொருத்தமானதே.

பர்மா, இந்தோனேஷ்யா, மலேயா நாடுகளைக் காட்டிலும் சயாம் இந்தியாவுடன் பல்லாண்டு பல்லாண்டாக அதிகத் தொடர்பு கொண்டிருந்தது என்பதற்குச் சரித்திர ஆராய்ச்சி எதுவும் தேவையில்லை. சயாமிலுள்ள கோவில்களும் சயாமியர்களின் பெயர்களும் பழக்க வழக்கங்களுமே அதற்கு யாரும் மறுக்க முடியாதபடி நிரந்தரமான சாட்சியங்கள் ஆகும்.

சயாமியர்களின் பெயர்கள் பெரும்பாலும் சம்ஸ்கிருதப் பெயர்கள் என்பதுடன், சயாம் மன்னரின் பெயரும் வாழையடி வாழையாக முதலாவது ராமர், இரண்டாவது ராமர், மூன்றாவது ராமர் என்று வழங்கப்பட்டு வருகிறது.

சென்ற மே மாதம் பட்டத்துக்கு வந்த இருபத்திரண்டு வயதுள்ள சயாம் மன்னர் பூமிபாலு ஒன்பதாவது ராமர் என்று அழைக்கப்படுகிறார். இவருக்கு முன் சயாம் மன்னராக இருந்த வஜ்ராயுதா,

பிரஜாதிபா, ஆனந்தா முதலியோரின் பெயர்களே அவர்கள் இந்தியாவுடனும் இந்திய கலாசாரத்துடனும் நெருங்கிய தொடர்பு உடையவர்கள் என்பதைக் காட்டப் போதுமானவை.

★

சியாம் தேசம் 1351-ம் வருஷத்துக்கு முன் எந்த நிலையில் இருந்தது என்பது பற்றிச் சரித்திராசிரியர்கள் எதுவுமே குறிப்பிடவில்லை. அந்த ஆண்டிலேதான் அயோத்தியா என்ற நகரம் சயாம் தேசத்தின் தலைநகராக நிர்ணயிக்கப்பட்டது.

பதினைந்தாம் நூற்றாண்டில் போர்ச்சுகீய வர்த்தகர்கள் சயாமுக்கு வந்த பிறகுதான் அந்த நாட்டைப் பற்றி மேல்நாட்டினர் அறியலாயினர். பிறகு பதினாறுவது நூற்றாண்டிலிருந்துதான் நெதர்லண்ட்ஸ், இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய வெளி நாடுகளுடன் சயாம் வர்த்தக சம்பந்தத்தை ஏற்படுத்திக் கொள்ளத் தொடங்கியது.

பதினாறுவது, பதினேழாவது நூற்றாண்டுகளில் சயாமியர்கள் தங்களுடைய சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்காக சயாம் எல்லையை அடுத்துள்ள மலைவாசிகளை எதிர்த்துப் போரிட நேர்ந்தது. 1767-ம் வருஷத்தில் பர்மியர்கள் சயாம் தலைநகரான அயோத்தியாவைக் கைப்பற்றிக் கொண்டார்கள். பிறகு சில வருஷங்கள் வரையில் சயாமில் குழப்பமும் கொந்தளிப்பும் தாண்டவமாடின.

எனினும் 1782-ம் வருஷம் சக்ரி என்பவர் சயாம் நாட்டை ஆட்சி புரியத் தொடங்கியதிலிருந்து அந்த நாட்டில் அமைதி நிலவியது. சயாமை ஆண்ட முதலாவது ராமர் அவர்தான். அவரது பரம்பரையிலேயே இன்று வரையில் தொடர்ந்து அந்த நாட்டை ஆட்சி புரிந்து வருகிறார்கள்.

★

சியாம் மேல்நாடுகள் பலவற்றுடனும் வர்த்தகத்தொடர்புகொண்டு அவைகளுக்குச் சலுகைகள் காட்டியும்கூட ஐரோப்பிய நாடுகளின் பேராசை தணியவில்லை. பல ஆசியா நாடுகளையும் அடிமைப்படுத்தி ஆதிக்கம் செலுத்தி ருசிகண்ட அந்நாடுகள் சயாமையும் தங்களுடைய ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவர எத்தனையோ சூழ்ச்சிகள் செய்தன. சயாம் துறைமுகங்களை முற்றுகையிட்டு பிரான்ஸ் பல பிரதேசங்களைக் கைப்பற்றிக் கொண்டது. பிரிட்டனும் சயாமுடன் உடன்படிக்கை செய்து கொண்டு சயாமைச் சேர்ந்த பதினையாயிரம் சதுர மைல்கள் விஸ்தீரணம் உள்ள பிரதேசங்களைத் தன் வசமாக்கிக் கொண்டது. எனினும் சயாம் மற்ற ஆசியா நாடுகளைப் போல் தன் சுதந்திரத்தை முற்றிலும் இழந்துவிடவில்லை.

முதலாவது மகா யுத்தத்தின்போது சயாம் நேச தேசங்களின் கட்சியில் சேர்ந்து ஜெர்மனிமீதும் ஆஸ்திரியாமீதும் யுத்தப் பிரகடனம் செய்ததால், சயாம் நாட்டின் உதவிக்கு வெகுமதியாக ஐரோப்பிய நாடுகள் சயாமில் தங்களுக்கு இருந்த விசேஷ உரிமைகளை விட்டுக் கொடுக்கத் தீர்மானித்தன. எனவே அந்த நாடு இழந்த பிரதேசங்களை மறுபடியும் பெற்றது.

1932-ல் பிரஜாதிபா மன்னர் தலைமையிலே சயாமில் பார்லிமெண்டரி சர்க்கார் அமைக்கப்பட்டது. அதிலிருந்து அத்தேசம் பல தொழில் துறைகளிலும் மிகவும் அபிவிருத்தி அடைய ஆரம்பித்தது.

அப்படியிருக்க மூன்று வருஷங்களுக்குப் பின் 1935-ல் சயாமிலே அதிசயமான சம்பவம் ஒன்று நிகழ்ந்தது.

எந்த நாட்டிலும் மன்னர் சர்வாதிகாரம் செலுத்த விரும்புகிறார் என்றே தலைவர்கள் புகார் கூற முற்படுவார்கள். உண்மையும் அப்படித்தான் இருக்கும். ஆனால் தலைவர்கள் ஜனங்களிடம் சர்க்கார் நிர்வாகத்தை ஒப்புவிக்க விரும்பவில்லை என்று சயாம் மன்னர் பிரஜாதிபா தலைவர்கள் மீது புகார் கூறியதுடன், அவர்களுடைய



சயாமியர் குடும்பம் வழக்கமாகச் சாப்பிடும் காட்சி.




செய்கையைக் கண்டித்துச் சிம்மாசனத்தையும் துறந்தார்!

அவருக்குப் பிறகு அவரது நெருங்கிய உறவினரான ஆனந்த மஹிதல் சயாம் மன்னர் பட்டத்துக்கு வந்தார்.

1940-ம் வருஷம் இரண்டாவது மகா யுத்தத்தில் பிரான்ஸ் ஜெர்மனியிடம் தோல்வியுற்றதும், பிரஞ்சு இந்தோ சீனுவைச் சேர்ந்த சில பிரதேசங்களைத் தன்னிடம் ஒப்புவித்துவிட வேண்டும் என்று சயாம் வற்புறுத்தியது. அந்தக் கோரிக்கைக்கு இணங்க பிரான்ஸ் மறுத்துவிடவே, சயாம் துருப்புகள் பலாத்காரமாகப் பிரவேசித்து அந்தப் பிரதேசங்களை ஆக்கிரமித்துக் கொண்டன.

1941-ம் வருஷம் சயாம் ஜப்பானுடன் ஒப்பந்தம் செய்துகொண்டு பிரிட்டன் மீதும் அமெரிக்கா மீதும் யுத்தப் பிரகடனம் செய்தது. அப்போது சயாமுக்கு வெகுமதியாக ஜப்பான் சர்க்கார் மலாய் நாட்டையும் பர்மாவையும் சேர்ந்த சில பிரதேசங்களைக் கொடுத்தனர்.

சயாம் வெளிப்பார்வைக்கு ஜப்பானுடன் ஒப்பந்தம் செய்து கொண்டதெனினும், இரகசியமாக நேச தேசங்களுக்கு ஆதரவாகவும் ஜப்பானுக்கு விரோதமாகவும் இருந்து வந்தது. நேச தேசங்களின் ஒற்றர்கள் சயாமியர்களின் உதவியால் சயாமில் பிரவேசித்து ஜப்பானுக்கு விரோதமாக வேலை செய்யலாயினர்.

இரண்டாவது மகாயுத்தம் முடிந்த பின் சயாம் தனக்குச் சொந்தமாக இருந்த பிரதேசங்களை மீண்டும் தன்னிடமே ஒப்புவிக்க வேண்டும் என்று கோரியது. ஆனால் அந்தக் கோரிக்கைக்கு இணங்க ஐக்கிய நாடுகள் சபை மறுத்துவிட்டது. எனினும் நாலு வருஷங்களுக்கு முன் சயாமும் பிரான்சும் இந்தோ சீனு எல்லை சம்பந்தப்பட்ட மட்டில் பல தகராறுகளையும் சமரசமாகத் தீர்த்துக் கொண்டன.

• • •

இரண்டு லட்சம் சதுர மைல்களுக்கு மேல் உள்ள சயாமில் சுமார் இரண்டு கோடி ஜனங்கள் வசிக்கிறார்கள். சயாமியர்கள் உருவத்தில் சற்றேறக் குறைய சீனர்களைப் போல் காணப்பட்டாலும் பண்பாட்டிலும் பழக்க வழக்கங்களிலும் முற்றிலும் இந்தியர்களைப் போலவே இருந்து வருகிறார்கள்.

தென் கிழக்கு ஆசியாவிலுள்ள மற்ற நாடுகளில் இருப்பது போல் சயாமிலும் ஏராளமான சீனர்கள் வந்து குடியேறியதால், அங்கு சீனர்களின் தொகை பத்து லட்சம் என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

தாய்லந்து என்றால் சுதந்திர பூமி என்று அர்த்தம். எனவே அந்தப் பெயரையே சயாமியர்கள் மிகப் பெருமையுடன் சொல்லிக் கொள்கிறார்கள்.

சயாமில் நவரத்னங்கள், ஈயம், தங்கம், துத்தநாகம், நிலக்கரி முதலியன உற்பத்தியாகும் சுரங்கங்கள் இருக்கின்றன. இவைகளும் பரந்த விஸ்தீரணம் உள்ள காடுகளும் சயாமின் செல்வச் செழுமைக்கு உற்ற சாதனங்களாக இருக்கின்றன.

சயாம் நாட்டைச் சேர்ந்த பெரும்பாலோர் விவசாயத்தையே ஜீவனமாகக் கொண்டிருக்கிறார்கள். அங்கு உற்பத்தியாகும் பொருள்களில் அரிசி முதல் ஸ்தானமும் ரப்பர் இரண்டாவது ஸ்தானமும் வகிக்கின்றன. இவற்றைத் தவிர புகையிலை, சோளம், காப்பி, மிளகு, பருத்தி முதலியனவும் அங்கு உற்பத்தியாகின்றன.

சயாமில் உள்ள ஒரு விசேஷம் ஆயிரக் கணக்கான யானைகள் வேலை செய்வது தான். தொழிலாளர்களைப் போல் அவை மரங்களை தூக்கிக்கொண்டு செல்லவும் அடுக்கவும் ஏற்றுமதி செய்யவும் உபயோகமாக இருந்து வருகின்றன.

சயாம் வருஷந்தோறும் பல கோடிக் கணக்கான ரூபாய்க்குத் தேக்கு மரங்களை ஏற்றுமதி செய்வதால், லட்சக் கணக்கான தொழிலாளர்கள் செய்யவேண்டிய வேலையை ஆயிரக்கணக்கான யானைகள் செய்து முடித்து விடுகின்றன. எனவே அவை சம்பந்தப்பட்ட மட்டில் சயாமில் சம்பளத் தகராறு, 'ஸ்டிரைக்' போன்ற பிரச்னைகள் எழுவதற்கு இடமில்லை!

க்ருஷன்

படுக்கையின்றும் எழுவதும், திரும்பவும் படுப்பதுமாகவே இரண்டு மாதங்கள் வாழ்வு மிகுந்த தொல்லையாயிருந்தது. ஒரு முறை கீல் வாத்தின் தாக்குதலை முறியடிக்குமுன் இன்னொரு முறையும் தாக்கப்பட்டுப் படுக்கையில் கிடத்தப் பட்டான். வலியோடுகூட, கால் விரயத்தின் பயனாகத் தொழிற்சாலையினின்றும் கிடைத்த ஊதியம் குடும்பத்தின் ஊண், உடைக்கும் போதாததால் ஏற்பட்ட கவலையும் சேர்ந்து கொண்டது. இதனால் மிகுந்த மனத்தளர்ச்சியுற்றுப் பின்னர் சில நாட்களுக்குக் க்ருஷன் உட்கொண்டான் ...

**கீல் வாதத்தால் அடிக்கடி ஏற்படும் குத்து வலி, கடைச்சல் முதலியவற்றை ஒரேயடியாக நிறுத்தும் வழி, அவற்றின் மூலகாரணத்தை "க்ருஷ"னுக் தாக்குவதுதான்.**

**மூத்திரத்திலுள்ள அதிகப்படி அமிலங்களை க்ருஷன் இயற்கையாகவே மூத்திரக் காய்களின் மூலம் வெளித் தள்ளுகிறது. பின்னர் க்ருஷனிலுள்ள ஆறு வித இயற்கை உப்புக்கள் மேலும் வேலை செய்து மூத்திரக் காய்கள், குடல்கள், ஈரல்கள் இவற்றை நன்கு இயங்குமாறு தூண்டுகின்றன. சீக்கிரமே ஒரு புத்துணர்ச்சியைப் பெறுகிறீர்கள். ஆனந்தகரமான ஆரோக்யம் மறுபடியும் உங்களுக்குக் கிடைக்கிறது. உங்களது கெமிஸ்டுகளிடமும் கடைக்காரர்களிடமும் கிடைக்கும். க்ருஷனின் விலை ரூ. 1-10-0 இன்றே க்ருஷன் வாங்குங்கள்.**

"க்ருஷன்" ஈ. க்ரிபித்ஸ், ஹ்யூஸ், லோ., லிட். (மாஞ்செஸ்டர், இங்கிலாந்து) அவர்களால் தயாரிக்கப்பட்டு கார் டீ கம்பெனி, லிட்., (பம்பாய், மதராஸ் கல்கத்தா.) அவர்களால் விநியோகிக்கப் படுகின்றன.

Kruschen
KRUSCHEN SALTS

# நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119. Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

# கோதையின் கேள்வி

**எஸ். ஆறுமுகம்**

அந்தக் கேள்வி திரும்பத் திரும்பக் காவேரியின் இதய அடிவாரத்தில் எதிரொலித்துக் கொண்டிருந்தது. அப்படிப்பட்ட கேள்வியை அச்சமயம் அவள் எதிர்பார்க்கவில்லை. ஆனால் என்றோ ஒரு நாள், அதாவது விவரம் புரிந்த உணர்வின் தூண்டுதலால் அத்தகைய வினா ஒன்று தன் குழந்தை வாயினின்றும் வெளிக்கிளம்பும் என்று நினைத்தது மட்டும் உண்மை. கடைசியில் குழந்தை சற்றும் எதிர்பாராத சமயத்தில் அதைக் கேட்டு விட்டாள்.

மத்தியானம் வேலை முடிந்ததும், கடு சோறு வடித்தாள். வடித்தவுடன் 'கடச் கட்' தட்டில் பிசைந்து மகளுக்கு ஊட்ட உட்கார்ந்தாள் காவேரி. குழந்தையின் மனம் எங்கு அலைந்ததோ? பிடித்த சோற்றுக் கவனத்தை உண்ணக்கூட நினைவின்றி, எடுத்த எடுப்பிலேயே அந்தக் கேள்வியைக் கேட்டது:

"அம்மா, கோடி வீட்டு மணிக்கு நிதமும் அவன் அப்பா ரொட்டி, மிட்டாய் எல்லாம் வாங்கிவந்து கொடுக்கிறாரே! எனக்கு மட்டும் அப்படி வாங்கித்தர அப்பாவைக் காணோமே. எங்கே என் அப்பா? ஊ...ம்......சொல்லு..."

அவள் திடுக்கிட்டாள். பச்சைக் குழந்தைக்கு என்ன சமாதானம் சொல்ல இருக்கிறது? உள்ளெழுந்த சலனத்தை அடக்கிக் கொண்டாள்.

"கோதை, நீ என் கண்ணில்லையா? அப்பா பணம் சம்பாதிக்கப் போயிருக்கிறார். வந்ததும் பொம்மை, பலூன், ரொட்டி எல்லாம் வாங்கி வருவாங்க. எங்கே சோற்றைச் சாப்பிடு" என்று 'தாஜா' செய்தவாறு மகளுக்குச் சோற்றை ஊட்டினாள்.

சம்பாதிக்கவா அவள் கணவன் போயிருக்கிறான்?

அவள் நெஞ்சம் எதிர்க் கேள்வி கேட்டது. பொய்யைக் கற்பித்து, குழந்தை உள்ளத்தை ஏமாற்றி விட்டதை எண்ணி வருந்துவதைத் தவிர அவளுக்கு வேறு மார்க்கம் புலப்படவில்லை. காவேரியின் கண்கள் கலங்கின.

"தெய்வமே! ஒன்றும் தெரியாத மகளுக்கு நான் என்ன பதில் சொல்லுவேன்? எங்கள் கலி தீர மச்சான் விடுதலை கிடைத்துச் சீக்கிரம் வந்துவிடுமா? மாரியாத்தா! கட்டாயம் மாவிளக்குப் போடுறேன், தாயே......" என்றெல்லாம் வேண்டிக் கொண்டாள்.

★

உள்ளமும் உள்ளமும் பேசிக்கொண்டதின் பேரில், நாலுபேர் அறியக் காவேரியின் கழுத்தில் தாலியைக் கட்டினான் மாணிக்கம். வாழ்க்கை சுகமுடன் நடந்தது; ஏழ்மையில் இன்பம்! முள் ரோஜாவிலிருந்துதானே உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் சுகந்த மணம் எழுகின்றது!

காலச்சக்கரம் சுழன்றது. காவேரியும் மாணிக்கமும் ஆக இருந்த குடும்பத்தில் மூன்றாம் நபர் ஒன்றும் அங்கீகாரம் பெற்றது. கோதையின் ஜனனம் தம்பதிகள் வயிற்றில் பால் வார்த்தது. என்றாலும் அடுத்த வருஷமே அப்படிப்பட்ட எதிர்பாராத வினவு நேரிடுமென்று யாரும் நினைக்கவில்லை.

மூன்று பேர்களுக்கு வகை சொல்லி நாளை ஓட்ட வேண்டியது மாணிக்கத்தின் பொறுப்பல்லவா? அதற்காகவே அம்முயற்சியிலும் ஈடுபட்டான். அங்கிருந்து பதினைந்து மைல் தொலைவிலிருந்து ரகசியமாக அரிசி வாங்கிச் சுமந்து லாபத்திற்கு விற்று ஜீவனம் நடத்தினர் சிலர். அவர்களில் மாணிக்கமும் ஒருவன். விடியற்காலையில் 'துட்டு வட்டி'க்குக் கிடைத்த ரொக்கத்துடன் புறப்படும் அவன், மீண்டும் வீடு வரும் சமயம் இருட்டிப் போகும். பத்து, பன்னிரண்டு ரூபாய்க்கு அரிசி வாங்குவான். வீடு வந்ததும் அரிசி பூராவும் காலியாகிவிடும். கண் முன்னாலேயே லாபம் மூன்று, நான்கு ரூபாய் சர்வ நிச்சயம் கிடைக்கும். ஆக இந்தத் தொழில் பட்டப்பகலில் 'கறுப்பு மார்க்கட்' முத்திரையுடன் நடந்தது.

காற்று என்றென்றும் ஒரே திக்கில் தான் வீசும் என்பது என்ன நிச்சயம்?

அப்பொழுது ரேஷன் ரொம்பவும் 'கெடுபிடி'யாக இருந்தது. அன்று வழக்கம் போல அரிசி மூட்டையைச் சுமக்க முடியாமல் சுமந்து வருகையில், எதிரே சைக்கிளில் வந்து நின்ற ரேஷன் அதிகாரியைக் கண்ட மாணிக்கத்திற்கு ரத்தம் முழுதும் அப்படியே உறைந்து விட்டது போன்ற பிரமை எழுந்தது. அவருடன் வந்திறங்கிய அந்தச் செட்டியாரைக்



காவேரிக்குச் சோறு கண்ட இடம் சொர்க்கலோக மாகி விட்டது. அவளது கஷ்ட நிலையைக் கேள்விப்பட்டு மனம் இளகிய ரேஷன் கடைச் செட்டியாரின் மனைவி, அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துக் கை கொடுத்து உதவினள். "காவேரி, எங்க வீட்டுச் செட்டியார் செய்தது செய்து விட்டார். அதை மன சிலே இனியும் வச்சுக்காதே. என்னமோ நடந்தது நடந்து போச்சு. உன் புருஷன் விடுதலை கிடைத்து வெளியே வந்ததும் நம்ம செட்டியாரையே ஒரு வழி பண்ணித் தரச் சொல்லுகிறேன். உன் மச்சான் வரமட்டும் இங்கேயே சாப்பிட்டுக் கிட்டு இரு" என்று அந்த அம்மாள் வேண்டிக் கொண்டாள்.

இந்த வரவேற்பைக் கண்டு காவேரி பிரமித்தாள். அவள் உள்ளமும் மலர்ந்தது. ஆம்; விஷம் தோன்றிய பாற் கடலில்தானே அமிர்தமும் தோன்றியது!

கண்டதும், மாணிக்கத்துக்கு விஷயம் விளங்கிவிட்டது. செட்டியாருக்கு அவன் மீது பல நாளாக ஒரு 'கண்' உண்டு. அவர்தான் அவ்வூர் ரேஷன் கடைக்காரர். பின்னர் கேட்பானேன்? ரகசியமாக அரிசி வியாபாரம் நடப்பது பற்றிய 'துப்பு' அவர் வாயிலாக அதிகாரிகளுக்கு எட்டியது. அதன் பலன் மாணிக்கத்தின் தலையில் விடிந்தது.

மாணிக்கம் செய்த கள்ள வியாபாரம் நிரூபிக்கப்பட்டது. அதன் பலனாக அவனுக்கு ஒரு வருஷம் சிறைத் தண்டனை கிடைத்தது. கையுங் களவுமாக அவன் பிடிபட்ட தருணம், அந்தச் செட்டியாரைப் பார்த்தான். அப்பார்வையில்தான் எவ்வளவு கொடூரம், ஏக்கம், சஞ்சலம் பிரதிபலித்தது!

கணவன் கைதியாகிய 'சேதி' அறிந்து புலம்பினள் காவேரி. கைக் குழந்தையுடன் எப்படிக் காலந்தள்ள முடியுமோ என்று எண்ணிப் பார்த்த அவளுக்கு ஆத்திரம் பொங்கியது; அழுகை பீறிட்டது. அன்றைக்குத் தன் 'மச்சான்' அகப்பட்டுக் கொள்ள ஏதுவாக விருந்த செட்டியாரை நிந்தித்தாள் அவள்.

மகளின் இன்பச் சிரிப்பில்--கிள்ளை மொழியில் -- விளையாட்டில் புருஷனின் பிரிவைத் தேற்றிக் கொண்டாள் காவேரி. 'வயிற்றைக் கட்டி, வாயைக் கட்டி' காலத்தை விரட்டி விடப் பார்த்தாள். எனினும் முடிகிறதா, என்ன? வீடுகளில் கைவேலை செய்து பிழைக்கலானள்.

★

"காவேரி, உனக்குச் சேதி தெரியுமா? நம்ம நாடு குடியரசானதுக்காகச் சாதாரணக் கைதிகளை யெல்லாம் விடுதலை செய்யப் போகிருங்களாம் நம்ம சர்க்காரிலே. பேப்பரிலே போட்டிருக்குதுன்னு செட்டியார் சொன்னர். நிச்சயம் உன் புருஷனும் இன்னிக்கு, நாளைக்கு வந்துடலாம்" என்று செட்டியாரின் மனைவி சொல்லக் கேட்டதிலிருந்து காவேரிக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. தன் கணவனுக்கு விடுதலை கிட்டும் நாளை ஆவலுடன் எதிர்பார்த்திருந்த அவளுக்கு அச் செய்தி ஆனந்தத்தை ஊட்டிற்று.

சூரியன் அஸ்தமித்து இருள் எங்கும் படர்ந்தது.

சமையலறையில் செட்டியார் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அவர் மனைவி உணவு படைத்தாள். வெளியே குழந்தையின் அரவணைப்பில் காவேரி தன்னை மறந்திருந்தாள்.

அப்பொழுது கதவைப் 'படபட'வென்று தட்டும் சத்தம் கேட்டது. காவேரி குழந்தையை அணைத்தவாறு ஓடிக் கதவைத் திறந்தாள். திறந்த வழியினூடே "எங்கே அந்தச் செட்டி?" என்ற ஆவேசக் குரல் எதிரொலித்துப் பரவியது.

மெல்லத் தலையை உயர்த்திப் பார்த்தான்; குடல் நடுக்கமெடுத்தது. அங்கே பைத்தியம் பிடித்தவன்போல, கோபக் கனல் பறக்கக் கைகளைப் பிசைந்துகொண்டு நின்றிருந்தான் மாணிக்கம். அதே சமயம் அந்த அம்மாள், செட்டியார் மனைவி கூறிய 'ஜோஸியம்' நினைவுக்கு வந்தது அவனுக்கு.

"யாரு, காவேரியா?"

"ஆமாங்க மச்சான்."

"உனக்கு இந்த இரக்கமற்ற பாவி வீட்டிலே என்ன வேலை?" என்றான் மாணிக்கம். அவன் கேள்வியில் சோகம் பொதிந்தது.

"மச்சான், சத்தம் போடாதீங்க. செட்டியாரு பெண்சாதி மகாலட்சுமி போல. அவங்க இல்லாவிடில் நானும் பிள்ளையும் செத்த இடங்கூட இந்நேரம் புல் முளைச்சுப் போயிருக்குமே! உங்களைப் பிடித்துக் கொண்டு போனதிலிருந்து கால் வயிற்றுப் பாட்டுக்குக் கூடத் திண்டாடிப் போய்விட்டேன். என்னமோ, நல்ல காலம் அந்த அம்மாவுக்குச் சேதி தெரிந்து என்னை அழைத்துப் போய் இதுவரை காப்பாற்றினாங்க" என்று சொன்ன தன் மனைவியின் வார்த்தைகளைக் கேட்ட மாணிக்கம் சிலையாகிப் போனான்.

"நிஜமாவா, காவேரி? செட்டியாரு என்னை வேண்டுமென்று காட்டிக் கொடுத்து விட்டார் என்கிற கோபத்திலே அவர் மேலே பழி வாங்கணும் என்று நானே எண்ணிக் கொண்டல்லவா இருந்தேன். தேசத்திலே அரிசிச் சோறு எல்லோருக்கும் பகிர்ந்து கொடுக்கணும் என்று சொல்லறப்போ நான் இந்த மாதிரி கள்ள வியாபாரம் பண்ணியதும் தப்புத்தான். ஆனாலும் இத்தனை நாள் வேறு ராஜாங்கம் நடந்தது; ஆனால் இன்றையிலிருந்து நம்ம ராஜாங்கம்; இனி உண்மையாக நடந்து, உடல் உழைத்துச் சம்பாதித்துச் சாப்பிடணும். இப்படி விரதமெடுத்துக்குவோம். ஆனால் இன்றைக்கு உன்னைக் காணாவிட்டால் என்ன தீவினை நேர்ந்திருக்குமோ? காவேரி, அந்தப் புண்ணியவதி மாங்கல்யத்துக்கு உலை வைக்க நினைத்து வந்த நான் எப்படி அவங்க முகத்திலே விழிப்பேன். ஊஹூம்; மாட்டேன். நான் முதலில் வீட்டுக்குப் போகிறேன்" என்றான் மாணிக்கம் உணர்ச்சியுடன்.

கண்களில் வரம்பு கட்டியிருந்த கண்ணீரை விலக்கிவிட்டு, தன் மகனை வாங்கி முத்தமிட்டான் மாணிக்கம். அடுத்த நிமிஷம் புறப்பட்டான். 'மச்சா'னின் மாற்றத்தைக் கண்டு வாயடைத்துப் போனான் காவேரி.











# வட்ட மேஜை

## ★ ரேடியோ நிகழ்ச்சிகள்

நமது ரேடியோ நிலைய நிகழ்ச்சிகளைப் பற்றிச் சமீப காலத்தில் அநேக புகார்கள் வெளிவந்துள்ளன. ஆனால் அந்தப் புகார்களைக் குறித்து நிலைய அதிகாரிகள் ஏதாவது கவனம் செலுத்தினார்களா என்பதுதான் விளங்கவில்லை. அவர்கள் கூறுவதோ "பொது மக்களுடைய வேண்டுகோள்படிதான் அநேகமாக எங்களது நிலைய நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்கிறோம்" என்பதே. இப்படிக் கூறுவது மிக்க சௌகரியமான ஒரு சாக்குப் போக்கு என்று நினைக்கக் கூட இடம் தருகிறது. "மோசமான இந்தப் பாடகருக்கு அடிக்கடி 'சான்ஸ்' கொடுக்கிறீர்களே, நல்ல உயர்தர பாடகர்களுக்கு மட்டும் ஏன் அப்படி அடிக்கடி 'சான்ஸ்' கொடுக்கக் கூடாது!" என்று கேட்டால், அவர்களது பதில், "மோசமாயிருக்கலாம் அந்தப் பாட்டு. ஆனால் அதை வேண்டி அநேக கடிதங்கள் எங்களுக்கு வருகின்றன. ஆகையால் அந்தப் பாடகருக்கு அடிக்கடி நாங்கள் 'சான்ஸ்' கொடுக்கத்தான் வேண்டியிருக்கிறது" என்பதுதான். அத்தகைய கடிதங்கள் தூண்டப்பட்டவைகளாக இருக்கலாம், அல்லது பாரபக்ஷத்தால் எழுதப்பட்டவைகளாயிருக்கலாம் என்பதை அவர்கள் கவனிப்பதில்லை போலும். மானமுள்ள உயர்ந்த ரக பாடகர்கள், தங்களுக்கு ரேடியோவில் 'சான்ஸ்' கிடைக்க வேண்டுமென்பதற்காக மற்றவர்களைப் போல, தங்களைப் புகழ்ந்து கடிதங்கள் ரேடியோ அதிகாரிகளுக்கு அனுப்பப்பட வேண்டுமென்ற எண்ணம் கொள்வதே இல்லை. அப்படி நினைப்பதே அவமானமான காரியம் என்றே எண்ணுவார்கள். சமீபத்தில் கமாராக நன்றாகப் பாடும் ஒரு வித்வானைச் சந்திக்க நேர்ந்தது. அநேக இடங்களில் அடிக்கடி கச்சேரி செய்யப்பட்டவர். கொஞ்ச காலமாக ரேடியோவில் அவருடைய பாட்டு இல்லாமலே இருந்தது. சமீபத்தில்தான் ஒரு முழுநேரக் கச்சேரி அவருக்குக் கொடுத்திருந்தார்கள். இதைப் பற்றி நான் அவரைக் கேட்டபோது, அவர் சொன்னதாவது: "அதை ஏன் கேட்கிறீர்கள்! நான் விசாரித்ததில் என்னுடைய கச்சேரியை விரும்பி நிருபர்கள் ரேடியோ நிலையத்திற்குக் கடிதங்கள் வராததால் எனக்குத் தக்க சான்ஸ் கொடுக்கவில்லை என்று அறிந்தேன். இதற்காக நான் யார் யாரைப் போய்ப் பார்த்துக் கடிதம் எழுதும்படியாக வேண்டுவது! எனக்கு அது அவமானமாக இருந்தது; அதனால் சும்மா இருந்து விட்டேன். சமீபத்தில் எனக்குத் தெரிந்த ஒரு பெரிய உத்தியோகஸ்தரிடம் இதைப் பற்றிப் பேச நேர்ந்த போது அவர் ஆச்சரியப்பட்டார். 'நான் எழுதுகிறேன், எனது நண்பர்களையும் கொண்டு எழுதச் சொல்கிறேன்' என்று சொன்னார். அவர் எழுதவும் எழுதினார். எனக்கு உடனே சான்ஸும் கிடைத்தது!"

ஆனால் அப்படிப் பொது ஜனங்களிடமிருந்து வரும் கடிதங்களிலுள்ள அபிப்பிராயப்படித்தான் எப்போதும் பாடகர்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள் என்று சொல்லவும் முடியாது.

ரேடியோ நிலையங்கள் சர்க்காருடைய ஸ்தாபனங்கள். அவர்களுக்கு அநேக கடமைகள் உண்டு. நல்ல விஷயங்களையும், அறிவை வளர்க்கும் நிகழ்ச்சிகளையும், உலக நிகழ்ச்சிகளைப் பற்றிய உண்மையான அறிக்கைகளையும், ஜனங்களுடைய கலை புணர்ச்சி தெளிவடைந்து மலரும்படியான சங்கீதம் முதலிய நிகழ்ச்சிகளையும் ஏற்பாடு செய்வது முதற் கடமை. கொஞ்ச காலமாக ரேடியோவில் நாம் கேட்டு வரும் சங்கீதத்தினால் இசையுலகிற்கு எவ்வளவு தீங்கு விளையக்கூடும் என்பதைப் பற்றி, பத்திரிகைகளில் பல கடிதங்கள் வந்துள்ளன. கீழ்த்தரமான சாஸ்திர விரோதமான சங்கீதம் காதில் விழுந்து கொண்டே இருந்தால் நமது மக்களுடைய கலை புணர்ச்சி எப்படிக் குலைந்து போகுமென்பது நான் கூறவேண்டியதில்லை. ஏதோ சில கடிதங்கள் (பெரும்பாலும் தூண்டப்பட்டவைகள்) வருகின்றன என்பதற்காகத் தங்கள் கடமையை மறக்கலாகாது. ரேடியோ நிலையத்தில் சங்கீதத்தின் தராதரம் அறிந்த சிலராவது இருப்பார்கள் என்று எண்ணுகிறேன். அவர்களும் தங்கள் கடமையைக் கைவிட வேண்டுமா!

'ரிக்கார்டு' சங்கீதம் வர வர அதிகமாகிக் கொண்டு வருகிறது. அதிலும் ஸினிமாப் பாட்டுகள்தான் பெரும்பாலும். இக்காலத்து ஸினிமாப் பாட்டுக்களை—என்ன சொல்வது! நாதப் பிரம்மமாய் விளங்கும் இறைவன்தான் காப்பாற்ற வேண்டும். பலவித நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்கிறார்கள்; எல்லாத் தரங்களும் ரகங்களும் கலந்திருக்கின்றன. ஆனால் பெரும்பாலும் கீழ்த்தரங்கள்தான் அதிகமாக இருக்கின்றன. சில ரேடியோ நாடகங்கள் ருசியற்று 'சப்'பென்றிருக்கின்றன. சில விசேஷத் தயாரிப்புகளும் இதே ரகம்தான். ஏன், அடிக்கடி கதா காலக்ஷேபங்கள் ஏற்பாடு பண்ணக்கூடாது! எப்போதாவது அத்திபூத்தது போல் ஒரு கதாப் பிரசங்கம் வருகிறது; அதுவும் முதல்தரமென்று சொல்வதற்கில்லை. காலக்ஷேபம் என்பது எவ்வளவு உயர்ந்த கலை என்பதை ரேடியோ நிலையத்தார் உணரவில்லையா! நல்ல நெறிகளையும், உயர்ந்த நோக்கங்களையும் எடுத்துக்காட்டி ஜனங்களுடைய உள்ளத்தைப் பரிசுத்தப் படுத்தும் திறமுள்ள இந்தக் கலை யிடத்தில் நமது ரேடியோ அதிகாரிகள் ஏன் நிராதரவு காட்டுகிறார்களோ தெரியவில்லை. இந்த மாதிரிக் காரியங்களில் தங்கள் கடமையை நிறைவேற்ற அவர்களுக்கு இயலவில்லை போலும்!

மயிலாப்பூர்
26—8—50 ரா. ராஜம்

○●○

## உண்மை போட்டி வேண்டும்!

ஒருவர் குறிப்பிட்ட வியாபாரம் ஆரம்பித்து, அது சிறப்பாக நடக்க ஆரம்பித்தால் உடனே அதே போல் பலர் அவ்வியாபாரத்தை

ஆரம்பித்து நடத்தி வருகின்றனர். போட்டி ஏற்பட்டுப் பெரும் கஷ்டம் அடைகின்றனர். பெரும் பாலும் முதலில் ஆரம்பித்தவரின் பொருள்களுக்கே மதிப்பும் தேவையும் ஏற்படு கின்றன. இந் நிலையில் பணபலம் படைத்தவர் அப்போட்டியைச் சமாளித்து மற்றவர்கள் தங்கள் கடையைக் கட்ட வேண்டிய அவசியத் திற்குக் கொண்டு வரப்படுகின்றனர். இத் தகைய போட்டி மனப்பான்மை இருப்பது நாட்டிற்கு நன்மை தருமா? அமெரிக்கா, பிரிட்டன் முதலிய பிற நாடுகளின் வியாபாரத் துறையைக் கவனித்துப் பார்த்தால் இந்தப் போட்டி மனப் பான்மை மிகுந்திருப்பது தெளி வாகத் தெரியும்.

ஆனால் நம் நாட்டிற்கும் ஏனைய முற்போக்கு நாடுகளுக்கும் ஒரு பெரிய வித்தியாசம் உண்டு. அதாவது மேலை நாடுகளில் ஒரு வியாபாரத் திற்குக் கிராக்கி இருக்கிறதென்று தோன்றினால் அதை ஆரம்பிக்கிறவர்கள் ஒருவர் செய்வதைப் போல் மற்றவர் செய்வதில்லை. ஒவ்வொருவரும் தங்களுக்கென ஒரு தனிச்சிறப்பை ஏற்படுத்திக் கொள்ளுகின்றனர். வாசனை சோப் ஒருவர் செய்தால் வைத்திய சோப் ஒருவரும், சந்தன சோப் ஒருவர் செய்தால் மல்லிகை சோப் ஒரு வரும் செய்கின்றனர். மேலும் மேலும் அத் தொழில் முன்னேறப் பற்பல ஆராய்ச்சிக் கூடங்களை ஏற்படுத்திப் பலவகைப் புதுமை களை உண்டு பண்ணி வருகின்றனர். எனவே வாணிபத் துறையில் அவர்கள் சொல்ல முடி யாத அளவுக்கு முன்னேறி வருகின்றனர். ஆனால் நம் நாட்டில் விலையைக் குறைவாகக் கொடுப்பதற்காகப் பொருள்களின் தரத்தைக் குறைக்கின்றனர். எனவே நம் வாணிபம் பின் செல்லுகிறது என்றால் மிகையாகாது.

நம் நாட்டில் ஒருவர் செய்வதைப் போல் மற்றவர் 'லேபின்' அடையாளம் முதற்கொண்டு காப்பி அடிப்பதால் வாணிபம் சீர்குலைந்து கெட்டுப் போகிறது.

கோவை
8—8—50

என். நஞ்சப்பா

○●○

## சோதனையா அல்லது வேதனையா?

கடந்த மார்ச்சு மாதம் சென்னை மாகா ணத்தில் நடைபெற்ற எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் கேள்வித் தாள்களைப் பார்த்து 63,000-க்கு மேற்பட்ட சிறுவர்களின் மனம் புழுவாய்த் துடித்ததுபோல், இன்று இலங்கை யிலும் பத்தாயிரத்துக்கு மேற்பட்ட இளம் மாணவர்களின் மனம் தத்தளிக்க ஒரு எஸ். எஸ்.ஸி. பரீட்சையே காரணமாய் இருக்கிறது. கடந்த ஒருவாரமாக நடைபெற்றுக் கொண் டிருக்கும் இப்பரீட்சையிலே கணித வினாப் பத்திர மொன்றிற்கு மாணவர்கள் விடை எழுத வேண்டி யிருந்தது. வினாப் பத்திரத்தை ஆவ லோடு வாங்கிய மாணவர்களின் முகங்கள் எல்லாம் ஒரு சில நிமிஷங்களில் வினாக் கெண்ணெய் சாப்பிட்டவர்களின் முகங்கள் போல் மாறிவிட்டன. மூன்று மணி நேரமாக இவ்வினாப் பத்திரத்தோடு பதினாயிரத்துக்கு மேற்பட்ட மாணவர்கள் போரிட்டும் கடைசி யில் போரிலே தோல்வியுற்றுப் புறமுதுகு காட்டிய யுத்த வீரர்கள்போல் அசடு வழியப் பரீட்சை ஹாலினின்றும் வெளியே வந்த பரி தாபக் காட்சியைக் காண யார்தான் சகிப்பார்! மாணவர்களுக்கு இலகுவாகப் புரிந்து கொள்ள முடியாத தமிழிலே ஆங்கிலத்தினின்று தமிழ்ப் படுத்தியிருப்பது முதல் குற்றம். பாதிக்கு மேற்பட்ட வினாக்களின் விடைகள் பின்ன ரூபத்தில் (அதுவும் நீண்ட பின்ன ரூபத்தில்) கொடுக்கப்பட்டிருப்பது இரண்டாவது குற்றம். இவற்றால் மாணவர்களின் மனம் சுக்கு நூறாகத் தகர்ந்து போகிறது. இப்படி யாகக் குற்றங்களை அடுக்கிக்கொண்டு போனால் பெருகி விடும். இவ்வினாப் பத்திரத்தை மொழி பெயர்த்த அல்லது தயாரித்த அதிகாரிகள் மாணவர்களைப் பரீட்சிப்பதற்காகவா அல்லது தங்கள் வல்லமையைக் காட்டுவதற்காகவா இவ்விதம் செய்தார்கள் என்பதுதான் விளங்க வில்லை. கல்வி விதிகளின்படி ஒரு பரீட்சையில் ஏறக்குறைய பாதிக்கு மேற்பட்ட மாணவர்க ளாவது சித்திபெறக்கூடிய புள்ளிகள் பெற வேண்டும். ஆனால் 90 சத விகிதத்துக்கு மேற் பட்ட பிள்ளைகள், கொடுக்கப்பட்டிருந்த பதி னொரு வினாக்களில் மூன்றுக்குக்கூடச் சரியான விடைகள் போடவில்லை என்றால், இப் பரீட்சை முறையைப்பற்றி என்ன கூறுவது!

இலங்கை
25—8—50

''மூனுதானு'

○●○

## சமைத்துப் பாருங்கள்!

தென் இந்தியாவில் உணவு தானியங்கள் கிடையாமையால் ஜனங்கள் கஷ்டப்படுவதைக் கேட்டு வடநாட்டுத் தமிழர்களாகிய நாங்கள் மிகவும் வருத்தப் படுகிறோம். அரிசி ரேஷன் குறைந்து போனதினால் யாதொரு இல்லும் அடையத் தேவையில்லை. ஒரு அளவு அரிசிக்கு இரண்டு அளவு கோதுமை லாப்ஸி (ஒன்று இரண்டாக உடைத்த கோதுமை தானியம்)



"நாதா! உங்கள் அளவில்லாப் பிரேமை என்னை எங்கேயோ ஆகாயத் தில் தூக்கிக் கொண்டு போகிறதே!"




"சட், என்ன பத்திரிகைக் காரர்கள் இவர்கள்! என்ன கதை எழுதி அனுப்பினாலும் திருப்பித் திருப்பி அனுப்பிக் கொண்டே இருக்கிறார்களே!"

"ஒன்று செய்யுங்களேன். இனி மேல் தபால் தலை வைக்காமல் அனுப்பிப் பாருங்களேன்!"

---

சேர்த்து நன்றாகக் கொதிக்க விடவும். அரிசியும் கோதுமையும் ஒரே சமயத்தில் வெந்து சாத மாகும். சாதமும் சாப்பிடுவதற்கு நன்றாக இருக்கும். இரண்டொரு நாள் பழக்க மானால், பின் இதையே பிரியப்படுவீர்கள். இரண்டு மாதங்கள் இது மாதிரி சாப்பிட்டு வந்தால், தங்கள் உடம்பு தேறி யிருப்பதையும் காண் பீர்கள். தென்னிந்தியக் குடும்பங்கள் வட இந்தியாவில் இதையே பழக்கமாக்கிக் கொண் டிருக்கிறார்கள். இப்படிச் செய்தால் நமது உணவுப்பழக்கத்தைச் சிறிது மாற்றிக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்ட நேருஜி யின் வாக்கின்படி நடந்து கொண்ட மனச் சந்தோஷமும், உணவுப் பஞ்ச காலத்தில் தேசத்தின் நன்மையின் பொருட்டு நடந்து கொண்ட ஆத்ம திருப்தியும் நமக்கு ஏற்படும்.

பம்பாய்
24—8—50 எச். எஸ். ராமநாதன்

○●○

## ★ தமிழர் குறை

எனது தமிழ் நாட்டுப் பிரயாணத்தில் ஏற்பட்ட அனுபவங்களைப் பற்றித் தங்க ளுக்குப் பிடித்தாலும் சரி, பிடிக்காவிட்டா லும் சரி சொல்லத்தான் போகிறேன்.

1950-ம் ஆண்டில், அணுகுண்டையும் ஹைட் ரஜன் குண்டையும் வைத்துக் கொண்டு மனித சமூகத்தை ஆட்டி வைக்கும் நாகரிகம் மிகுந்த இந்நாளில் தமிழர் பெரும்பாலோரின் நிலைமை 'சுத்த மோச'மாகத்தான் இருக் கிறது. பிறரிடம் பழகும் விதம், நாகரிக மனப்பான்மை, ஆடையணியும் விதம் முதலி யவைகள் கல்வியினால்தான் ஏற்படுகிறது என்பது நிச்சயம். நம் தமிழ் ஜனங்களுக்கு இவை தவிரப் பாக்கி எல்லா மிருக்கிறது.

பெண்கள்கூட எவ்வளவு மோசமாக நடந்து கொள்கின்றனர். சதா வெற்றிலையைக் குதப்பு வதும் கொஞ்சம்கூட அடக்கமின்றிச் சளபள வென்று வம்பு பேசுவதும் பிசாசு போலக் கத்துவதும் அவர்கள் வழக்கமாகி விட்டது. சிலர் பொடி போடுவதைக் கூடப் பார்த்தேன்.

தெய்வீகத் தமிழைப் பெற இவர்கள் கொஞ் சமும் லாயக்கற்றவர்கள் என்று தோன்றியது. ரயிலில் நடந்த அநேக ரசமான சம்பவங்களில் ஒரு ரசமான சம்பவத்தைப்பற்றிக் கூறு கிறேன். பக்கத்தில் அமர்ந்திருந்த ஒருவர் மீது, ஒரு ஸ்திரீயின் குழந்தை அசுத்தம் செய்து விட்டது. இதைக் கவனித்ததும் அவர் பேசா மல் இருக்க 'என்னம்மா குழந்தையைக் கொஞ் சம் கவனிக்கக் கூடாதோ! இப்படி அஜாக் கிரதையாக விட்டு விட்டாயே!' என்று சற்றுக் கடிந்து கொண்டார். உடனே அவள் காளி ஸ்வரூபம் எடுத்து விட்டாள். சினிமாவில் வருவதுபோலப் புடவைத் தலைப்பை எடுத்துச் செருகிக்கொண்டு, கையை ஓங்கிக் கொண்டு அவரை அடிக்கவே வந்து விட்டாள். 'உனக்குக் குழந்தை குட்டிகள் இல்லையா, சாமி! நீ மனு ஷனு, மாடா, இப்படிப் பேசறே!' என்றெல் லாம் தொண்டை கிழியக் கத்த ஆரம்பித்து விட்டாள். நாங்கள் என்ன முயன்றும் அவளைச் சமாதானம் செய்ய முடியவில்லை. கடைசியில் டிக்கெட் கலெக்டர் வந்து, "ஏ, பிள்ளே! வாயை மூடுறியா, வெளியே பிடிச்சுத் தள்ளட் டுமா!" என்று மிரட்டின பிறகுதான் அடங் கினாள். எங்கள் மலையாள நாட்டிலும் மரி யாதையற்ற பெண்பிள்ளைகள் இருக்கின்றனர். ஆனால் ஆண் பிள்ளைகளையே அடிக்க வரும் பெண்களைப் பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை.

ஆடைகளின் விஷயத்தைப் பற்றியோ கேட் கவே வேண்டாம். திருவிதாங்கூரில் எங்கு பார்த்தாலும் வெள்ளையாடையையும் நவநாக ரிகமான உடைகளையும் அணிந்து வருபவர் களைப் பார்த்துப் பழகினவர்களுக்கு, நம் தமிழ் நாட்டுப் பழுப்பு நிற ஆடை கண்களுக்கு 'மகத்தான' விருந்துதான்! ஸூட், ஹாட் டுடன் எல்லாரும் காட்சியளிக்க முடியாது. ஆனாலும் அணியும் ஆடையைத் தூய வெண் மையாகக் கட்டினால் என்ன! தமிழ் நாட்டில் ஆடை விஷயங்களில் சிலர் அளவுக்கு அதிகம் முன்னேறி இருக்கின்றனர். பலர் குமார ரகத்தைக்கூட அடைந்த பாடில்லை. தமிழ் நாட்டுப் பணக்காரர்கள் செல்வத்தைப் புதைத் துக்கூட வைப்பார்கள். அழகிய ஆடைகள் அணியவோ, காரில் சவாரி செய்யவோ, ஒரு ரேடியோ வாங்கவோ, படிப்பிற்குக்கூடச் செல விடவோ மனம் வராது. மலையாளிகள் 'வெள்ளை முண்டு உடுத்துபவர்கள்' என்று பரிகாசத் திற்கு ஆளாகியிருந்தாலும்கூட, மேற்சொன்ன விஷயங்களில் பெரும்பான்மையோர் முன்னேறி யிருக்கின்றனர். சாதாரண ரெயில்வே தொழி லாளிகூட மலையாளம் பத்திரிகையாவது படித்து 'பாலிடிக்ஸ்' பற்றிச் சர்ச்சை செய்

யாமல் இருக்க மாட்டான். ரெயிலில் பிரயாணம் செய்தபோது வாசிக்கத் தெரியாதவர்கள் என்னை, "இது என்ன பேசறுங்க! என்ன பேசறுங்க!" என்று நச்சரித்துவிட்டார்கள். வேறு எந்தப் பாஷைக்காரனாவது இப்படிக் கேட்டிருந்தால் பொருட்படுத்த மாட்டோம். ஆனால் தமிழர்களே தமிழ் அக்ஷரம்கூட வாசிக்கத் தெரியாமல் இருப்பதைச் சகிக்க முடியுமா!

அது போகட்டும்; இன்னொரு முக்கியமான விஷயம் நான் சொல்ல விரும்புவது. நம் தமிழ் நாட்டுக் கோவில்களைப் பற்றித்தான். கோவில்களை வைத்துக் கொண்டிருக்கும் முறையைப் பற்றி யாரும் ஆக்ஷேபித்துக் கூறாதது ஆச்சரியந்தான். பாண்டிய நாட்டு மக்களுக்குக் கடவுளிடமாவது மரியாதை உணர்ச்சி யிருக்கும் என்று நினைத்தேன்; அதுவும் இல்லை.

பிரசித்தி பெற்ற கோயில்களில் ஆங்காங்கே சூழ்ந்து வரும் புகைப் படலங்களைச் சாம்பிராணிப் புகை என்று நான் இனி ஏமாற மாட்டேன். பகவானுக்குப் பீடி, சிகரெட் புகைகள் தலைவேதனையை உண்டு பண்ணுமா என்று சோதனை செய்து உறுதி யடைந்தவர்கள் விடும் புகைதான் அது.

தமிழ் மக்களுக்குத்தான் எவ்வளவு யுக்தி யுணர்ச்சி! அவர்களை விட்டால் கடவுளிடம் அவ்வளவு உரிமையுணர்ச்சி யாருக்கு வரும்! இந்த உணர்ச்சியில்லா விட்டால் கோவில் நமது வீடு என்று எண்ணிச் சுதந்திரமாக இருக்கமுடியுமா! ஒவ்வொரு திருவிழாச் சமயங்களிலும் நமது தமிழர்கள் கோயில் வைத்துக் கொண்டிருக்கும் விதத்திற்கு ஒரு 'டிப்ளோமா' கொடுக்கவேண்டும்! சாப்பிட்டு எச்சிலிலையைக் கடவுள் மீது வீசி எறியாமலிருக்கின்றார்களே, அது வரையில் பெரிய காரியந்தான்! நான் சிறுவனாக இருக்கையில் ஒரு சமயம் 'சங்கரன் கோயில்' போகவேண்டி யிருந்தது. அது சமயம் அங்கே திருவிழா. கோயில் முழுவதும் ஏகக் கூட்டம். 'கூட்டம்' என்றால் மனிதக் கூட்டம் மட்டுந்தான் என்று நினைத்து விடாதீர்கள். அந்த மனிதக் கூட்டங்கள் சாப்பிட்டு வீசின இலைக்கூட்டங்களும், சுவைத்து விட்டு வீசின கரும்புச் சக்கைக் கூட்டங்களும் ஒரு கணக்கில் அடங்காது.

வேறொரு சமயம் நெல்லையப்பர் கோவிலுக்கு நானும் என் தம்பியும் போயிருந்தோம். போயிருந்தோம் என்றால் போய் அகப்பட்டுக் கொண்டோம். சுற்றுப் பிரகாரம் முழுவதும் மையிருட்டு. ஆங்காங்கே மங்கலாக ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. எங்களுக்கோ பயம் பிடித்து விட்டது. பாக்கெட்டில் நூறு ரூபாய் நோட்டுக்கள்; கையில் தங்கச் செயினுள்ள ரிஸ்ட் வாட்ச். எவனாவது 'பிக் பாக்கெட்' செய்தால், நெல்லையப்பர் பார்க்காத பாவத்தில் இருந்துவிடுவாரே என்று வந்து விட்டோம். இதைப் பற்றி நாங்கள் குறிப்பிட்டு விசாரித்ததில், யாரும் வியப்படையவில்லை. 'எங்கள் ஊரிலெல்லாம் திருவிழாக் காலந்தான் விசேஷம்; அப்பொழுதுதான் பிராகாரங்களில் விளக்குகள் போடுவார்கள்' என்றனர்.

பூசாரிகள் பூஜைக்குத் தயார் செய்யும் விதமோ வெகு விசித்திரம். இதய பூர்வமாகப் பூஜை செய்வதாகவே தெரியவில்லை. தீபாராதனை சமயத்தில் எட்டுத் திக்குகளிலும் சாமான்களுக்காக ஓட்டம் பிடிக்கின்றனர்.

ஒரு தமிழனாக இருக்கும் தமிழர்களை இவ்வளவு பழித்தெழுதி யிருக்கிறானே என்று நினைத்துக் கொள்வீர்கள். எனக்கு மலையாளிகளிடம் பற்றோ, தமிழர்களிடம் வெறுப்போ கிடையாது. மலையாளிகளிடம் காணும் குற்றங்கள் எவ்வளவோ இருக்கின்றன. ஆனால் நமக்கு அதைப் பற்றி அக்கறையில்லை. தமிழர்களிடம் ஏற்படும் அன்பு அவர்கள் குறைகளை அதிக உரிமை உணர்ச்சியுடன் கண்டிக்கத் தோன்றுகிறது.

திருவனந்தபுரம்
27—8—50 "கல்கி" அன்பன்

○●○

## சாதிக் கொடுமை

திருச்சிக்கு மேற்கேயும், முசிறிக்குக் கிழக்கேயும் நடுவில் அமைந்துள்ள குணசீலப் பெருமாள் எழுந்தருளியிருக்கும் குணசீலத்தில், ஒரு மடக் கடையில் எனது சொந்தக்காரச் சிறுவன் நுழைந்து சாப்பிட்டதன் காரணமாக அக்கடைக்காரனும் அவனது சகாக்களும் அவனுடைய ஆடைகளைக் கழற்றச் செய்து, கட்டி வைத்து அடித்து விட்டார்கள். அதைக் கேள்விப்பட்டு அப் பையனை விடுவிக்கச் சென்ற என்னையும், மற்றிருவர்களையும் நடு ரஸ்தாவில் தள்ளி நையப் புடைத்து விட்டார்கள். அந்தப் பையனுக்குக் கொடுத்த தண்டனை போதாது என்று கருதியே அவனுடைய உறவினர்களான எங்களையும் இந்த அவமானத்திற் குள்ளாக்கினார்கள். என்ன கொடுமை! எவ்வளவு சாதி அகம்பாவம்!

நடந்த சம்பவத்தை முன்சீப் இடத்தில் கூறினால் அவர் அவகாசம் இல்லை யென்று போய் விடுகிறார். மறுநாள் எழுத்து மூலமாகவும், நேரடியாகவும் போலீஸ் அதிகாரிக்குத் தெரிவித்திருந்தும், யாதொரு நடவடிக்கையும் எடுக்காமல் காலம் தாழ்த்திக்கொண்டு வருகிறார். எந்தப் பக்கத்திலும் ஆதரவு இல்லையென்றால் ஆம் மக்களின் கதி என்னவாகிறது!

ஏமனூர்
7—8—50 ம. இலட்சுமணன்

○●○

## மலர் வேண்டும்!

'கல்கி' தீபாவளி மலர் இரண்டு வருஷமாக வெளி வராமல், இப்போது இந்த வருஷ தீபாவளிக்கு வருவதைக் கேட்டுப் பூரிப்பு அடைந்திருக்கிறேன். அதிலும் எனக்குப் பிடித்தமான பாப்பா மலர் கதை, படம் போட்டு அச்சடிக்க வேண்டுமென்று கல்கி மாமாவை கேட்டுக் கொள்கிறேன். இந்தக் 'கல்கி' 10-வது ஆண்டிலாவது 'தீபாவளி மலர்' அச்சிடத் தயாராய் வருவதை அறிந்து நாங்கள் எல்லோரும் சந்தோஷமாக இருக்கிறோம். நான் இன்று முதல் உண்டியில் போட்டு ரூபாய் சேர்த்து வருகிறேன், தீபாவளி மலர் வாங்க.

அருவிக்காடு
11—8—50 கமலம்

★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ ரேடியோ நிகழ்ச்சிகள் என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ ரா. ராஜுத்துக்கும், தமிழ் குறை என்ற கடிதம் எழுதிய 'கல்கி' அன்பனுக்கும் ரூ. 12—8—0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

# கல்கி





KALKI செப்டம்பர் 10, 1950

4 அணா

REGD. No. M. 4392

அதிக மலர்ச்சியைத்தருவது—

ஹிமாலயா புக்கே

டாய்லட் பௌடரின்

குளுமையான பரிமளம்

பரிமளம் நிறைந்த ஹிமாலயா புக்கே எல்லா
விதத்திலும் சிறந்த டாய்லட் பௌடர்.
அது பட்டுப்போல் மிருதுவானதும் நேர்த்
தியானதுங்கூட. வேர்வையை உறிஞ்
சுகிறது. சருமத்திற்கு ஆறுதலும்
சுகமும் அளிக்கின்றது. அன்றியும்
அதன் நீடித்து நிற்கும் இனிய
பரிமளம் உங்களை நாள்முழு
வதும் குளுமையுடனும்
மலர்ச்சியுடனும் இருக்
கச்செய்கிறது.




இன்னுமொரு நேர்த்தியான இராஸ்மிக் தயாரிப்பு

HBT. 3-378-55 TM